'அந்த
அதிகரித்த
வெண்மை
எங்கிருந்து
வருகிறது?'




# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள். உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.





டினோபால் இப்பொழுது ஸீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது. ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய் கிறது– சிறிதும் வீணாவதில்லை, உபயோகிக்கச் சுலபமானது, தொந்தரவற்றது.




டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ் ஏ.பால், ஸ்விட்ஸர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்.
சுஹ்ரித் கெய்கி லிட், த.பெ. 965, பம்பாய் 1 பிஆர்.

Shilpi SG 223 A Tam




# கல்கி

பராபவ, ஐப்பசி 14 ★ அக்டோபர் 30






**நினைவுத் திரையில்**

சத்தியபுரி. அறையைப் பூட்ட வேண்டும் என்று ஹோட்டல் முதலாளியிடம் பூட்டு கேட்டேன். "சத்தியபுரியில் அறையைப் பூட்ட வேண்டிய அவசியம் இல்லை" என்று பதில் வந்தது....கடைத் தெருவுக்கு வந்ததும் வண்டிக் காரனிடம் ஐந்தணா கொடுத்தேன். "பெரியது நாலணாதா னுங்க" என்று ஓரணாவைத் திருப்பிக் கொடுத்து விட்டான்.... இங்கு வக்கீலோ, கோர்ட்டோ ஜோஸியரோ இல்லை. ஏன் கோயிலே இல்லை! சத்தியபுரியில் கோயில் எதற்கு?....

"எல்லாம் சொன்னீரே இந்த சத்தியபுரி எங்கே இருக்கிறது?" என்று கேட்கலாம். எங்கேயும் இல்லை; நான் சொன்னது அத்தனையும் பொய்! - கந்தா

கல்கி, ஜூலை 7, 1946



யுனைடெட் கமர்ஷியல் பாங்கின் ரீஜினல் மானேஜர் திரு எம். கருணாகரன் அவர்களின் புதல்வி

டாக்டர் மஞ்சுளா எம். பி. பி. எஸ். அவர்களுக்கும்

சென்னை ஆடிட்டர் ஸ்ரீ பி. பக்தவத்சலு நாயுடு அவர்களின் புதல்வர்

திரு பி. சுரேந்தர் பி. காம்., ஸி. ஏ. அவர்களுக்கும்

சமீபத்தில் சென்னை ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. சென்னை நகரப் பிரமுகர்களும் நண்பர்களும் உறவினர்களும் முகூர்த்தத்துக்கும் மாலையில் நடைபெற்ற வரவேற்புக்கும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். மாலை வரவேற்பின் போது ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. வாழ்க, மணமக்கள்!

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



மலர் 26 இதழ் 13



# தேவையற்ற மசோதா

இப்போதெல்லாம் ஆண்டுதோறும் ஆயிரக் கணக்கான மாணவர்கள் சர்வ கலாசாலைப் பரீட்சைகளிலும், எஸ். எஸ். எல். சி. பரீட்சைகளிலும் தேர்வு பெறுமல் நிற்பதைப் பார்க்கிறோம்.

ஒருமுறை கல்லூரியில் படித்துத் தோல்வியுற்ற மாணவர்களை மீண்டும் கல்லூரிகளில் சேர்ப்பதில்லை. இவர்களுக்கெல்லாம் புகலிடமாக விளங்கிப் பின்னுல் பரீட்சைகளில் தேர்ச்சி பெற உதவி வருவது டுட்டோரியல் கல்லூரிகள்தான்.

இப்போது அந்தக் கல்லூரிகளை நடத்த முடியாத அளவுக்குக் கடும் மசோதா ஒன்று நமது ராஜ்யத்தில் வந்துள்ளது. மசோதாவில் உள்ள நிபந்தனைகளைப் படித்துப் பார்த்தால், இந்த டுட்டோரியல் கல்லூரிகளை நடத்துபவர்களைப் பெரும் குற்றம் புரிந்துவிட்ட குற்றவாளிகளாகத்தான் சர்க்கார் கருதுகிறது என்று நினைக்கத் தோன்றுகிறது.

டுட்டோரியல் கல்லூரியினர் அனுமதிக்காக 5000 ரூபாய் சர்க்காரிடம் ஜாமீன் கட்டி வைக்க வேண்டுமாம்.

இந்தக் கல்லூரிகளின் கணக்குகளைப் பரிசோதிக்க அரசாங்கத் தணிக்கையாளர் அனுப்பப்படுவாராம். அவர் தணிக்கை செய்த விவரத்தையும் முடிவையும் கல்லூரி முதல்வருக்குக் கூடத் தெரியப்படுத்தாமல் நேரே அரசாங்கத்துக்குத்தான் தெரியப்படுத்துவாராம்!

அவர் குற்றம் சாட்டி ஏதாவது எழுத, அதன்மீது சர்க்கார் ஏதாகிலும் நடவடிக்கை எடுத்தால் அதை எதிர்த்துப் போராட, தனது நியாயத்தை எடுத்துரைக்க எந்த நீதி மன்றத்துக்கும் போகும் உரிமையும் இந்த டுட்டோரியல் கல்லூரிகளுக்கு மறுக்கப்பட்டுள்ளது.

ஆண்டுதோறும் தேர்வு பெறுத மாணவர்கள் பலர் மனமுறிந்து என்ன செய்வது என்று திகைத்துப் போகிறார்கள். அவர்களுக்கெல்லாம் ஓர் அபயம் அளித்து, நசித்துப் போகும் வாழ்வு மலர வழியுண்டு என்று ஆறுதல் கூறி மாணவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் மகத்தான தொண்டு செய்து வருகிறார்கள் டுட்டோரியல் நிர்வாகிகள்.

அவர்கள் சர்க்காரிடம் கட்டிட கிராண்ட் கேட்பதில்லை, லாபரட்டிரி கிராண்ட் கேட்பதில்லை. வேறு எவ்வித உதவியும் நாடுவதில்லை. அதற்கு மாருக நல்ல வருமானம் வந்தால் வருமான வரி மூலமும் மற்ற வரிகள் மூலமாகவும் சர்க்காருக்கும் — நகரசபைகளுக்கும் பணம் தருகிறார்கள்.

இத்தகைய கல்லூரிகளை நடத்த விடாமல் செய்வதுதான் சர்க்காரின் குறிக்கோள் என்றால், கல்லூரிகளில் சேர்த்துக் கொள்ளப்படும் மாணவ மாணவிகள் நூற்றுக்கு நூறு பங்கு அல்லது தொண்ணூறு பங்கு தேறுவதற்குத் தக்க வசதியும் கல்வி போதனைத் தரமும் கொடுத்துவிட்டுப் பிறகு டுட்டோரியல் கல்லூரிகளின் தலையில் கைவைக்க முன் வருவது நல்லது.

இந்த மசோதா வந்ததற்குக் காரணம் மத்திய கல்வி மந்திரி சாக்ளா ராஜ்ய சர்க்கார்களுக்கு இப்படியொரு மசோதா கொண்டுவரும்படி யோசனை தெரிவித்தாராம். அவர் அப்படிச் சொன்னதன் நோக்கம் தேசத்தில் வேறு எங்கோ சில போலிக் கல்லூரிகள் ஏதோ பட்டம் வழங்குவதாகச் சொல்லி, அப்பட்டங்கள் சர்வகலாசாலைகள் வழங்கும் பட்டங்களுக்குச் சமம் என்றும் கூறி ஏமாற்றி வருகின்றனவாம். இவற்றைத் தடுப்பதற்காக இப்படி ஒரு மசோதா கொண்டு வரவேண்டும் என்றார் சாக்ளா.

நம் ராஜ்யத்தில், டுட்டோரியல் கல்லூரிகள் சர்க்கார் நடத்தும் பரீட்சைகளுக்கும் பல்கலைக் கழகங்கள் நடத்தும் பரீட்சைகளுக்கும்தான் மாணவர்களைத் தயார் செய்து அனுப்புகின்றனவே தவிர வேறு போலிப் பட்டங்களை வழங்கி ஏமாற்றுவதில்லை.

எந்த ராஜ்யங்களில் ஸ்ரீ சாக்ளா கூறிய மோசடி நடக்கிறதோ, அந்த

ராஜ்ய சர்க்கார்கள் எந்த வித மசோதாவை யும் கொண்டு வந்திருப்பதாகத் தெரியவில்லை. ஒரு பிரச்னையுமில்லாத நமது ராஜ்யத்தில் தான் இந்த மசோதா முதன் முதலில் வெளியிடப் பட்டிருக்கிறது!

மேலும் கல்வி விஷயம் ராஜ்ய அரசாங்கத் தைப் பொறுத்த விஷயம். மத்திய அரசாங்க மந்திரி ஏதோ ஒரு யோசனை போல் கூறப் போக அதனை உடனே தலைமேல் போட்டுக் கொண்டு நிறைவேற்றி வைக்க முனைவது நமது ராஜ்ய சர்க்காரின் அடிமைப் புத்தி யைத்தான் காட்டுகிறது!

கடைசியாக ஒரு வார்த்தை கூற விரும்பு கிறோம். வட நாட்டில் தொடர்ந்து கல்லூரி களிலும் பல்கலைக் கழகங்களிலும் நடை பெற்று வரும் கலாட்டாக்களுக்குக் காரணம் மாணவ சமுதாயத்தில் இன்று ஏற்பட்டுள்ள வெறிச்சோடிய தன்மை! எதிர்காலம் சூனிய மாகத் தோன்றுவதால் மாணவர்களுக்கு எதிலும் பற்றுதலில்லாமல் போய்விட்டது என்கிறார்கள். நல்ல வேளையாகத் தமிழ் நாட்டில் மாணவ சமுதாயம் இத்தகைய நிலைக்கு இழிந்து போகாமல் தன்னைக் காத்துக் கொண்டு வருகின்றது!

அரச பீடத்தில் இருப்பவர்கள் எந்தக் காரியம் செய்யும்போதும் கால தேச வர்த்த மானம் என்னும் நிலைகளை உணர்ந்து செய்ய வேண்டும். இவற்றில் எதுவுமே இம்மசோதா வுக்குச் சாதகமாக இல்லாதிருக்கும்போது, இந்த அவசியமற்ற மசோதாவைக் கைவிடு வதுதான் உத்தமம்.

# தில்லியில் திரிமூர்த்திகள்

சென்ற வாரம் தில்லியில் மூன்று தேசத் தலைவர்கள் சந்தித்துக் கருத்துப் பரிமாறிக் கொண்டுள்ளனர்.

ஜவாஹர்லால் நேரு தொடங்கி வைத்த சாங்கியத்தைத் தொடர்ந்து இப்போதும் நடத்தி வருகிறது இந்திய அரசாங்கம்.

ஜவாஹர்லால் நேருவின் காலத்தில் பேசப்பட்ட கூட்டுச் சேராக் கொள்கை எகிப்து அதிபர் நாசருக்கும், யூகோஸ் லேவிய அதிபர் டிட்டோவுக்கும் இன்றும் நல்ல பலன் உள்ள கொள்கையாக இருக் கின்றன. அந்நாடுகள் நம் நாட்டைப்போல் அப்படியொன்றும் பயங்கர எதிரிகளால் சூழப்பட்டிருக்கவில்லை.

ஆனால் நமது நிலையோ முற்றிலும் மாறு பட்ட நிலை. ஜவாஹர்லால்ஜி இருந்த போதே சீனு இந்தியாவின் மீது படை யெடுத்து இந்தியாவின் வெளி நாட்டுக் கொள்கையையும், கூட்டுச் சேராக் கொள் கையையும் செல்லாக் காசாக்கி விட்டது. சீனு வட எல்லையில் ஆக்கிரமித்து நமது மண் ணில் கணிசமான பகுதியைக் கபளீகரம் செய்து கொண்டிருப்பதோடு எந்த நிமிஷமும் இந்தியாமீது மீண்டும் படையெடுக்கக் கூடிய ஆயத்தத்துடன் இருப்பதாகச் சொல்லப்படு கிறது. அதனால் வட எல்லையில் நிரந்தர அபாயம் இருந்து வருகிறது.

அத்துடன் சீனு — பாகிஸ்தான் புதிய நட்புறவு வேறு நமது சிந்தனையைப் புதிய நோக்கில் தூண்டுகிறது.

சீனு அணுகுண்டு வெடித்ததிலிருந்து மேலும் நாம் புதிய உறுதியான நட்புறவுகளைத் தேடிக் கொள்ளவேண்டிய நிலைமையில் இருக் கிறோம். சீனுவின் அணுகுண்டு சோதனை, ஜப்பான், பிலிப்பைன்ஸ், மலேசியா, இந்தோனிசியா முதலிய நாடுகளில் புதிய சிந்தனையை உருவாக்கியுள்ளது. இதையெல் லாம் உணர்ந்து காலா காலத்தில் நமது நட்புறவுகளை நல்லபடியாக வளர்த்து, உறுதி செய்து கொள்ள வேண்டி யிருக்கிறது. இந் நிலையில் பழைய பல்லவியையே பாடிக் கொண்டு இருந்து விட்டால் போதாது.

யுத்தம் முடிந்த புதிதில் ஐரோப்பிய நாடுகள் ஒன்று சேர்ந்து, பொது மார்க்கெட் (ஈ. வி. எம்.) என்று ஓர் உடன்படிக்கை செய்து கொண்டன. அப்போது பிரிட்டன் இந்தப் புது வியாபார சிநேக உடன்படிக் கையை அலட்சியம் செய்து தனியாக இருந்தது! அந்த ஆறு நாடுகள் இன்று பொருளாதாரத் துறையில் மிகவும் முன் னேறிவிட்டன! இப்போது பிரிட்டன் சேரத் துடிக்கிறது. ஆனால் அந்நாடுகள் நாசூக்காக இல்லாத தடைகள் எல்லாம் எழுப்பி ஒதுக்கி வருகின்றன! முதலில் சேர்ந்திருந்தால் இந்தக் கதி நேர்ந்திரா தல்லவா! முதலில் ஆணவமாக நடந்து கொண்டதன் பலனை பிரிட்டன் அனுபவிக் கிறது.

இந்த உண்மை பொருளாதார உடன் படிக்கைக்கு மட்டுமல்ல, ராணுவப் பாது காப்பு உடன்படிக்கைகளுக்கும் பொருந்தும்.

கிழக்காசிய நாடுகள்; ஜனநாயகத்தில் பற் றுள்ள நாடுகள்; சீனுவின் ஆக்கிரமிப்பு வெறியை எதிர்க்கும் நாடுகள்—ஜப்பான் தொடங்கி நியூசிலந்து வரையுள்ள நாடுகள்— ஒன்று சேரத் துடிக்கின்றன. இப்போது நாம் அதை உணராமல் அலட்சியப் படுத்தி விட்டோமானால் பின்னால் நாம் ஆசிய நாடுகளில் ஒதுக்கப்பட்ட நாடாகி விடுவோம். காந்தி மகான் இருந்த காலத்தில் ஆசிய நாடுகள் இந்தியாவையே தமக்குத் தலைமை வகிக்கத் தகுந்த நாடு என்று கருதின. இப்போது நமது அலட்சிய புத்தி யினால் வாளாவிருந்து, ஆசிய நாடுகளால் நாம் ஒதுக்கப்பட வேண்டிய நாடு என்ற நிலைக்கு வந்து விடலாகாது.

அதனால் பிதுரார்ஜிதச் சொத்தாக ஜவா ஹர்லால் நேரு வைத்துவிட்டுச் சென்றுள்ள நாஸர் — டிட்டோ நட்புறவைப் பேணிப் போற்றிப் பாதுகாப்போம்! அத்துடன் அண்டை ஆசிய நாடுகளின் நட்பையும் தீவிரமாக நாடி வளர்த்து உறுதியாக நிற் போம். இதுதான் ராஜ தந்திரமும், அறி வுடைய செயலுமாகும்.

# ஐ. நா. வுக்கு அஞ்சலி

இருபத்தொரு ஆண்டுகளுக்கு முன் இப்போதுள்ள ஐ. நா. ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது. இதற்குமுன் தோன்றிய உலக ஸ்தாபனம் தனித் தனி நாடுகளின் மோதல்களினாலும் தேசிய உணர்ச்சி வேகத்தினாலும் சிதறிப் போய்ச் செத்து விட்டது. உலகப் போரின் கொடூரங்களைக் கண்ணுற்று வெதும்பிய உலகப் பெரியோர்கள் எப்படியாயினும் உலகச் சமாதானத்தை நிலை நாட்டப் போர்முறைகளை ஒழித்துப் பேச்சு வார்த்தைகள் மூலம்தான் வழி காண வேண்டும் என்ற மனோதிடத்துடன் ஐ. நாவை ஸ்தாபித்தனர். ஆரம்பத்தில் 54 நாடுகள் மட்டுமே இதில் சேர்ந்திருந்தன. அப்போது இருந்த நிலைமையில் உலக நாடுகளில் பெரும்பாலானவை இதில் அடங்கியிருந்தன. பிற்காலத்தில் 'காலனி' ஆட்சி முறையின் கீழிருந்த பல நாடுகள் படிப்படியாகச் சுதந்திரம் பெற்று, ஐ. நா.வில் சேர்ந்துவிடவே இப்போது அதன் அங்கநாடுகளின் எண்ணிக்கை நூற்றி இருபத்தொன்றுக்கு உயர்ந்து விட்டது.

இந்த இருபது ஆண்டுகளில் ஐ. நா. ஆற்றியுள்ள பணிகள் மிகவும் சிறந்த பணிகளாகும். உலகில் போரை அறவே ஒழித்துவிட அதனால் இன்னமும் முடியவில்லை என்றாலும் பல சமயங்களில் உலகில் பல பகுதிகளில் போர் ஏற்படாமல் தடுத்து நிறுத்தியுள்ளது. சூயெஸ், சிரியா, பாலஸ்தீனம் போன்ற உதாரணங்களை இங்கே நினைவுகூரலாம். காஷ்மீர் போர் நிறுத்த எல்லையைக் கூடுமான வரை பாதுகாத்து வந்தது. வியட்நாம் விவகாரத்தில் சுமுகமான முடிவு காண முடியவில்லை. ஆனால் அது இன்னமும் முயற்சி செய்து கொண்டுதான் வருகிறது.

உலகில் அமைதியைக் காக்கும் பணி ஒருபுறம் நடந்து வருவதுடன் உலக மக்களிடையே நல்லுறவை வளர்ப்பதில் ஐ.நா. ஸ்தாபனம் ஏற்படுத்தித் தந்துள்ள முன்னேற்றம் கணிசமானது. பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்துக்கு இந்த ஸ்தாபனம் ஆற்றும் பணி அறப்பணியேயாகும். உலக சுகாதார ஸ்தாபனம், உலக உணவு விவசாய ஸ்தாபனம், உலக அகதிக் குழந்தைகள் பராமரிப்பு, பொருளாதார முன்னேற்றத்துக்குத் தொழில் நுட்ப உதவி, கல்வி பரப்பும் பணி — முதலியவை ஐ. நா.வின் மனிதாபிமானத்தைக் கூட்டுறவு முறையில் வளர்க்கும் உயர் சேவைகள்.

உலகில் அபிவிருத்தி குறைந்த பகுதி வாழ் மக்களிடையே பசிப் பிணியையும் வறுமையையும் ஒழித்து நல்வாழ்வுக்கு இன்றியமையாத ஆகாரத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு அபிவிருத்தி அடைந்துள்ள நாடுகளுக்குள்ள பொறுப்புக்களை ஐ. நா. உணர்த்தியுள்ளது. அபிவிருத்தியடையாத நாடுகளுக்குத் தேவைப்படும் உதவிகளை எல்லாம் கிடைக்கும்படி செய்ய ஐ. நா. சபை மேற்கொண்டுள்ள முயற்சிகள் உலக நாடுகளின் பாராட்டுதலுக்குரியவை.

ஆண்டுதோறும் அக்டோபர் 23 ஐ. நா. தினமாக உலகம் முழுவதும் கொண்டாடப்படுகிறது. அந்த நன்னாளில் ஐ. நா. ஸ்தாபனத்தின் ஆதார கருத்துக்களாகிய போர்த் தடுப்பு, உலக அமைதி, உலக மக்களின் நல்வாழ்வு, உலக மக்கள் எல்லோரும் ஒரே குலம் என்ற உணர்ச்சி, உலக நாடுகளிடையே நட்புறவு போன்றவைகளை உலக மக்கள் நினைவுபடுத்திக் கொண்டு, இக்கருத்துக்கள் மேலும் மேலும் உலகில் விரிவடைந்து மக்கள் மனத்தில் உறுதிப்பட வேண்டும் என்றும் இறைவனை வேண்டிக் கொள்ளுகின்றனர். இந்தப் புனித நாளில் நாமும் ஐ. நா. ஸ்தாபனத்துக்கு அஞ்சலி செலுத்துகிறோம்.

ஐ. நா. ஸ்தாபனத்தின் சமாதானப் பணியும் உலக மக்களுக்கு நல்வாழ்வு நல்கச் செய்யும் பணியும் வளரட்டும் என்று இந்த ஐ.நா. தினத்தில் வாழ்த்துகிறோம்.

# மழையோ மழை!

சென்றவாரம் வருண பகவான் அளவுக்கு அதிகமாகவே கண் திறந்து விட்டார் என்று சொல்ல வேண்டும். தமிழகமெங்கும் மழை 'கொட்டு' 'கொட்டு' என்று கொட்டி, ஆறுகள், குளங்கள், குட்டைகள், நீர்த் தேக்கங்கள் எல்லாம் நிரம்பி வழிந்துவிட்டன. மேட்டூர் நீர்த் தேக்கம், புழலேரி ஆகியவையெல்லாம் நிரம்பி விட்டன என்று கேள்விப்பட்டபோது மக்கள் பெரு மகிழ்ச்சி யடைந்தார்கள். வருகிற வருஷத்தில் தண்ணீர்ப் பஞ்சம் இருக்காதல்லவா என்று ஆறுதல் அடைந்தார்கள். ஆனால் இப்போது பெய்த மழை தஞ்சை ஜில்லாவில் குறுவைச் சாகுபடியைப் பாதித்துவிட்டிருக்கும் என்று சொல்லுகிறார்கள். டெல்டா பகுதியில் ஆறுகளில் உடைப்பு எடுத்துக் கொண்டு வயல்கள் எல்லாம் வெள்ளக் காடாகி விட்டனவாம்.

பயிர்கள் கெட்டுப்போனது ஒருபுறமிருக்க, ஆயிரக் கணக்கான மக்கள் வீடிழந்து அவதிப்பட்டிருக்கின்றனர். பலர் மின்சாரக் கம்பிகள் அறுந்து விழுந்து மின்சாரம் தாக்கி உயிர் இழந்திருக்கின்றனர். இப்படிப் பலப்பல உற்பாதங்கள் நிகழ்ந்துள்ளன. இப்படிப் பாதிக்கப்பட்டவர்களிடம் நமது நெஞ்சம் அனுதாபம் கொள்கிறது. அரசாங்கம் இப்படி நஷ்டப்பட்டவர்களுக்கு உதவ முன்வர வேண்டும். பாதிக்கப்பட்டவர்களுக்கு வேண்டிய உதவிகள் அளித்து மக்கள் புனர்வாழ்வு பெற வழிசெய்ய வேண்டும்.



# ராஜாஜியின் கருத்துக்கள்

- விடிவு ஏற்படுமா?
- மெக்காலே கூறியது
- பசு வழிபாடு
- இந்திரா காந்தியின் யோசனை
- புதிய சர்க்கார் காரியாலயம்
- ஐ. நா.வில் சீனு

இதற்குமுன் செப்டம்பர் 11ந் தேதி இதழில்தான் என் கருத்துக்கள் வெளியாகியிருந்தன. அன்பார்ந்த நேயர்களுடன் மீண்டும் பேச இன்று முயல்கிறேன். இன்னமும் நான் பூரணமாக உழைப்பதற்கு உடல் நலம் பெறவில்லை.

என் உடம்பு குணமாவதற்காகப் பிரார்த்தித்த எல்லா அன்பர்களுக்கும் நன்றி தெரிவிக்கிறேன். அவர்கள் பிரார்த்தனையே என்னை மீண்டும் நடமாட வைத்திருக்கிறது.

* * *

நம் நாட்டின் பாழாகிவிட்ட பொருளாதாரத்தை அடுத்த தலைமுறையிலும்கூடச் சீர் செய்யவிடக் கூடாது; இப்புண்ணிய பூமியில் எஞ்சி நிற்கும் சிறிதளவு தருமத்தையும் அழித்துவிட வேண்டும் என்று காங்கிரஸ் தலைவர்களும், அதன் அதிகார பீடங்களும் எண்ணி விட்டதாகத் தோன்றுகிறது. இந்தப் பரிதாபகரமான பிடிவாதத்துக்கு ஒரு மூர்த்தியே நான்காவது திட்டம். தங்களது கட்சியை விடத் தேசம் பெரியது என்று இவர்களுக்கு உணர்த்தக்கூடிய ஒருசில நல்ல மனிதர்கள்கூட இவர்களிடையே இல்லாமற் போய் விட்டார்களா? இப்போது அந்நியர்களின் பார்வைக்காகக் காலில் பிளாச்சு வைத்துக் கட்டிப் பொருளாதாரத்தை உயரமாகக் காட்டுகிறார்கள். உண்மையாகவே தேசத்தின் பொருளாதாரத்தை அதனுடைய சொந்தக் கால் பலத்தில் நிற்கச் செய்ய வேண்டும். இதை எடுத்துச் சொல்பவர் காங்கிரஸில் யாருமே இல்லையா?

பொருளாதாரத்தை நசுக்கி, தேசத்தின் ஜீவனை நசிக்கச் செய்யும் வரிப் பளுவிலிருந்து விடுபட வேண்டும்; நல்ல நிருவாகத்தைப் பெற வேண்டும் என்றே பாரத மக்கள் ஏங்குகிறார்கள். அத்தியாவசியமான பண்டங்களுக்கும் சகிக்கொண்ணாத முறையில் விலை ஏறி வருகிறது. அந்நியர் தரும் 'உதவி'யும், காகித ரூபாய் நோட்டும், அதீத வரியும் தேசப் பொருளாதாரத்தைப் பாழாக்குகின்றன. தேசத்தின் கடன் நிலையைப் பார்க்கும்போது, இன்று மட்டுமின்றி, இந்தக் கடனைத் தீர்க்க வேண்டிய அடுத்த தலைமுறையினரின் காலத்திலும் விடிவு ஏற்படுமென்ற நம்பிக்கை எழவில்லை.

* * *

மனித ஆற்றல்களும் இயல்புகளும் மெக்காலேயின் நாட்களுக்குப்பின் மாறிவிடவில்லை.

> "நமது ஆட்சியாளர்கள் சட்டப்படி தமக்குரிய கடமைகளோடு தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டாலே தேசத்தின் முன்னேற்றத்துக்குச் சிறப்பாக உதவ முடியும். மூலதனம் எங்கு லாபகரமாக வளர முடியுமோ அப்படியே அதை வளர விடவேண்டும். பொருள்கள் எப்படி நியாய விலையில் கிடைக்க முடியுமோ அந்த வழியில் அவற்றை விட வேண்டும். தொழில் திறமையும், அறிவுத் திறமையும் அவற்றின் இயற்கையான வெகுமதியைப் பெற விட வேண்டும். சோம்பலும் மடமையும் அவற்றின் இயல்பான தண்டனையைப் பெறுமாறு விட்டுவிட வேண்டும். சமாதானத்தைக் காப்பது, சொத்துரிமைகளைக் காப்பது, சட்டத்தின் காப்பை அனைவரும் எளிதில் பெறுமாறு செய்வது, ராஜாங்கத்தின் எல்லா இலாக்காக்களிலும் கண்டிப்பான சிக்கனத்தைக் கடைப்பிடிப்பது — இவையே சர்க்கார் செய்ய வேண்டியவை. இதைச் சர்க்கார் செய்யட்டும். மற்றதையெல்லாம் நிச்சயமாக மக்கள் செய்துவிடுவார்கள்!"

இது சர்க்காரின் கட்டுப்பாடே இல்லாத 'சொம்பேறிச் சந்தை' நிலையைக் கூறுகிறது என்று எண்ணுவது தவறு. பார்லிமெண்ட் ஆட்சியில் சர்க்காரின் நிறுவனம் என்ன செய்ய முடியும், என்ன செய்ய முடியாது என்பதைப் பகுத்தறிவுடன் கண்டு மெக்காலே கூறுவதே இது. இதில் உள்ள உண்மையை இந்தியாவில் போதுமான அளவுக்கு நிதரிசனமாகப் பார்த்து விட்டோம். ஆயின் சுயநல கோஷ்டிகளும், பேராசைகளும் சிந்தனைத் தெளிவைத் தடை செய்கின்றன.

* * *

பசு வழிபாடென்பது நமது தேசிய பண்பில் காரணம் சொல்லத் தெரியாமல் ஊறிப் போன ஓர் அம்சம். இது மூடநம்பிக்கை யென்றோ, தவறான பொருளாதாரம் என்றோ பரிகசிப்பதில் பொருளில்லை. இது ஓர் உண்மையான உணர்ச்சி. மக்களின் வாக்

கைப் பெற்று அதிகாரம் பெற விரும்புகிற வர்கள் கவனிக்க வேண்டிய உணர்ச்சி.

இப்போது உணவுத் தட்டுப்பாடு பற்றி நிறையப் பேசப்படுகிறது. அந்தக் கோணத்தி லிருந்து பசு வழிபாட்டைப் பார்ப்பது நலம். புல்லையும், வைக்கோலையும், மக்கள் உண்ண முடியாத மற்ற 'செல்லுலோஸ்'களையும் உண்டு பாலாக்கித் தருகிற பசுவைப் போல் ஓர் அரிய கருவியை மனிதன் செய்ய முடி யுமா ? எனவே, பொருளாதாரப்படி பார்த் தாலும் பால் தருகிற — அல்லது தரக்கூடிய— பசுக்களை வதைக்கக் கூடாது என்பதை நாம் ஒப்புக் கொள்ள வேண்டும். வளமான நெல் அல்லது கோதுமை வயலில் சணலோ, பருத்தியோ, கரும்போ பயிரிடுவது தேசத் துக்கிழைக்கும் தீமை என்றால் பசுவையும் வேறுவிதத்தில் பயன் செய்வது அதற்கொப் பான தீமையே ஆகும்.

ஆனால் நாம் சட்டத்தின் ஒழுங்கையும் கவனிக்க வேண்டும். சில சொந்தக்காரர்கள் தங்களது சொந்தமான பசுவைப் பணத்துக் காகக் கசாப்புக் கடைக்கு விடுவதைச் சட்டத் தின் பலவந்தத்தால் தடுக்க முயலக்கூடாது. நமது பசுவை வழிபடுவோம். ஆனால் மற்ற வர்களின் சுதந்திரத்தில் தலையிடக் கூடாது. அன்பு வழியில் அவர்களின் மனத்தை மாற்ற வேண்டும். நிர்ப்பந்தம் கூடாது. சுற்றியுள்ள மக்களின் உணர்ச்சியைப் பசு வதைக்காரர்களும் உணருமாறு செய்ய வேண்டும். பழைய முகமதிய மன்னர்கள் சிலர் இவ்வழியில் செயல் புரிந்திருக்கிறார்கள். தங்களது முகமதிய பிரஜைகளும் உரிமை யைக் கட்டுப்படுத்திக் கொண்டு பசுவதை புரியாதவாறு செய்திருக்கிறார்கள். சமா தானம், ஒற்றுமை இவை நம் பசுக்கள்—விலை மிக்க பசுக்கள் — என்பதை மறவாதிருப் போம். இவை யாவற்றையும்விட, ஜன நாயகத்தைக் காக்க விரும்பும் சமுதாயத் தில் சட்டத்தின் ஒழுங்கே, மிகப் புனித மான பசு.

***

'குடும்பக் கட்டுப்பாட்டைத் தீவிரமாக முடுக்க வேண்டும்; இல்லாவிடில் தமது திட்டம் முறிந்து விழும்' என்கிறார் ஸ்ரீ அசோக மேத்தா. அதாவது இன்னமும் ஏராள மான பணம் விரயமாக வேண்டும். கிராம மக்களின் ஜனத் தொகையைத் துவம்சம் செய்ய வேண்டும்.

அர்த்தமற்ற இந்த விரயத் திட்டத்தை விட்டுப் பிரதமர் கூறுவதைப் பார்ப்போம். 'மக்கள் தங்களது உணவு வழக்கத்தை மாற் றிக் கொள்ள வேண்டும்' என்கிறார் ஸ்ரீமதி இந்திரா காந்தி. அரிசியும் கோதுமையும் உண்பவர்கள் உருளைக்கிழங்கும், மற்ற கறிகாய்களும் உண்டால் உணவுப் பிரச்னை தீர்ந்துவிடும் என்கிறார். ரொட்டியே கிடைக் காமல் பிரெஞ்சு மக்கள் புரட்சி செய்த போது அவர்கள் 'கேக்' செய்து சாப்பிட லாமே என்று பிரெஞ்சு ராணி சொன்ன தாகக் கதை உண்டு. அந்தக் கதையின் 'தழுவலை'யே பாரதப் பிரதமரின் கூற்றில் காண்கிறோம்.

கறிகாய்கள் மக்களுக்குப் பெருமளவில் கிடைப்பது சாத்தியமா? அவற்றின் விலை மக்களுக்குக் கட்டுப்படியாகுமா? மக்களுக்கு வேண்டிய கலோரி உஷ்ணம்தான் இவற்றில் கிடைக்குமா ? இன்று 'நடுத்தர' மக்களுக்குக் கூட உருளைக்கிழங்கும் கறிகாய்களும் விலை உயர்ந்த பொருள்கள் போலாகிவிட்டன.

***

சென்னையின் பழைமையான வீதிகளுள் ஒன்றில் உயரமான புதிய கட்டடம் ஒன் றினைத் திறந்து வைத்திருக்கிறார் சென்னை முதல் அமைச்சர். முப்பத்திநாலு மத்திய அரசாங்கக் காரியாலயங்கள் இங்கு செயல் படும். ஒன்றன்பின் ஒன்றாக இதுபோன்ற வானளாவும் கட்டடங்களைப் பழைமையான தும் அழகானதுமான சென்னை நகரில் எழுப்பு வது பற்றிப் பெருமிதம் கொள்ளலாம். ஆனால் அந்தப் பெருமிதத்தின் பின்னால் விஷய ஞானம் இருப்பதாகத் தெரியவில்லை. இது ஒருபுறமிருக்க மத்திய அரசினரின் காரியாலயங்கள் தேசம் முழுவதிலும் சப்பாத்திக் கள்ளிபோல் இப்படி மேலும் மேலும் பெருகிக் கொண்டே போக வேண் டியது ஏன் என்பதுதான் முக்கியமான கேள்வி. பல ராஜ்யங்கள் சேர்ந்த 'யூனிய'னாக மத்திய அரசு இயங்க வேண்டும் என்று கூறும் அரசியல் சட்டத்தினை மிக வேகமாக மறந்து போய் வருகிறார்கள். நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் தந்தையர் என்ன நினைத்தார்களோ அதை ஒதுக்கிவிட்டு அதி விடத்தைத் திறமையற்ற ஓர் ஏக சர்க்கார் அமைப்பு பிடித்துக் கொண்டு வருகிறது.

***

ஐக்கிய நாடுகள் சபையில் சீனா இடம் பெற வேண்டும் என்கிற யோசனை அச் சபையில் நவம்பர் மாதத்தில் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். நேருஜியும் நாளும் அமெரிக்கக் கருத்துக்கு மாறாகச் சீனா ஐ. நா. சபையில் இடம் பெற வேண்டும் என்றே கூறிவந்துள்ளோம். எங்கள் கருத்து, ஐ. நா. சபை உலகை முழுவதையும் அர வணைப்பதாக, பூரண பிரதிநிதித்துவம் உடையதாக இருக்க வேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையாகக் கொண் டது. இக்கொள்கையில் ஊதாண்டும் தீவிர நம்பிக்கை உடையவராக இருக்கிறார்.

ஆனால் இப்போது, இந்தக் கொள்கையின் நியாயமும் மாறாத தன்மையும் எப்படிப் பட்டதாயினும் சரி, இன்றைய கம்யூனிஸ சிந்தனையையும், செயலையும் பார்க்கையில் கம்யூனிஸ்ட் சீனாவை ஐ. நா. சபையிலும் பாதுகாப்பு சபையிலும் அநுமதிப்பது தற் கொலைக்கு ஒப்பாகும் என்றே கருதுகிறேன். அமைதி நிலவவோ, பரவவோ இது உத வாது. மாறாக ஐ. நா. சபைக்கே விபரீத மான கேடுகளை உண்டாக்கும். ஏனெனில், பாதுகாப்பு சபையில் செஞ்சீனாவுக்கு இட மளிக்காமல் ஐ. நா. பொதுச் சபையில் மட்டும் அதற்கு இடமளிப்பது என்பது இன் றைய நிலையில் இயலாத காரியம்.




# படம் எடுப்பதற்கு முன்

கண்கவர் காட்சியையோ அல்லது அன்பு வழியும் ஒரு நிகழ்ச்சியையோ அல்லது மனத்தை அள்ளும் சம்பவத்தையோ அல்லது வேறு எதுவானாலும் சரி, இவைகளைப் புகைப்படமெடுக்க நீங்கள் காமிராவை "கிளிக்" செய்யுமுன், உங்களது காமிராவிற்குள்ளே இருக்கும் "பிலிம்" ஆர்ஓ பிலிம்தானா என நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள்.

ஆர்ஓ கலர், மற்றும் சாதாரண கருப்பு-வெளுப்பு பிலிம்கள். 120, 127 மற்றும் 35mm சைஸ்களில் மனதிற்குப் பிடித்தமான பற்பல ரகங்களிலும், வேகத்திலும் ஏராளமாக இருக்கின்றன.

விநியோகஸ்தர்கள் : ஆர்ஓ பிலிம்ஸ் ஈஸ்டர்ன் யூனிட், மதராஸ் - கல்கத்தா
ஆர்ஓ பிரைவேட் லிமிடெட், பம்பாய் - டெல்லி

Manufactured by : **VEB FILMFABRIK WOLFEN, THE GERMAN DEMOCRATIC REPUBLIC.**

NAS 6126 A

# ஐ. நா. வில் எம். எஸ்ஸின் இசை



**வி**ஜயதசமித் திருநாளாகிய அக்டோபர் 23-ந் தேதியன்று ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அளித்த இசை விருந்து சரித்திரப் பிரசித்தி பெறவேண்டியதாகும். சகல நாடுகளின் பிரதிநிதிகளும் கூடிய அரங்கில் நிகழ்ந்த இந்தக் கச்சேரியின் மூலம் அகில உலகமுமே நமது இசையைக் கேட்டு மகிழ்ந்தது என்று கொள்ளலாம்.

நம் சங்கீத சம்பிரதாயத்துக்கு முற்றிலும் இசைவான முறையிலேயே எம். எஸ்ஸின் ஐ. நா. சபைக் கச்சேரி அமைந்திருந்தது. முதலில் ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் 'ராம நன்னு ப்ரோவரா'. அடுத்து, ஸ்வாதித் திருநாள் மகாராஜாவின் 'ஸாரஸாக்ஷ'. மூன்றுவதாக எம். எஸ்ஸின் 'மாஸ்டர் பீஸ்' எனப்படும் சங்கராபரணத்தில் ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் 'ஸரோஜதள நேத்ரி'. ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரின் ரங்கபுர விஹாரன் ஐ. நா.விலும் விஹாரம் செய்தான். மைசூர் மன்னர் ஸ்ரீ ஜயசாமராஜ ஒடயரு அவர்களின் 'சிவ சிவ சிவபோ' என்ற உருக்கமான நாதநாமக்ரியா கிருதியும், புரந்தர தாஸரின் 'ஜகதோத்தாரண'வும் தொடர்ந்து பவனி வந்தன. காந்திஜிக்குப் பிரியமான 'ஹரி துமஹரோ' என்ற மீராவின் பஜன் உலக மக்களின் துயர் எல்லாம் தீர ஐ. நா.விலும் பிரார்த்தனையாக அமைந்தது. இளங்கோவடிகளின் இன்பத் தமிழ்ப் பாடலாகிய 'வடவரையை', அரசியல் வடவரையான ஐ. நா. சபையில் அன்று ஒலித்தது.

அடுத்து ஓர் அற்புதமான ஆசிப் பாடல் எளிய இனிய சம்ஸ்கிருதத் தால் ஆனது. ஐ. நா.வுக்கே ஆசிகூறக் கூடிய இந்த மங்கள ச்லோகங்களின் கர்த்தர் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள். ஆசாரிய சுவாமிகள் பெரும் அருள் கூர்ந்து, இந்த ச்லோகங்களை இயற்றி அளித்தது ஐ. நா.வின் பாக்கியம். இந்த ச்லோகங்களுக்குப் பிரபல சங்கீத டைரக்டரான பம்பாய் ஸ்ரீ வஸந்த் தேசாய் அவர்கள் இசை அமைத்து உதவியுள்ளார்.

**க**ச்சேரியின் நிறைவாக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் ஆங்கிலத்தில் ஓர் அன்பு கனியும் பிரார்த்தனையை ஆங்கில இசை முறைப்படியே பாடி ஓர் அற்புதம் நிகழ்த்தினார். அரசியலோடு அற நெறியும் அருள் நெறியும் அழகாகக் கரைந்த இந்தப் பிரார்த்தனையை இயற்றியவர் உலகப் பெருந் தலைவராகிய நம் ராஜாஜி அவர்கள். இதற்கு இசை அமைத்தவர் சென்னை வானொலியில் மேல் நாட்டு இசைத் துறைப் பொறுப்பாளராக விளங்கும் ஹாண்டேல் மானுவல் அவர்கள்.

ஆசாரியரின் ஆசி மொழியையும், அதன் பொருளையும் நம் வாசகர் அனைவருக்கும் அடுத்த பக்கத்தில் அளிக்கிறோம். அத்துடன் ராஜாஜியுடைய பிரார்த்தனையின் மூலத்தையும் அதன் தமிழாக்கக் கவிதையையும் தமிழகம் முழுவதற்கும் அளிக்கிறோம்.

# அருள் வாக்கு

मैत्रीं भजताखिलहृज्जेत्रीं
மைத்ரீம் பஜதாகில ஹ்ருத் ஜேத்ரீம்

आत्मवदेव परानपि पश्यत ।
ஆத்மவதேவ பரானபி பச்யத !

युद्धं त्यजत स्पर्धां त्यजत
யுத்தம் த்யஜத ஸ்பர்த்தாம் த்யஜத

त्यजत परेष्वक्रममाक्रमणम् ॥
த்யஜத பரேஷ்வக்ரம மாக்ரமணம் ॥

जननी पृथिवी कामदुघाऽऽस्ते
ஜனனீ ப்ருதிவீ காமதுகாஸ்தே

जनको देवः सकलदयालुः ।
ஜனகோ தேவ: ஸகலதயாளு :।

दाम्यत दत्त दयध्वं जनताः
தாம்யத தத்த தயத்வம் ஜனதா :

श्रेयो भूयात् सकलजनानाम् ॥
ச்ரேயோ பூயாத் ஸகல ஜனானாம் ॥

எந்த உள்ளத்தையும் வெல்லும் நட்புப் பான்மையைக் கொள்க ;

பிறரையும் தானாகவே நோக்குக ;

யுத்தத்தை விடுக ; பொறாமையை விடுக ;

பிறர் மீது முறையின்றி ஆக்கிரமிப்புச் செய்வதை விடுக ;

பூமித்தாய் விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றி வைக்கும் காமதேனுவாக இருக்கிறாள் ;

அனைவருக்கும் தயை சொரியும் ஆண்டவன் தந்தையாக இருக்கிறார் ;

உலக மக்களே, கட்டுப்பாட்டுடன் வாழுங்கள் ; ஈகையுடன் வாழுங்கள், கருணையுடன் வாழுங்கள் !

எல்லா மக்களுக்கும் உயர் நலன் கூடுவதாக !

காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அருளிய இந்த ஆசிப் பாடலுக்குப் பண் அமைத்திருப்பவர் பம்பாயைச் சேர்ந்த பிரபல இசையமைப்பாளர் ஸ்ரீ வஸந்த் தேசாய் அவர்கள்.

## ராஜாஜியின் பிரார்த்தனை



இந்தப் பிரார்த்தனைக்கு மேலைநாட்டுப் பண் அமைத்தவர் திரு ஹாண்டேல் மானுவல் அவர்கள். இவர் அகில இந்திய ரேடியோவின் சென்னை நிலையத்தில் மேலை இசைப் பகுதிப் பொறுப்பாளராகப் பணியாற்றுகிறார். ஆங்கிலத்தில் ராஜாஜி இயற்றியதைத் தமிழாக்கம் செய்தவர் திரு 'சோமு' அவர்கள்.

*May the Lord forgive our sins*
*And gather all the nations*
*Here under this Uniting Roof.*

*To give up hate and fear*
*And learn to understand*
*Here under this Uniting Roof.*

*They took the risks of war*
*and dying, wished us take*
*the better risks of peace*
*Here under this Uniting Roof.*

*The good in every man*
*is an atom too*
*of measureless potential.*
*Let us learn to find it*
*And explode it into lasting peace*
*Here under this Uniting Roof.*

*May the Lord forgive our sins*
*Inspiring us to peace on Earth*
*Here under this Uniting Roof.*

அனைவரின் குற்றமும் பொறுத்தருள் இறைவா!
மக்கள் யாவரும் ஒன்றாய்ச் சேர்த்தே
இந்த உலக மன்றம் தனிலே!

வெறுப்பும் அச்சமும் விட்டுத் தொலைத்தே
ஒருவரை ஒருவர் உள்ளம் புரிந்திட
இந்த உலக மன்றம் தனிலே!

சென்ற போரில் ஆகுதி யாக
உயிரை ஈந்தவர் எம்மைக் கருதிப்
பூசலில் உள்ள தீரம் தனிலும்
அமைதியில் மாபெரும் தீரம் வேண்டுமென்(று)
அமைத்தனர் எமக்கொரு பணியை அன்றோ
இந்த உலக மன்றம் தனிலே!

ஒவ்வொரு மானிட நல்லுயி ருள்ளும்
அணுசக் தியிலும் அளவிலாப் பெரிய
அரியதோர் சக்தி மறைந்துள துணர்ந்தே
அதனைக் கண்டு பயன்பெற முனைந்தே
அவனியில் அமைதி நிலைத்திடும் வண்ணம்
அணுவெடி போலதை வெடித்திட அருள்வாய்!
இந்த உலக மன்றம் தனிலே!

இறைவா அனைவரின் குற்றமும் பொறுத்தே
அமைதியில் எம்மை உய்த்தே அருள்வாய்
இந்த உலக மன்றம் தனிலே!



# அமெரிக்காவில் இந்திய வேனில்

**நம் கர்நாடக சங்கீதத்தில் ஈடுபாடு மிக்கவரும், அமெரிக்காவிலுள்ள பான் ஓரியண்ட் கலாசார நிறுவனத்தின் தலைவருமான திரு ஜேம்ஸ் ஏ. ரூபின் அமெரிக்காவில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி சங்கீதக் குழுவினரோடு உடன் சென்று பல இடங்களில் நடைபெறும் சங்கீதக் கச்சேரிகளைப் பற்றிய நேர்முக வர்ணனையும் விமரிசனத்தையும் தருகிறார்:**

ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியும், ஸ்ரீ சதாசிவமும் உடன் சென்றோரும், அக்டோபர் இரண்டாம் தேதியன்று நியூயார்க் சென்றடைந்தபோது அவர்களை ஐ.நா.வின் துணைக் காரியதரிசி ஸ்ரீ ஸி. வி. நரசிம்மன் வரவேற்று ஐ. நா.வின் பிரதம காரியதரிசியான ஊதாண்ட் அவர்களின் அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றார். ஊதாண்ட் ஸ்ரீமதி எம். எஸ்ஸையும் ஸ்ரீ சதாசிவத்தையும் வெகு மகிழ்ச்சியுடன் வரவேற்று, ''உங்களை இங்கு நியூயார்க்கில் சந்திப்பதில் மிகுந்த சந்தோஷமடைகிறேன்'' என்றார். பிறகு தாமே அவர்களுக்குத் தமது காரியாலயத்தைச் சுற்றிக் காட்டி விளக்கினார். அங்கிருந்து வான் முகட்டை உரசும் நியூயார்க்கின் உயர்ந்த கட்டிடங்களைக் காண்பது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

அன்று ஸ்ரீமதி எம். எஸ். கோஷ்டியினருக்கு ஸ்ரீ ஸி. வி. நரசிம்மன் தமது இல்லத்தில் விருந்துபசாரம் அளித்தார்.

மூன்று நாட்கள் நியூயார்க்கில் தங்கிய பின்னர் எம். எஸ். கோஷ்டியினரின் அமெரிக்கச் சுற்றுப் பயணம் தொடங்கியது. அமெரிக்காவில் முதல் கச்சேரி அக்டோபர் 6-ந் தேதியன்று ஹாமில்டனிலுள்ள கால்கேட் சர்வ கலாசாலையில் மகத்தான வைபவமாக நிகழ்ந்தேறியது. நியூயார்க்கின் பரபரப்புக்கு நேர்மாறாக அமைதி கமழ்ந்த ஹாமில்டனில் சர்வகலாசாலையின் அற்புதமான புதிய ஹாலில் கூட்டம் நிரம்பி வழிந்தது. பேராசிரியர்களும், அறிஞர்களும், மாணவர்களும் பெருமளவில் குழுமி யிருந்தனர். எம். எஸ்ஸின் இசைக்குக் கிடைத்த வரவேற்பு பரவசமூட்டுவது என்றே சொல்ல வேண்டும். கச்சேரி தொடங்கிய ஒருசில நிமிடங்களுக்குள்ளேயே அவையினர் தங்கள் மனத்தைத் தீவிரமாக ஒருமுகப்படுத்திவிட்டனர். அவர்களில் பலர் கர்நாடக சங்கீதத்தைக் கேட்பது இதுவே முதல் முறை.

'வாதாபி கணபதிம்' என்று விக்நேசுவரரைப் போற்றியபடி எம். எஸ். தமது முதல் அமெரிக்கக் கச்சேரியைத் தொடங்கினார். கர்நாடக இசையநுபவம் பெற்றிராத அமெரிக்கர்களும் சிறிது பொழுதுக்குள்ளேயே பாடலின் உணர்வுடன் மன ஒருமைப்பாடு பெறத் தொடங்கியது பேரதிசயமாகும். பாடுபவருக்கும் கேட்பவருக்குமிடையே வளர்ந்த அன்பின் சூழலில் எம். எஸ். உன்னதமான இசை அளித்தார். தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம், ஹிந்தி ஆகிய நான்கு மொழிகளில் ஒரு சுந்தரமான நிகழ்ச்சியை அளித்தார். சபையினர் ஒரே மகிழ்ச்சி வசமாகி நெகிழ்ச்சியுற்றிருந்தனர். பக்கல நிலபடி (கரஹரப் பிரியா), கா வா வா (வராளி), பிராணப்ரோவ (கல்யாணி) இவற்றில் சபையை மெய் மறக்கச் செய்தார். 'ஸ்ரீ காமகோடி பீடஸ்திதே' என்ற சாவேரி

> சேர்ந்து வருவதென்பது ஆரம்பம்;
> சேர்ந்து வாழ்வதென்பது முன்னேற்றம்;
> சேர்ந்து உழைப்பதென்பதே வெற்றி!"
>
> - ஆப்ரஹாம் லிங்கன்

இறுதியில் 'கதம்பவன நிலையே' என்ற இடத்தில் பாடகி நிரவல் செய்தபோது ஒரு புதிய சூழலே உருவாவது போல் அமெரிக்கர் வியப்பெய்தினர்.

இதன் பின் கால்கேட் சர்வகலாசாலையின் சங்கீதப் பேராசிரியரும், நமது கர்நாடக சங்கீதத்தில் ஞானம் படைத்தவருமான ஸ்கெல்டன் அவர்கள் கேட்டுக்கொண்டபடி 'ஹெச்சரிக' என்ற யதுகுல காம்போதி கிருதியைப் பாடினார். ஸ்ரீமதி எம். எஸ். 'ப்ருஹி முகுந்தேதி', 'மோரேதோ கிரிதர' 'சாகரராகோ' ஆகிய ரமணீயமான பஜன் பாடல்களுக்குப் பின் உருக்கம் மிகுந்த 'சம்போ மகாதேவா'வுடன் முதல் கச்சேரியை நிறைவித்தார்.

தொடக்கக் கச்சேரி வெகு மங்களமான ஆரம்பமாக அமைந்து விட்டது என்பதே என் கருத்து. கச்சேரியின் சகல அம்சங்கள் குறித்தும் வார்த்தையால் வெளியிடவொண்ணாத அளவுக்கு நான் மகிழ்ச்சியடைந்தேன்.

மறுநாளே ஸைராக்யூஸ் சர்வகலாசாலையில் இரண்டாவது கச்சேரி நடைபெற்றது. இதுவும் முதல் கச்சேரிக்குச் சமமாக வெற்றிகரமாக அமைந்தது.

ஹாமில்டனில் கால்கேட் சர்வகலாசாலையின் சங்கீதப் பேராசிரியர் ஸ்கெல்டன் அவர்கள் கச்சேரிக்குப் பின் பாடகிக்கு ஒரு வரவேற்பு அளித்தார். இதேபோல் ஸைராக்யூஸிலும் சர்வகலாசாலை சங்கீதப் பேராசிரியர் டீன் ஹவார்ட் போட்ரைட் அவர்கள் இசை நிகழ்ச்சிக்குப் பின் வரவேற்பு அளித்தார். இவ்விரண்டு வரவேற்புகளிலும் உற்சாகம் நிரம்பிய அவையினர் இசைக் கோஷ்டியுடன் அளவளாவித் தங்கள் பாராட்டுதலை நேராகத் தெரிவிக்க வாய்ப்புக் கிடைத்தது.

அக்டோபர் எட்டாந் தேதியன்று பஃபலோ நகரத்தில் அங்குள்ள பிரும்மாண்டமான சர்வ கலாசாலையில் உள்ள சர்வதேச ஆராய்ச்சிக் கழக டைரக்டரான (Director of International Studies) ஸ்ரீமதி ராபின்ஸன் அவர்களும் அவரது கணவர் டாக்டர் ராபின்ஸன் அவர்களும் எம். எஸ். குழுவினருக்கு விருந்துபசாரம் நடத்தினர். இருபதினாயிரம் மாணவர் கொண்ட இச்சர்வ கலாசாலையின் சங்கீத இலாகாத் தலைவராக உள்ள ஆலன் ஸாப் அவர்கள் பஃபலோவில் அன்றிரவு ஒரு பொதுக் கச்சேரிக்கும் ஏற்பாடு செய்திருந்தார். இவரும், இவரது மனைவியும் சர்வகலாசாலையைச் சேர்ந்த பிரமுகர்கள் சிலரும் விருந்தில் கலந்துகொண்டனர்.

விருந்துக்கு முன்னதாக ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் கிருதியொன்றும், மோகன ராகத்தில் ஒரு பாடலும், ஷண்முகப் பிரியாவில் ராகம் — தானம் பல்லவியும் பாடினார். ஒலிபெருக்கியில்லாமல் ராபின்ஸன் வீட்டறையின் நெருக்கமான சூழலில் எம். எஸ். பாடியபோது அவரது கானத்தில் ஒவ்வோர் அற்புத சாயையும் தெள்ளத் தெளிய மனத்திற் பாய்ந்தது. மின்சாரம் வெட்டினாற்போல் அவையினர் ஸ்தம்பித்து வீற்றிருந்தனர் என்றும், தங்களது உணர்ச்சிகளை வெளியிடக்கூட முடியாமல் தவித்தனர் என்றும் கூறினால் அது வார்த்தைக்கு வார்த்தை மெய்யாகும்.

**கால்கேட் சர்வகலாசாலையில் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் இசையைக் கேட்டு மகிழ்ந்த பேராசிரியர் ஸ்கெல்டன் எழுதுகிறார்:**

"அமெரிக்காவில் 'இந்திய வேனில்', என்று குறிப்பிடப்படும் ஒரு பருவம் உண்டு. இச்சமயத்தில் இயற்கையின் எல்லாப் பொருட்களும் ஒரு தனி அழகு பெறும். மரங்கள் யாவும் ஜொலிக்கும். வானம் நீலப் பளிங்கு போல் விளங்கும். சூரியன் இளவெப்பமாக ஒளி பரப்பும். இளங் காற்று மிருதுவாக வீசும். இத்தகைய அதிகோலாகலமான பருவத்தில் சென்ற வாரம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் வந்து, தமது முதல் அமெரிக்கக் கச்சேரியை அளித்தார். இந்திய வேனிலின் எல்லா எழில்களையும் விடப் பேரெழிலை எம். எஸ். அளித்தார். கால்கேட் சர்வ கலாசாலையில் அவர் வழங்கிய கச்சேரியில் ஸ்படிகம் போலத் தெளிந்த கற்பனையும் அந்தக் கற்பனையின் லாகவமான கட்டுப்பாடும், குரல் ஒலியின் இதமான நிறைவும், அன்பின் மென்மையும் கூடி, இசையநுபவத்தின் பேரானந்த நிலை கொழுந்து விட்டுப் பிரகாசித்தது.

கர்நாடக சங்கீதம் தரும் இன்பம் குறித்து நியாயமான பெருமிதம் படைத்த எல்லா இந்தியர்களுக்கும் ஒன்று சொல்ல விரும்புகிறேன்: எம். எஸ். சுப்புலக்ஷ்மி எதற்குப் பெயரெடுத்திருக்கிறாரோ அதை மீண்டும் செய்து விட்டார் — அதாவது சபையினரைப் பரிபூரணமாக அடிமைப்படுத்தி விட்டார்! கால்கேட்டின் புதிய 'டாஹ க்ரியேடிவ் ஆர்ட் ஸெண்ட'ரில் குழுமியிருந்த கூட்டத்தினரின் நீண்ட இடையறாத வாழ்த்தொலியே அவரது வெற்றியை எடுத்துக் கூறிவிட்டது.

இந்த மகத்தான வெற்றிக்காக எம். எஸ்ஸுக்கும், இந்தியா முழுவதற்குமே எனது சொந்த வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஸைராக்யூஸ் சர்வகலாசாலையில் நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ்ஸின் கச்சேரி குறித்து அங்கு மனித இயல் பிரிவில் பணிபுரியும் அகேஹானந்த பாரதி எழுதுகிறார்:**

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி தமது குமாரிகளுடனும், வயலின் சுப்பிரமணியம், மிருதங்கம் மூர்த்தி, கடம் விநாயகராம் ஆகிய பக்க வாத்தியக்காரர்களுடனும் ஸைராக்யூஸ் சர்வ கலாசாலையின் சங்கீதக் கல்லூரியில் உள்ள மிகப் பெரிய மன்றமாகிய க்ரௌஸ் ஆடி

டோரியத்தில் (Crouse Auditorium) எட்டாந் தேதி இரவு இன்னிசை வழங்கினார். இரண்டாயிரம் பேர்கள் அமரக் கூடிய இந்த மன்றம் நிரம்புவது ஓர் அபூர்வமான நிகழ்ச்சியாகும். எம். எஸ். கச்சேரியின்போது இந்த அசாதாரண சம்பவம் நிகழ்ந்தது. இவர்களில் சுமார் மூன்றிலொரு பங்கினர் இந்தியர்கள். பெரும்பாலும் இவர்கள் ஆசிரியர்களும் மாணவர்களுமாவர். இவர்களில் ஸைராக்யூஸிலும் அதைச் சுற்றிலும் உள்ள கல்வி நிலையங்களைச் சேர்ந்தவர்கள் மட்டுமின்றி, நியூயார்க்கில் உள்ள பல பெரிய பொறி இயல் ஆலைகளிலிருந்து வந்தவர்களும் அடங்கியிருந்தனர்.

சபையில் இந்தியப் பண்பாட்டில் நல்ல ஞானம் பெற்றவர்களும், இந்திய மரபின் மிக உயர்ந்த அம்சங்களில் ஈடுபாடு கொண்டவர்களும் இருந்தனர். அதே சமயத்தில் இந்தியாவிடம் சிநேக பாவம் கொண்டதால் மட்டுமே வந்திருந்தவர்களும் இருந்தனர். இவர்கள் அனைவரின் மனத்திலும் எம். எஸ்ஸின் இசை எவ்வாறு பதிந்தது என்பதைப் பின்வருமாறு கூறலாம்: எம்.எஸ்ஸின் தோற்றத்தில் காண்கிற மகத்தான, மென்மையான லக்ஷ்மீகரத்தையும், மேடையின்மீது இவ்வுலக நினைவேயின்றி ஆகாய வெளியின் தூய்மையில் சஞ்சரித்து அவர் பாடும் பாவனையையும், அவர் அழகிய கிருதிகளைப் பாடுகையில் அவரைச் சுற்றி விளக்கவொண்ணா ஒரு புனிதத்தின் பிரபை பரவுவதையும் 'ஆத்மிக மானவை' என்று நாம் விளக்குவது போதாது: அது அவசியமும் அல்ல. 'ஆத்மிகம்' என்ற சொல்லை அன்றாடப் பேச்சில் திரும்பத் திரும்பக் கூறுவதால், இதற்கு வேறு வார்த்தையால் விளக்கம் கூற வேண்டும். இந்தப் பண்புகள்தான் அறிமுகம் இல்லாத அவையினரை வெகு எளிதில் தொட்டுவிட்டது. அறிவு மூலமோ, உணர்ச்சி மூலமோ இந்தியப் பண்பாட்டுடன் தொடர்பு கொண்டவர்களுக்கோ எம். எஸ்ஸின் கச்சேரி மகத்தான ஆழ்ந்த சம்பிரதாயத்தின் சமய — அநுபவங்களுக்கு ஊட்டம் தரும் ஸௌந்தரியம், மகிமை, பரவசம் இவை யாவுமாகத் திகழ்ந்தது. நிகழ்ச்சியில் மீரா பஜன்களும், ரவீந்திர சங்கீதமும் இடம் பெற்றன. ஒரு குறிப்பிட்ட எல்லை நிலத்திலுள்ள இந்தப் பாடல்களும் கூட எம். எஸ். கையாண்ட விதத்தால் தனிச் சிறப்பைப் பெற்றன. பாரத பரம்பரையின் நிஞ்கவை உணர்வுக்கு இன்று உயிருள்ள ஒரு முழுமை உள்ளதெனில், அதன் சகல அம்சங்களுக்கும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி ஓர் உருவகம்.

இதேபோல் அமெரிக்காவில் அடிக்கடி சுற்றுப் பயணங்கள் நிகழ்ந்தால், இந்தியாவைக் குறித்து மேலெழுந்தவாரியாக மட்டுமின்றி ஆக்க சக்தியுள்ள ஓர் ஈடுபாடும் மதிப்புக்குரிய அமெரிக்கர்களுக்கு உண்டாவது நிச்சயம்.

போரிஸ் பாஸ்டர்நாக் (1890-19 60)
என்கிற ருஷ்யக் கவிஞன்

## காற்று

நான் இறந்து விட்டேன் - நீ இருக்கிறாய்.
காற்றோடு குற்றம் சாட்டி ஓலமிட்டு
வீட்டையும் காட்டையும் ஆடவைக்கிறது
ஒரு மரம் மட்டும் தனியாக ஆடவில்லை—
எல்லா மரங்களும் ஒன்றாக
அடர்ந்த காடாக, முழுவதுமே ஆடு
கின்றன—
நிலைக் கண்ணாடியான நீர்ப் பரப்பிலே
பல படகுகள் ஆடுவது போல ஆடு
கின்றன.

வெறும் ஆர்ப்பாட்டமா இது—
அல்லது சான்றுக்கு ஒரு வெறியா?
இல்லை! இழப்பின் தவிப்பிலே வார்த்தை
தேடி
உனக்கொரு தாலாட்டாகவே காற்று
பேசுகிறது!

— மயன்

அத்தியாயம் 5

# நீலக் கல் சுரங்கம்

வேலவன் கோதையையும் நீலவல்லியையும் வெள்ளித் தீவு மண்டபத்தின் படிக்கட்டில் விட்டு விட்டு, நாம் இப்போது பல நூறு காதங்கள் கடலிலே பயணம் செய்து, எகிப்து நாட்டுக்குச் செல்ல வேண்டியவர்கள் ஆகிறோம்.

தமிழகத்திலே உள்ள நம்முடைய காதலர்களுக்கும் எகிப்து நாட்டுக்கும் அப்படி என்ன தொடர்பு இருந்தது என்று ஒரு கேள்வி எழலாம். இந்தக் கதை நடந்த காலத்தில் எகிப்து நாட்டுக்கும் தமிழகத்துக்கும் இருந்த தொடர்பு, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நெருங்கிய தொடர்பாகும்.

எகிப்து நாட்டிலே உலகப் புகழ் பெற்று விளங்கியது அலெக்சாந்திரியா நகரம். அந்த நகரத்துக்கும் தமிழகத்துக்கும் நடைபெற்று வந்த வாணிபத்தைக் குறித்து, நம்முடைய தமிழ் நூல்கள் மட்டுமல்ல, யவன நாடுகளிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்துபோன அறிஞர்களும், அரசச் சுற்றத்தார்களும் அவர்களுடைய மொழியிலே எழுதி வைத்துள்ள சரித்திரக் குறிப்புகள், இன்றைக்கும் நம் கண் முன்பு நம்முடைய முன்னோர்களின் பெருமைக்கும்




வெண்ணிலவுப்
பெண்ணரசி
சோமு

ஆற்றலுக்கும் புகழுக்கும் நிலையான சான்றுகளாக நின்று நிலவுகின்றன! மேனுட்டாரின் அந்தக் குறிப்புகள், சேர நாட்டுத் துறைமுகங்களின் விளக்கங்களோடும் இங்கு வந்து செல்வதற்கான வழிகாட்டிகளோடும், படங்களோடும், வணிகர்களுக்கு வேண்டிய பல செய்திகளோடும் எழுதப்பட்டிருக்கின்றன!

எகிப்தில் வாழ்ந்த ஒரு மரக்கலத் தலைவன், முசிறிக்கு வருவதற்கான கடற் பாதையிலே ஒரு குறுக்குவழியைக் கண்டுபிடித்தான். அதற்கு முன் ஆண்டு ஒன்றுக்கு இருபது மரக்கலங்களே நம் நாட்டுக்கு வந்து கொண்டிருந்தன. இந்தக் குறுக்கு வழியைக் கண்டுபிடித்த பிறகோ, நாள் ஒன்றுக்கு ஒரு மரக்கலம் வீதம் அலெக்சாந்திரியாவிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்தது என்று நம்முடைய நூல்கள் அல்ல, யவனர்களின் சரித்திரக் குறிப்புகள் கூறுகின்றன!

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்ததும் அலெக்சாந்தர் மன்னனால் கட்டப் பட்டதுமான அலெக்சாந்திரியாப் பட்டினத்தைப் பற்றிய ஒரு கதையைச் சொல்லித் தன்னுடைய துயரத்துக் குரிய காரணங்களை வேலவன்கோதையிடம் விளக்கினாள் நீலவல்லி!

ஃ ஃ ஃ



வீரமும் படையாற்றலும் நிரம்பிய மசிடோனிய நாட்டு மன்னன் பிலிப், ஒரு நாள் தனது அரசவையில் உட்கார்ந்திருந்த போது, குதிரைகளை விற்பனை செய்யும் ஒரு பெரிய வணிகன் அங்கே வந்தான். உலக வரலாற்றில் புகழ் பெறக் கூடிய தகுதி வாய்ந்ததும், உயர்ந்த அங்க அடையாளங்கள் கொண்டதுமான ஒரு குதிரை தன்னிடம் இருப்பதாகவும், அதை அரசனுடைய பார்வைக்குக் கொண்டு வந்திருப்பதாகவும் கூறினான்.

குதிரையை அரண்மனையின் முற்றத்திலே திறந்தவெளியில் கொண்டு வந்தார்கள். அங்க அடையாளங்களையும் சுழிகளையும் நன்றாகப் பார்ப்பதற்காகக் கதிரவனின் வெளிச்சத்தில் நிறுத்தினார்கள். அரசன் குதிரையைப் பார்வையிட்டான். பார்த்தவர்களுக்கு மெய்சிலிர்க்கும்படியான உயரமும், அழகிய காதுகளும், அரசத் தோற்றமும் கொண்டு விளங்கிய குதிரை மன்னனைக் கவர்ந்தது! விலை பேசி வாங்குவதற்கு முன்னால் அதில் ஏறிப் பார்க்கவேண்டு மல்லவா? வீரர்களை அழைத்து அதில் ஏறும்படி கூறினான் மன்னவன். ஆனால் என்ன வியப்பு, யாராலும் அதன் அருகிலே செல்ல முடியவில்லை! குதிரை கலைந்தது. திமிறியது. வலிந்து ஏற வந்தால் கீழே தள்ள முனைந்தது! அதை விற்க வந்த வணிகன் அதிர்ச்சியுற்றுக் கலங்கினான். அரசனோ என்றால் வெகுண்டான். அங்கிருந்த வீரர்கள் எல்லாரும் திகைப்பும் அச்சமும் மேலிட்டவர்களாய்ச் செயலற்று நின்றார்கள்.

''அப்பா! நான் முயன்று பார்க்கட்டுமா?'' என்று ஒரு குரல் கேட்டது, கூட்டத்திலிருந்து! வீரர்களையெல்லாம் விலக்கிக் கொண்டு இளவரசன்—இளைஞன்கூட இல்லை, பையன் என்று சொல்ல வேண்டும், அவன் — முன்னால் வந்தான்!

''மகனே, நீயா?'' என்று கேட்டான் தந்தை பிலிப் மன்னன்.

''ஆமாம் அப்பா. தயங்காதீர்கள். எனக்கு உத்தரவு கொடுங்கள்!'' என்றான் அரச மகன்!

மன்னன் புன்முறுவல் செய்தான், பரிவும் கவலையும் கலந்த நிலையில்!

மின்னல் பாய்வது போலக் குதிரையின் அருகிலே சென்றான் இளவரசன்! பிடியைப் பற்றி அதை மெதுவாகப் பக்குவமாக மறு பக்கம் திருப்பி நிறுத்தினான். முதுகிலே ஒரு தட்டுத் தட்டினான். அடுத்த விநாடி ஒரு துள்ளுத் துள்ளிக் குதிரை மீது ஏறினான் அரச குமாரன். காற்றாகப் பறந்து கதிரவனின் ஒளியிலே அந்தத் திறந்தவெளியில் ஒரு சுற்றுச் சுற்றி வந்து, அரசனுக்கு முன்பாகக் குதிரையை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கினான்! அங்கே கூடியிருந்த அத்தனை வீரர்களும் வியப்பிலே மூழ்கி அசைவற்று நின்றார்கள்! மகனை அப்படியே மெய்யோடு மெய் சேர்த்து அணைத்துக் கொண்டே உடல் பூரித்தான் மன்னன் பிலிப்.

''அப்பா! குதிரையை மேற்கே பார்த்து நிறுத்தியிருந்தார்கள். உதயக் கதிரவனின் ஒளியில் குதிரையின் நிழல் நீளமாக விழுந்தது. அந்த நிழலைக் கண்டு கலைந்தது குதிரை. ஏறும் போதோ அந்த நிழல் அசைவதைப் பார்த்துப் பதற்றம் கொண்டது! மேற்கே பார்த்து நின்ற குதிரையை நான் கிழக்குப் பக்கமாகத் திருப்பினேன். நிழல் தெரியாதவாறு நின்றதும் குதிரையின் கலக்கமும் நின்றது! தட்டிக் கொடுத்து ஏறி விட்டேன்!''

இவ்வாறு விளக்கம் சொன்னான் அரச குமாரன்! அவன் பெயர் அலெக்சாந்தர்!

"மகனே!" என்று அழைத்தான் அரசன். அப்படி அழைக்கும்போதே குரலில் உவகை பொங்கியது.

"மகனே! உன்னுடைய அறிவின் கூர்மைக்கும், ஆற்றலின் அகலநீளங் களுக்கும், என்னுடைய இந்த மசிடோனிய நாடு மிக மிகச் சிறியது. உனக்கு ஏற்ற மாபெரும் பேரரசை நீ கண்டு நிறுவுவாய் மகனே!" என்றான் தந்தை.

தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை! பிலிப் மன்னனுடைய சொல்லை அப்படியே மெய்ப்பித்தான் அலெக்சாந்தர். சில ஆண்டுகளில் உலகத்தின் புகழ் பெற்ற பகுதிகள் எல்லாம் அலெக்சாந்தரின் ஆட்சிக்கு உள்ளாயின! வீரத்தினால் வென்ற மக்களை யெல்லாம், பிறகு தனது அன்பினாலும் திறமையினாலும் மறுபடியும் இரண்டாம் முறை வென்றான் அந்த மாமன்னன்! எகிப்து நாட்டை வெற்றி கொண்டு, தனது பெயராலேயே அலெக்ஸாந்தர் கட்டி நிறுத்திய மாபெரும் நகரமே, அலெக்சாந்திரியா என்ற கடற்கரைப்பட்டினம்!

தமிழகத்து ஏற்றுமதிப் பொருள் களுக்கு மேனாடுகள் எங்கிலும் புகழும் சிறப்பும் ஓங்கியதற்குப் பெருந்தொடர்பாக இருந்தது, இந்த அலெக்சாந்திரியா நகரமே! அங்கே இருந்துதான் கிரேக்கரும் ரோமானியர்களும் மற்றவர்களும் தமது தமிழ் நாட்டுக்கு வந்து, வாணிபம் நடத்திப் பல பொருள்களை நம்மிடமிருந்து வாங்கிச் சென்றார்கள். நமக்கும் மேற்கு நாடுகளுக்கும் இடையே வாணிபக் கொள்வினையும் கொடுப்பினையும் மிகவும் நெருக்கமாயிற்று!

சேர நாட்டிலிருந்து நாள்தோறும் அலெக்சாந்திரியாவுக்குச் சென்று விற்பனையான ஆனைத் தந்தங்களும், தேக்கு மரங்களும், மிளகும், சோழ நாட்டு ஆடை வகைகளும், பாண்டி நாட்டு முத்துக்களும் பற்றி, வரலாற்று ஆசிரியர்கள் வியந்தவண்ணம் இருக்கிறார்கள். அத்தனை பெரிய வாணிபம் நடப்பதற்கு வேண்டிய முறையில் துறைமுகமும், அங்காடிகளும், பெரிய பெரிய வீதிகளும் கொண்டு அமைந்திருந்தது அலெக்சாந்திரியா நகரம்! ஏனென்றால் மாமன்னன் அலெக்சாந்தரே தனது கைப்பட வரைந்து காட்டி நிறுவனம் செய்த மாபெரும் நகரம்அது!

ஆம்; மரப்பலகையிலே மாக்கோலம் போடுவது போல, மாப் பொடியைத் தெளித்து, அதில் தன்னுடைய விரல்களினாலேயே கோடுகள் வரைந்து, தனது புதிய நகரத்தின் தெருக்களும், அங்காடிகளும், துறைமுகமும், அதன்



"உங்க பர்ஸில் செல்லாத நாலணு ஒன்று இருந்ததே! அதைச் செல்லுபடியாக்கி விட்டேன்."

"பலே; எப்படி?"

"நேற்று ராத்திரி காலட்சேபத் தட்டிலே கண்ணை மூடிண்டு போட்டுட்டேன்!"

முகப்பும், அரச பாட்டைகளும் எப்படி இருக்க வேண்டும் என்று, கட்டடக் கலைஞர்களுக்குப் படம் போட்டுக் காட்டினான் அலெக்சாந்தர்! பிறகு அதை விளக்கம் செய்து பேசிக் கொண்டிருந்த போது, குருவிகள் வந்து, மாவினால் ஆன அந்தக் கோல நகரத்தை அலகினால் கொத்தின! மாவு அல்லவா! அதைக் கண்டு அலெக்சாந்தர் புன்முறுவல் செய்தான். அப்போது அவனுக்கு அருகிலே இருந்த ஒரு ஞானி சொன்னான்:

"மன்னனே! குருவிகள் வந்து கொத்துவது செழிப்புக்கு ஓர் அருமையான முன்னறிவிப்பாகும்! நீ அமைக்கப் போகும் நகரம், வளமும் வாணிபச் சிறப்பும் வாய்ந்ததாக இருக்கப் போகிறது என்பதற்கும், அங்கே உலக மக்கள் அனைவரும் வந்து மொய்த்த வண்ணம் இருப்பார்கள் என்பதற்கும் இது ஓர் அறிகுறி!"

உண்மை; கோல மாவிலே உருவாகிய அந்தப் பெரிய நகரத்துக்கு தம்முடைய அரிசியும், ஏலமும், இலவங்கமும், மற்றும் உணவின் வாசனைக்கு வேண்டிய பரிமளப் பொருள்களும் மரக்கலம் மரக்கலமாகச் சென்றன! முத்துக்களும் புன்னாடு என்ற குறுநிலச் சரங்கத்திலிருந்து நீலக் கற்களும் ஏராளமாகச் சென்று குவிந்தன! சில ஆண்டுகள் கழித்து அங்கே தோன்றிய கலங்கரை விளக்கம், ஏறத்தாழ அறுநூறு அடி உயரத்தில் நின்ற அந்தக்



நடிகர்: என்னை 'புக்' பண்ணக் காத்திருக்கிறார் என்றாயே! அழைத்து வாயேன், அந்தப் படாதிபதியை!

காரியதரிசி: படாதிபதி இல்லே. போலீஸ் இன்ஸ்பெக்டர்தான் புக் பண்ண வந்திருக்கார், நம் பங்களாவுக்கு எதிரில் குப்பைத் தொட்டியில் காலி மதுபான புட்டி நாலு கிடந்ததாம்!

---

கலங்கரை விளக்கம், உலக அதிசயங்களில் ஒன்றாகத் துலங்கித் தமிழ் நாட்டிலிருந்து செல்லும் மரக்கலங்களை வழி மேல் ஒளி பொருந்திய விழியை வைத்து வரவேற்றது!

அலெக்சாந்தருக்குப் பிறகு அரசாண்ட மன்னர்கள் எல்லாரும் அலெக்சாந்திரியாவுக்கும் தமிழகத்துக்கும் இடையே நடந்து வந்த வாணிபத்தை வளர்த்து விரிவு செய்தார்கள். இதனால் தமிழகத்துக்கு வந்து நம்முடைய நகரங்களிலே பல யவனப் பெருமக்கள் தங்கினார்கள். யவனப் பெண்களும், அடிமைகளும், யவனப் பாதுகாவலர்களும் தமிழக அரண்மனைகளிலேயே வாழ்ந்தார்கள்! இவர்களைத் தவிர அடிக்கடி தங்கள் மரக்கலங்களிலே முசிறித் துறைமுகத்துக்கு வந்து போன யவன வணிகர்களுக்கோ கணக்கே இல்லை!

* * *



அலெக்சாந்திரியா நகரத்தின் இதய மையமான பகுதியிலே, முதன்மையான தெருக்கள் ஒன்றில் க்ளாடியஸ் என்ற பெயர் கொண்ட யவனவணிகன் ஒருவன் இருந்தான். கிரேக்க நாட்டில் பிறந்து அலெக்சாந்திரியாவில் குடியேறியவன் அவன்! முந்நூறு அடி அகலம் கொண்டு விளங்கிய வீதியான அந்தத் தெருவைப் போல, விரிந்த உள்ளமும் பரந்த மனப்பான்மையும் கொண்டவன். கிரேக்க நாகரிகத்திலே தோய்ந்தவனாதலால், கலை உணர்ச்சியும், கடவுட் பற்றும் நிரம்பியவன். தமிழ் நாட்டுக்கு அடிக்கடி வந்து போன காரணத்தால், தமிழகத்துக் கோவில்களிலும், தச்சு வேலைப்பாடுகளிலும், தமிழ் நாட்டுக் கலைகளிலும் பெரு மதிப்புக் கொண்டவன் க்ளாடியஸ்! அவனுடைய தொழில் இரத்தின வாணிபம்! ஒரு முறை தமிழ் நாட்டுக்கு வந்தான் என்றால் அவனோடு பல ஆயிரம் பொற்காசுகள் வரும். திரும்பிச் செல்லும் போது சேரநாட்டுக்கு வட கிழக்கில் உள்ள புன்னாட்டுச் சுரங்கத்திலிருந்து அரிய பெரிய நீலக் கற்கள் செல்லும். சில வேளைகளில் சேரநாட்டுக்கும் கொங்கு நாட்டுக்கும் நடுவில் இருந்த மலைகளிலே பிடித்த ஆனைகளையும் வாங்கிச் செல்லுவான்!

கோடிக்கணக்கில் என்று சொல்வார்களே, அப்படித் தொழில் செய்த ஒரு மாபெரும் அரச வணிகன் அந்தக் கிளாடியஸ்! யவனர், சோனகர், அராபியர் யாருமே அஞ்சி வியப்படையும் அளவுக்கு அவனுடைய வரவு செலவுகள் நடைபெற்றன தமிழ் நாட்டிலே!

அக்காலத்தில் மிகவும் புகழ்பெற்று விளங்கிய புன்னாட்டில், மாலவன் என்ற குறுநில மன்னன் அரசாண்டு வந்தான். ஒரு பெரிய நீலக் கல் சுரங்கத்துக்கு முதல்வனாக இருந்த காரணத்தால், மற்ற எல்லாக் குறுநில மன்னர்களையும்விட மாலவனுக்கு மிகுந்த புகழும் செல்வாக்கும் இருந்தன. சேர சோழ பாண்டிய மன்னர்கள் மூவருமே புன்னாட்டையும் மாலவனையும் நண்பனாக்கிக் கொள்ளவோ அல்லது வெற்றி கொள்ளவோ ஆசைப்பட்டார்கள்! துளு நாட்டு நன்னர்களோ என்றால் புன்னாட்டையும் அதற்குரிய நீலக்கல் சுரங்கத்தையும் ஒன்று சேர்த்து எப்படிக் கொள்ளையடிக்கலாம் என்று ஆழ்ந்து கருதி வந்தார்கள்! யவன வணிகர்கள் நீலக் கற்களை வாங்குவது வளர வளர, மாலவனிடம் பொறாமையும் அவனை வளைத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசையும் வளரலாயின! இந்த உணர்ச்சிகளை மேலும் அதிகப்படுத்தின, கிளாடியஸ் புரிந்த செழிப்பான நீலக்கல் வாணிபம்!

முசிறித் துறைமுகத்திலிருந்து அலெக்சாந்திரியாவுக்கு ஏராளமான நீலக்

கற்கள் செல்கின்றன என்பதும். இதற்கு முதன்மையான காரணம் ஹிளாடியஸின் வாணிபத் திறமையே என்பதும் நன்கு தெரிந்து கொண்ட மாலவன், தன் அரசவைக்குக் ஹிளாடியஸை அழைத்து அவனிடம் தனிப்பட்ட முறையிலே நட்புக் கொள்ளக்கருதினான்! ஆனால் இதன் விளைவு பெரியதோர் அரசியல் நிகழ்ச்சியாக உருவெடுத்தது! நீலவல்லியின் வாழ்வையும், கடம்பவேந்தனின் எதிர்காலத்தையும், வேலவன் கோதையின் கனவுகளையும், அவர்களின் காதலையும், பல உள்ளங்களின் ஆசைகளையும், பாசங்களையும், சேர்த்துப் பிணித்த ஒரு மாபெரும் பிணைப்பாக அமைந்தது இந்த உறவு !

வெள்ளைத்தீவு மண்டபத்தின் அழகிய படிக்கட்டிலே அமர்ந்து உள்ளம் பொருமினாளே நீலவல்லி, சீற்றத்தால் அவளுடைய கண்கள் சிவந்தனவே, அது கண்டு வேலவன்கோதை பதற்றம் அடைந்தானே, அத்தனைக்கும் முழு முதற் காரணமாக அமைந்தது, மாலவன் மன்னனுக்கும் ஹிளாடியஸ் என்ற யவன வணிகனுக்கும் ஏற்பட்ட இந்த ஆழ்ந்த நட்புத்தான்! உண்மையில் இது அத்தனை பெரிய உருவம் எடுக்கும் என்றும், அதனால் தங்களுடைய வாழ்வில் அத்தனை பெரிய மாறுதல்களும் அதிர்ச்சிகளும் நிகழும் என்றும், மாலவனோ அல்லது ஹிளாடியஸோ எதிர்பார்த்திருந்தால் அவர்கள் இருவரும் சந்தித்தே இருக்க மாட்டார்கள்! நீலக் கல் வாணிபத்தின் பொருட்டு அலெக்சாந்திரியாவிலிருந்து தமிழகத்துக்கு வந்திருக்கவே மாட்டான், ஹிளாடியஸ்! அப்படியே வந்திருந்தாலும் முசிறித் துறைமுகத்திலிருந்து தானே நேரடியாகப் புன்னாட்டுக்குச் சென்றிருக்க மாட்டான். அப்படிச் சென்றாலும் அரண்மனைத் தொடர்பையும், அரச நட்பையும் விரும்பியிருக்க மாட்டான்! அப்படியே அரண்மனைக்குச் சென்றிருந்தாலும் அரச நட்பை விரும்பியிருந்தாலும் இளவரசன் புனல்வேணியனிடம் அப்படி ஒரு உயிர்த் தோழமை பூண்டிருக்க மாட்டான்! அதன் விளைவாக எத்தனை சிக்கல்கள்! ஆனால் எதிர்காலம் என்பது ஒரு யவனத் தத்துவ ஞானி சொன்னது போல், மூடி முத்திரையிட்ட புத்தகம் அல்லவா! அதைத் திறப்பதும், அப்படியே திறந்தாலும் அதைப் படித்து ஐயமின்றிப் புரிந்து கொள்வதும் யாரால் முடிகிற செயல்! அதன் எழுத்து ஊசி முறி! அதன் மொழியோ துறவிகளுக்கே புரிகிற கால தேவதையின் பேச்சு !



புன்னாட்டின் தலைநகரமாகிய கட்டூரில் உள்ள 'யவன இருக்கை' என்ற பெரிய விடுதியிலே தங்கியிருந்தான் ஹிளாடியஸ்! நீலக்கல் சுரங்கத்திலிருந்து தனக்கு வேண்டிய நீலக் கற்களையெல்லாம் வாங்கி ஆயிற்று. இனி இன்னும் ஒரு வாரத்தில் இங்கிருந்து முசிறிக்குச் சென்று, அங்குள்ள தனது மரக்கலத்திலே அலெக்சாந்திரியாவுக்குப் புறப்பட வேண்டியதுதான்!

அது மார்கழி மாதம். ஹிப்பாலஸ் கண்டுபிடித்த குறுக்கு வழியிலே சென்றால் நாற்பது நாட்களில் அலெக்சாந்திரியாவுக்குப் போய் விடலாம். அதற்குப் பருவக் காற்றுகள் துணை செய்ய வேண்டும். வாணிகக் கணக்குப் படி மார்கழிப் பிற்பகுதியில் புறப்பட்டு விட வேண்டும். அப்படிச் சென்றால் இந்த ஆண்டு முடிவுக்குள் இன்னொரு முறை முசிறிக்கு வந்து போகலாம் !

இவ்வாறு பயணத்தை வரையறை செய்தவாறு, விடுதியிலே தனது அறையில் தனியாக ஒரு சாய்மானத்தில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான் ஹிளாடியஸ். அப்போது அரண்மனையிலிருந்து வாணிபத் தொடர்பாளனும் பன்மொழிப் புலவனுமாகிய பொன்வண்ணன் வந்திருப்பதாகப் பணியாளன் வந்து தெரிவித்தான்.

---

"பாவம்! உங்க அம்மாவுக்குச் சௌகரியமாகக் காது கேட்க ஒரு 'ஹியரிங் எய்டு' வாங்கிக் கொடுத்து விடுங்கள். நாங்கள் சண்டை போடுகிற போது, நான் இரைந்து கத்திக் கத்தி எனக்கு நெஞ்சு வலிக்கிறது."



"வாருங்கள் உள்ளே !" என்று மேற்கு மொழியிலே அவனை வரவேற்று அறைக்குள்ளே அழைத்துச் சென்றான் கிளாடியஸ்.

"அதிக நேரம் தொல்லை கொடுக்கப் போவதில்லை. ஒரு முக்கியமான பணியாக வந்திருக்கிறேன்!" என்றான் பொன்வண்ணன்.

"என்ன அப்படி அவசரம்?"

"கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக நமது நீலக் கல் சுரங்கத்தில் நீங்கள் வாங்கிச் செல்கிற கற்களையும் இந்த வாணிபத்தில் நீங்கள் காட்டுகிற ஊக்கத்தையும் பற்றிக் கேள்விப்பட்டு, எங்கள் அரசர் மாலவ மன்னர் மிகவும் மகிழ்ச்சி அடைகிறார். அவருடைய பாராட்டை உங்களிடம் நேரில் தெரிவிக்கும்படி சொன்னார்."

"மிக்க நன்றி. ஆனால் வாணிப முறையிலேதான் இந்த நீலக் கற்களை வாங்கிப் போய், எங்கள் நாட்டிலே பெருத்த ஊதியத்துக்கு இவற்றை விற்கிறேன். இதில் நான் தமிழகத்துக்கோ அல்லது உங்கள் அரசருக்கோ செய்துள்ள தொண்டு எதுவும் இல்லையே !" என்று பணிவோடு கூறினான் கிளாடியஸ்.

"அப்படி இல்லை! வாணிபந்தான் என்றாலும் அதில் நீங்கள் காட்டுகிற ஊக்கமும் அதனால் எங்களுக்கு ஏற்படுகிற விற்பனை வளமும் எங்கள் அரசருக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகின்றன!" என்றான் பொன்வண்ணன்.

"நண்பரே! உங்கள் நீலக் கற்களுக்கு அலெக்சாந்திரியாவின் அங்காடிகளிலே எத்தனை மதிப்பு இருக்கிறது என்பது உங்கள் அரசருக்கு முழுதும் தெரியாது போலும்! ரோமானியரும் எங்கள் நாட்டுக் கிரேக்க மக்களும் நான் என்ன விலை சொன்னாலும் அதைக் கொடுத்து இந்த நீலக் கற்களை வாங்கிச் செல்கிறார்கள். இப்படியே போய்க் கொண்டிருந்தால், எங்கள் நாட்டிலிருந்து ஆண்டுதோறும் தமிழ்நாட்டுக்கு வருகிற பொற்காசுகளின் எண்ணிக்கையைப் பார்த்து, எங்கள் அரசச் சுற்றத்தார்களே மனம் தாளமாட்டார்கள் என்று தோன்றுகிறது! ஏற்கனவே இரண்டொரு அறிஞர்கள் அதைப் பற்றிப் பேசத் தலைப்பட்டு விட்டார்கள்! ஆனாலும் என்ன? இரத்தினங்களில் எங்கள் மக்களுக்குள்ள எல்லையற்ற ஆசையை யாராலும் தடுத்து நிறுத்த முடியாது! அதிலும் உங்கள் புன்னாட்டு நீலக் கற்களின் மீது எங்கள் கிரேக்கப் பெண்மணிகளுக்குள்ள காதல் இருக்கிறதே அது ஈடு இணையற்றது! அதற்காக எதையும் கொடுப்பார்கள் அவர்கள்!"

இவ்வாறு ஒரே பெருமிதத்தோடு சொன்னான் அந்த யவன வணிகன் !

"கிளாடியாஸ் பெருமகனே! நீங்கள் சொல்வதை நான் மறுத்துப் பேசவில்லை. என்றாலும் நல்ல முறையில் வளமாக வாணிபம் செய்யும்பொழுது, கொள்பவரும் கொடுப்பவரும் ஒருவருக்கொருவர் பாராட்டிக் கொள்வதும், இருவருடைய நலத்தையும் எண்ணி நட்பை வளர்த்துக் கொள்வதும் முறைதானே ? அந்த வகையிலே எங்கள் மாலவ அரசர் உங்களைக் கண்டு பேச விரும்புகிறார்!"

"ஆகாகா! நான் உங்கள் அரசரைக் காண வரமாட்டேன் என்று சொல்லவில்லையே ! என்னை அவர் பாராட்டுகிறார் என்றீர்களே, அதற்கு மறுமொழி சொன்னேன். அவ்வளவுதான். மற்றப்படி உங்கள் 'அரசரைப் பார்க்கும் நன்னேரத்தை ஒரு பெரிய வாய்ப்பாக அல்லவோ மதிப்பேன் நான் ! அதிலும் உங்கள் புன்னாட்டு அரண்மனையின் சிற்ப வேலைப்பாடுகளைப் பற்றியும், அங்குள்ள கலைப் பொருள்களைப் பற்றியும் நிறையக் கேட்டிருக்கிறேன். உங்கள் அரண்மனைப் பூங்காவிலே மயில்களும், கிளிப் பிள்ளைகளும், நாகணவாய்ப் பறவைகளும் 'நூற்றுக்கணக்கில் இருப்பதாகவும், அவற்றுக்கு வகை வகையான நீலக் கல் நகைகள் அணிந்து வைத்திருக்கிறீர்கள் என்றும் கேட்டதிலிருந்து அவற்றைப் பார்க்க வேண்டும் என்று ஓர் ஆசையும் எனக்குண்டு!" என்றான் கிளாடியஸ்.

"மெய்தான்! எங்கள் அரசர் மாலவருக்குக் கலைகளிலே ஆர்வம் அதிகம். எது செய்தாலும் அழகுணர்ச்சியோடு செய்வார். அதோடு யவன நாட்டு நாகரிகத்திலும், உங்கள் நாட்டுக் கடவுட் கொள்கைகளிலும் மிகுந்த ஈடுபாடு உண்டு. இவை எல்லாவற்றையும் மனத்தில் கொண்டுதான், நீங்கள் இருவரும் சந்தித்தால் அந்த உறவு நல்ல முறையில் வளரும் என்று நானும் அதை விரும்பினேன் !" என்று சொன்னான் பொன்வண்ணன்.

'யவன இருக்கை'யின் பணியாளன் இரண்டு குவளைகளிலே தேன் கலந்த மாம்பழச் சாறு கொண்டு வந்து வைத்தான். பொன்வண்ணனிடம் ஒன்றைக் கொடுத்து விட்டு, மற்றதைத் தான் வாங்கி ஒரு மடக்குக் குடித்துக் கொண்டே கிளாடியஸ் பேசினான்:

"தேன் கலந்த இந்தப் பழச்சாற்றில் இரண்டே இரண்டு துளி மிளகுத்

தூள் தூவுகிறீர்களே, இது ஒன்றிலிருந்தே தமிழராகிய நீங்கள் எத்துணை கலையுணர்வு நிரம்பியவர்கள் என்று தெரிகிறது. இந்த மிளகுத் தூளில் ஒரு துளி கூடினால் காரம் முனைக்கும். ஒரு துளி குறைந்தால் நாவுக்கு மழமழ என்றிருக்கும். இரண்டே இரண்டு துளி என்ற அந்த ஒரு துல்லியமான கணக்கை எப்படி ஆராய்ந்து அளந்து கண்டுபிடித்தீர்கள்?''

பழச் சாற்றிலிருந்து தமிழர்களின் இசைக் கலை, கூத்து, சிற்பம் என்று ஒவ்வொன்றாகப் பேசத் தொடங்கினான் கிளாடியஸ்! திடீரென்று நினைவு வந்தவன் போல் சொன்னான்:

''என்னை மன்னிக்க வேண்டும். நீங்கள் முக்கியமான பணியாக வந்தேன் என்றீர்கள். நானோ பேசிக்கொண்டே போகிறேன், நீங்கள் வந்த வேலையை மறந்துவிட்டு! கருணை கூர்ந்து உங்கள் அரசரிடம் என் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவிப்பதோடு, அவரை வந்து காணுவதை ஒரு பெரிய வாய்ப்பாகவே நான் கருதுவதாகவும் சொல்லுங்கள்!''

''அப்படியானால் நாளை மறு நாளே அரசவையில் மன்னரைச் சந்தித்துப் பேசி விட்டு, அன்றே எங்களுடைய பூங்காவில் மயில்களையும், நாகணவாய்ப் பறவைகளையும் பார்த்துக்கொண்டே நிலா விருந்தில் கலந்து கொள்ளலாமே நீங்கள்! ஏற்பாடு செய்து விடுகிறேனே!''

''நிலா விருந்தா?''

''ஆமாம். அரசரைக் காணுவதோடு எங்கள் அரசவைப் பெருமக்களில் சிலரையும் நீங்கள் இந்த விருந்திலேயே சந்தித்து விடலாம். மாதந்தோறும் முழு நிலாவின் போது எங்கள் அரசர் இப்படி ஒரு விருந்து கொடுப்பது வழக்கம். பழச் சாற்றைப் பற்றிச் சொன்னீர்களே, மாலவ மன்னர் புன்னாட்டுப் பூங்காவிலே எப்படி நிலா விருந்து நடத்துகிறார் என்ற கலையழகையும் நீங்கள் பார்க்க வேண்டும். அதோடு அருங்கலைஞராகிய எங்கள் இளவரசரையும் நீங்கள் கட்டாயம் சந்திக்க வேண்டும்!''

''சரி; அப்படியே செய்வோம்!'' என்றான் யவன வணிகன் கிளாடியஸ்!

''நானே இங்கு வந்து உங்களை அழைத்துப் போகிறேன்!'' என்று சொல்லி அங்கிருந்து புறப்பட்டான், புன்னாட்டு வாணிபத் தொடர்பாளனாகிய பொன்வண்ணன்! **(தொடரும்)**

## மதியூகி சேவகன்!












# பலரைப் போல் இதன் இன்சுவையைப் பருகுங்கள்

ப்ரூக் பாண்ட் A-1 தேயிலைத் தூள் இன்சுவையில் நிகரற்றது. மதிப்பில் ஒப்பற்றது. ஏனென்றால் ஒரு பாக்கெட்டிற்கு அதிக கப்புகள் சுவையான தேநீரை ப்ரூக் பாண்ட் A-1 தேயிலைத் தூள் உங்களுக்குக் கொடுக்கிறது. ப்ரூக் பாண்ட் A-1 தேயிலைத்தூளைச் சுவைத்துப் பாருங்கள். லட்சக்கணக்கான மக்கள் முன்பே சுவைத்து வருகின்றனர்.

JWT BB-3438





# காரணம் கேட்டு வாடி

**வா**ழ்க்கையில் பலவிதத்திலும் தோல்வியடைந்து தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குத் துணிந்து விடுகிறவர்களையெல்லாம் ஒன்று சேர்த்துச் சங்கர் என்னும் ஒரு புண்ணியவான் அவர்கள் மன நிலையை மாற்றி அமைக்கப் பாடுபடுகிறான்.

சங்கர் நடத்தும் அந்த விடுதிக்குப் புதிதாக ரத்னு என்ற யுவதி வந்து சேருகிறாள். அவளும் தற்கொலை செய்துகொள்ள முயன்றவள்தான். ரத்னு வந்ததும் அந்த விடுதி புத்துயிர் பெறுகிறது. ரவி, காதலில் தோல்வியடைந்தவன்; சந்திரா தான் அழகில்லாதவள் என்ற தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொண்டு அதற்கே அடிமையாகி அவதிப்படுபவள்; குமார் என்ற வாலிபன் தன்னம்பிக்கை இழந்தவன் போல் நடித்து, எல்லாரையும் ஏமாற்றி விடுதியில் சுகமாக வாழ்பவன். இவர்கள் எல்லாரையும் ரத்னு சரிப்படுத்த முயல்கிறாள். அவர்களில் தர்மராஜன் என்ற கிழவர் மிக மிக முக்கியமானவர்; கலி முற்றிவிட்டது, தர்மங்களெல்லாம் நசித்துப் போகின்றன என்று வாய் ஓயாமல் சொல்லிக் கொண்டு வேதனைப்படுகிறவர். நாடகம் முழுவதற்கும் நடுநாயகமாக விளங்கி எல்லாரையும் ஆட்டி வைக்கிறார்.

தர்மராஜன் பாகத்தை ஏற்றிருப்பவர் வி. கோபாலகிருஷ்ணன். பல படங்களில் நடித்து அநுபவம் பெற்றவர். 'கிழவ'ரின் பேச்சு, நடை, உடை, முகபாவம் எல்லாமே நன்றாயிருந்தன. நல்ல நடிப்பு.

ரத்னுவாக வந்தவர் சினிமா நடிகை மனோரமா. துடிப்பும், மிடுக்கும், அழகையுமாக நன்றாய் நடிக்கிறார்.

நாடகம் முழுவதும் ஹாஸ்யமாயிருந்தாலும் சோக ரஸத்துக்குச் சந்திரா இருக்கிறாள். அந்தப் பாத்திரத்தை ஏற்றவர் அருமையாக நடித்தார்.

இவ்வளவு இருந்தும் நல்ல கதையம்சமோ, திருப்பங்களோ, உணர்ச்சி ததும்பும் கட்டங்களோ இல்லாதது குறையாகத்தான் தோன்றுகிறது. தலைப்பு புதுமையானது; அது நாடகத்துக்குப் பொருந்தாவிட்டால் என்ன குடி முழுகிப் போய்விட்டது!

# ஆசைக்கு அளவில்லை!

**ஒ**வ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான ஆசை. ஆசையில்லாதவர்களே இல்லை.

பாகவதர் பங்காருசாமி ஒரு ருத்திராட்சப் பூனை. அவர் மனைவி சுசீலா அவருக்கு எந்த விதத்திலும் குறைந்தவளல்ல.

கதிரேசன் டாக்ஸி ஸிண்டிகேட் முதலாளி உழைக்காமல் சம்பாதிக்கும் பேர்வழி. வாலிபர்களான சிவராமன், அண்ணுசாமி இருவரும் பெண்ணுசை பிடித்தலைகின்றனர். வேணுவின் தங்கை பிரேமாவையே இருவரும் சுற்றி வந்து அசடு வழிகின்றனர். வேணு நல்லவன்; நேர்மையாளன்.

நல்ல கருத்தைக் கொண்ட இந்நாடகம் ஒரே ஹாஸ்யமாக அமைந்திருப்பது விசேஷம். பாகவதராக வரும் திரு என். வி. சுப்பிரமணியம் நாடகத்தின் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றிருப்பதுடன் தாம் ஏற்ற பாகத்தையும் மிகச் சிறப்பாக நடித்தார். மிகவும் இயல்பான பேச்சும், பாத்திரத்துக்கு ஏற்ற தோற்றமும் கொண்ட அவரைப் பார்த்தால் அமெச்சூர் நடிகராகவே தோன்றவில்லை. பாகவதரின் மனைவியாக வந்த ராணியின் நடிப்பு தத்ரூபமாயிருந்தது. பிரேமாவாக நடித்த குமாரி தேவகி, சிரித்துப் பேசும் குமரிப் பெண்ணாக நன்றாய் நடித்தார்.

இந்த முழு ஹாஸ்ய நாடகத்தில், ஒரே ஒரு சோகக் காட்சி. சுப்புடு என்ற அப்பாவி, பிரேமா இறந்துவிட்ட தன் தங்கையின் சாயலாக இருப்பதால் அவளிடம் பாசத்தோடு பழகுகிறான். அதன் காரணமாக வேணுவின் ஆத்திரத்துக்கு ஆளாகி அவனிடம் அடிபடுகிறான். பிறகு தன் தங்கையின் திருமணத்துக்காகத் தான் சேர்த்து வைத்திருந்த ஐயாயிரம் ரூபாயையும் பிரேமாவின் திருமணத்துக்குப் பயன்படட்டும் என்று வேணுவினிடம் கொடுத்த காட்சி மனத்தை உருக்கிவிட்டது.

கோமதி சுவாமிநாதன் எழுதிய இந்நாடகம்—நாடகப் போட்டியில் பரிசு பெற்றிருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.



# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

மீராவுக்கு விஷயம் புரிந்தது. 'திருமணத்தை ஆட்சேபித்துத் தானாகவே தீ வைத்துக் கொண்டு விட்டதாக நினைக்கிறார்கள். அதனால் இப்போது திருமணத்தையே நிறுத்திவிடக் கூடத் தயாராக இருக்கிறார்கள்!'

மீரா எதை விரும்பினாளோ, அது உண்மையிலேயே நடந்துவிடப் போகிறதா? இதை அறிந்தவுடன் அவளது உடலணுக்கள் அவ்வளவும் ஆனந்த நர்த்தனமிட்டனவா?

இல்லை... இல்லை....

தூய மீராவினால் அசத்தியத்தின் மீது ஆனந்தத்தை எழுப்பிக்கொள்வது அசாத்தியமல்லவா?

அவள் தானாகத் தீ மூட்டிக்கொள்ளவில்லையே! அப்படி இவர்கள் நினைப்பதை அனுமதித்து, அந்தப் பொய்யினால் பலன் பெறுவது நியாயமா? மீராவின் மனச்சாட்சி சத்தியத்தின் நீதி மண்டபத்தில் வாய் விட்டுப் பேசியது.

''அம்மா, தானாக எனக்கு நெருப்பு இட்டுக் கொள்ளவில்லை; அப்படி நான் ஒருபோதும் செய்துகொள்ள மாட்டேன். அது அகஸ்மாத்தாக நிகழ்ந்த விபத்துத்தான்'' என்றாள்.

சந்திரமுகி ராவ்தூதாவைப் பொருள் நிறைந்த பார்வை பார்த்தாள். ராவ்தூதா மற்றவர்களைப் பார்த்து, ''இனி விவாக ஏற்பாடுகளை நிறுத்தாமல் தொடர வேண்டியதுதான்'' என்றார்.

ஃ ஃ ஃ

கண்ணன் தன் கண்கடையில் உருண்ட முத்துக்களைச் சுண்டிவிட்டுக் கொண்டு மதுமங்களைப் பார்த்தான்.

''பிற மனிதர் தன்னைத் தீண்டக் கூடாது என்பதில் மீராவுக்கு இருந்த ஆர்வத்துக்கு எள்ளளவும் குறைவின்றி அசத்தியம் தன்னைத் தீண்டக் கூடாது என்றும் அவள் தீவிரமாக இருந்தாள். சாதாரணத் தீயில் மட்டும் அவள் சிக்கவில்லை. சத்தியத்தில் அக்கினிப்

பிரவேசம் செய்து உள்ளம் கருகாமல் வெளி வந்து விட்டாள்! இப்படிப்பட்ட ஓர் உத்தமியை நான் என்ன பாடுபடுத்த வேண்டியிருக்கிறது?'' என்று கேட்டு நாத் தழுதழுத்து நிறுத்தினான் கோவிந்தன்.

'அவன் பாடுபடுத்துவது அதிகமா? பாடுபடுவது அதிகமா?' என்று மதுமங்களன் வியந்தான்! 'அவனை இன்பமும் துன்பமும் அணுகா என்பார்களே, அது உண்மைதானா?' என்றும் வியந்தான்.

யாரிடமும் பரிதாபம் கொள்ள யாருக்கும் உரிமை உண்டு. மன்னனிடம்கூட ஓர் ஆண்டிப் பரதேசிப் பரிதாபம் காட்டலாம். பரந்தாமனிடமே மதுமங்களனுக்குப் பரிதாபம் சுரந்தது.

''நீ இன்பம் துன்பம் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன்; வெறுமே நாடகமாடி எங்களை ஏமாற்றுகிறாய் என்றல்லவோ எல்லோரும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்? ஆனால் உண்மையில் நீயே இப்படித் துன்பத்தில் அடிபட்டிருக்கிறாயே, அது எப்படி?'' என்று கண்ணனைக் கேட்டான் மதுமங்களன்.

மாதவன் முறுவல் புரிந்து மறுமொழி சொல்வான்: 'நாடகத்தில் ஒருவன் நடிக்கும் போது பல உணர்ச்சிகளைக் காட்டுகிறான்; பல சம்பவங்களில் ஈடுபடுகிறான். எனினும் இவை தனக்கல்ல என்று தெரிந்து, நடிகனாகத் தனித்து நிற்கிறான். ஆனால் இவனே ஒரு காட்சியில் கனிகளை உண்ணும் போதும், இன்னொரு காட்சியில் அடிபடும் போதும் அந்தக் கனிகளைப் பாத்திரம் மட்டும் உண்டதா, பாத்திரமேற்றவனும்தானே உண்டான்? அடியைப் பாத்திரம் மட்டும் பட்டுக் கொண்டதா, பாத்திரமேற்றவனும்தானே பட்டுக் கொண்டான்? மது, உன்னிடம் ஏன் இப்படியெல்லாம் நான் பேச வேண்டும்? உனக்கே இதெல்லாம் தெரியும்.''

எளிய மது யோசித்தான். அவனுக்கே தெரியும் போலத்தான் இருந்தது.

''சரி, எனக்குத் தெரியாத கதையைச் சொல். மீராவுக்குப் பிடிவாதமாகக் கலியாணம் நிச்சயம் செய்தார்கள்..... அதற்கு அப்புறம்?''

## அத்தியாயம் 12

# மகாராணாவின் மனைவி!

அப்புறம் என்ன?

விவாகம் நெருங்கி நெருங்கி வந்துவிட்டது. கடைசி விநாடியில் கண்ணன் இரட்சிப்பான் என்று மீராவும் பொறுத்துப் பார்த்தாள்.

மாடத்திலுள்ள தன் அறையிலிருந்து ஓயாமல் வெட்டவெளியான வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். தன் சிந்தனையும் ஸ்தம்பித்து அப்படி வெட்ட வெளியாகிவிட வேண்டும் என்ற ஆசையின் மீதே அப்படிப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய சிந்தனை அடியோடு மரத்துப் போகாதவாறு ஆனந்த அமர்க்களங்கள் அவளை இவ்வுலகின் பயங்கர உண்மைகளுக்கு அவ்வப்போது இழுத்தன.

எதற்காக இப்படிக் கூச்சல் போட்டுப் பாடுகிறார்கள், பேசுகிறார்கள், சிரிக்கிறார்கள்? 'தன்னொருத்தியின் இன்பத்தைப் பறிப்பதில் இத்தனை பேருக்கு இவ்வளவு இன்பமா? அந்த இன்பம் கரை புரண்டு பாடும்படி இப்போது என்ன வந்து விட்டது?'

மேர்தா அரண்மனையில் வெகு அபூர்வமாகவே நிகழும் 'தோரண் தாரண்' வந்து விட்டது! அதற்காகத்தான் இத்தனை அட்டகாசங்களும்.

அரண்மனை வாயிலில் தோரணம் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கிறது. மரச் சட்டங்களாலான ஒரு சமபக்க முக்கோணமே அத் தோரணம். முக்கோணத்தின் மேல் முனையில் தோகை விரித்தாடும் மயில் சின்னம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

தோரணத்தின் அருகே அவ்வப்போது ஓர் ஈட்டி பாய்ந்து பாய்ந்து விலகுகிறது. ஈட்டியை எய்வது யார்?

வேறு யார்? சாட்சாத் மேவார் மகாராணா கும்பாஜிதான். மேவாரின் துவஜமாகிய தகதகக்கும் சூரியக் கொடி பின்னால் பறக்க, பஞ்சகல்யாணிக் குதிரை மீதேறிக் கும்பாஜி ராணாதான் கையில் ஈட்டியுடன் தோரணத்தை நோக்கி நோக்கிப் பாய்கிறான். அதனை அவன் ஈட்டி முனையாலே குத்திக் கீழே தள்ளி விட்டால் அதுதான் 'தோரண், தாரண்'. மீராவை அவன் மணக்க வேண்டுமாயின் இதைச் செய்தேயாக வேண்டும்.

மகாவீரன் ஒருவனுக்கு இது என்ன பெரிய காரியம் என்று கேட்கலாம். தோரணத்தைத் தள்ளுவது எளிதுதான். ஆனால் அதற்கு எதிர்ப்பு இல்லாமல் இருக்க வேண்டுமே! எதிர்ப்பவர்கள் ஆடவ வீரர்களாயினும் அவர்களையெல்லாம் கும்பாஜி நொறுக்கித் தள்ளிவிடுவான். ஆனால் மேர்தாவின் இளம் பெண்களல்லவா இவன் தோரணத்தை அணுகாதவாறு எதிர்க்கிறார்கள்?

அவர்கள் எப்படி எதிர்க்கிறார்கள்? வில்லும் அம்பும், கத்தியும் கேடயமும் தாங்கியா? இல்லை இல்லை. மாடத்தில் நின்று கொண்டு பல தாம்பாளங்களில் கொட்டி வைத்துள்ள பலாச புஷ்ப சூரணத்தைப் பிடிப்பிடியாக அள்ளிக் கும்பாஜியின் மார்க்கத்தில் தூவுகிறார்கள். அவன் கண்களிலெல்லாம் பொடி படுகிறது. தோரணத்தை நோக்கி வந்தவன் பின்வாங்குகிறான்.

குதூகலித்துச் சிரித்துக் கொண்டே யுவதிகள் பாடுகின்றனர்.

தீராதி தீரர்வர் சூராதி சூரர்வர்
மீராவுக் கேற்றவரோ?

கும்பராணாவின் உடன் நிற்கும் மேவார் பெருமக்களெல்லாம் சிரிக்கிறார்கள். அவர்களுக்குத் தலைமை தாங்கும் சண்டன், ''அப்பனே, இந்த மேர்தா சிறுக்கிகள் முன் நம் மானத்தைக் கப்பலேற்றுகிறாயே? அடுத்த

வீச்சில் இந்தத் தோரணமே சூரணமாகி அவர்கள் கண்களிலெல்லாம் போய் விழ வேண்டும்'' என்று வேடிக்கைக் கோபத்துடன் ஆக்ஞாபிக்கிறான்.

கும்பா புரவியை மீண்டும் ஆக்ரோசமாகத் தோரணத்தை நோக்கிச் செலுத்துகிறான்.

மாடத்திலிருந்து கூடை கூடையாக அவன் தலையில் மலர்கள் கொட்டியபடி இருக்கின்றன. அதிலேயே திணறித் தவித்தபடி பின் வாங்குகிறான் கும்பாஜி.

பூவைக் கண்டு பயந்தார்
பூப்பொடியைக் கண்டு பயந்தார்
பூவை கையைப் பிடிக்க - இப்
பூமியில் இவர்க்கிணை உண்டோ ?

என்று பாடிக் கையைப் பெரிதாகக் கொட்டிக் கொண்டு கேலி செய்கின்றனர் மேவார் மங்கையர்.

கும்பாஜி ரோஷத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு மீண்டும் பாய்கிறான். பூப்பொடியும், மலர்களும் மழையாக வர்ஷிக்கின்றன. ஆனால் அவன் பொருட்படுத்தவில்லை. ஈட்டி முனை தோரணத்தைத் தொட்டு விட்டது. தோரணம் 'மளார்' என்று முறிந்தது.

உடனே எங்கும் ஆனந்த பரவசம்தான். இவ்வளவு நாழிகை கேலி செய்த பெண்களும் இப்போது தோற்றுப் போனதால் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ளவில்லை. முன்னிலும் உற்சாகமாகப் பாடுகிறார்கள்.

ஈட்டிகொண்டே புகழ் ஈட்டுவீரர்
தோரணம் தாழ்த்தி ஆரணங்கை அடைந்தார்

என்று கானம் செய்கிறார்கள். ''தோரணத்தை வீழ்த்தியதுபோல் மீராவையும் தன்னிடம் வீழ்த்திக் கொண்ட வெற்றி வீரர் வாழ்க!'' என்று வரவேற்கிறார்கள்.

மீராவுக்கு இதவ்வளவும் பொய்க் கனவாக இருக்கிறது. திகைப்பூண்டை மிதித்தவள் போல் எங்கோ மிதந்து கொண்டிருக்கிறாள்.

அவளுக்கு அலங்காரம் தொடங்குகிறது. விஜயநகரத்திலிருந்து மேவார் மன்னர் தமது மணமகளுக்குத் தருவித்திருந்த அற்புதமான பட்டில் காங்ராவும், கஞ்சுளியும், தாமணியும் அணிவிக்கிறார்கள். அந்த ஆடைகளின் உடலிலெல்லாம் தூய பசும் பொற்சரிகை வேய்ந்திருக்கிறது. கரையாகவோ முத்துச் சரங்களே கோக்கப் பட்டிருக்கின்றன. சர்வாங்கங்களுக்கும் ந வ ர த் தி ன ங் க ள் இழைத்த அணிகளைப் பூட்டுகின்றனர். அதில் 'பாஜுபந்து' என்கிற வங்கி சுமங்கலிகளுக்கே உரியது; அது முறையாக மீராவுக்கு அணிவிக்கப்படும் போது ஏனோ அவளது வயிறும், மேனியும் நெஞ்சும் ஒரு குலுங்கு குலுங்குகின்றன. 'மாங்க்' என்ற வகிடு நிறைய சிந்தூரத்தை அப்புவதும், இனி அவள் 'கட்டுக்கழுத்தி' என்பதைக் குறிக்கும். மீராவின் வகிட்டைத் தொட்டவர்கள் அது ஏன் அப்படி எரிமலையாகக் கொதிக்கிறது என்று ஆச்சரியப்படுகிறார்கள்.

புஷ்பங்களைக் கணக்கு வழக்கின்றிச் சூட்டுகிறார்கள். அதன் கனமும், அதனின்று எழும் மணத்தின் கனமும் சேர்ந்து, நைந்து போயிருந்த மீராவைக் கிறங்கச் செய்கின்றன. அப்பால் நிலையின் எல்லை நிலையில் மிக மிக அசக்தியாக உறங்கியே விடுகிறாள் மீரா.

கூடியிருந்தவர்களுக்கு அவளுடைய கண்ணன் காதல் புரியாத விஷயம். தெளிந்து தூங்கும் அவளது திவ்விய வதனத்தைப் பார்த்து, ''அடியம்மா, மகாராணாவை அடைகிறோம் என்ற நிம்மதி, திருப்தி, சாந்தி பார்த்தாயோ? நிச்சிந்தையாகத் தூங்கிவிட்டாளே!'' என்கிறார்கள்.

மீராவின் அகக்கண் மட்டுமே திறந்திருந்த உலகில் அற்புதம் நிகழ்ந்தது. மேவார் அரண்மனையை நோக்கி நித்திய கலியாணனாகிய கண்ணன் மாப்பிள்ளைக் கோலத்தில் வருகிறான்! ஆகா, இத்தனை ஆண்டுகள் எட்டிப் பாராமலே இருந்து விட்டுக் கடைசி விநாடியில் வந்தே விட்டான் காப்பாற்ற !

மீராவின் இதயம் சில்லிட்டு உறைந்து விடுகிறது. 'ருக்மிணியைக் காக்க இறுதி விநாடியில் அம்பிகை ஆலயத்துக்குத் தேரில் வந்தது போல் தன்னையும் காக்க வந்து விட்டான்' என்ற ஒன்று மட்டுமே அவளுக்கு இப்போது புரிகிறது. ஓடிப் போய் அவன் காலில் முடிபட விழுந்து வணங்கி எழ வேண்டும் என்ற எண்ணமும் ஏற்படுகிறது!

ஆ! இதென்ன மீராவின் உறைந்த இதயம் மீண்டும் கரைகிறது! ஏனெனில், கண்ணன் அரண்மனை முகப்புக்கு வந்ததும், அறுந்து விழுந்த தோரணத்தையும், எங்கும் இறைந்து கிடந்த மலர் இதழ்களையும், பலாச சூரணத்தையும் பார்க்கிறான். உடனே அவனது திருமுகக் குறிப்பு மாறுகிறது. ஆனந்தம் மாறித் துயர மயமான ஒரு தயக்கம் அவனது வதனத்தில் படிகிறது.

அவ்வளவே ! அவனது வெண்ணெய்ப் பாதங்கள் எதிர்த் திசையில் துவண்டு புரளுகின்றன! ஆ! வந்த வேகத்திலேயே திரும்பி விடுகிறான்!

''கான்ஹா, கான்ஹா!'' என்று கதறியபடி மீரா தொடர்ந்தாள். இதோ அவனை நெருங்கியாச்சு! அடுத்த விநாடி பிடித்து விடலாம்! மீராவின் ஆனந்தம் எல்லை மீறியது.

''கான்ஹா, கான்ஹா!'' என்று ஆனந்தத்தில் அலறியபடி விழித்துக் கொண்டாள்.

''ஏன் மீரா! என்ன கனவு கண்டாய் ! கெட்ட கனவு கண்டால்தான் நல்ல பலன் என்பார்கள்'' என்றெல்லாம் சந்திரமுகியும் தோழிகளும் கேட்கிறார்கள்.

மீரா தன்னையே சபித்துக்கொள்கிறாள்.

'ஆகா, பைத்தியக்காரி. ஏன் விழித்துக் கொண்டு பாழாய்ப் போனேன்? அவனை அணைத்து நிறுத்துகிற சமயத்தில் ஏன், சண்டாளி நான், எழுந்தேன் ?'

மீரா பாடுகிறாள். உணர்ச்சி அடர்ந்து செறிகிற போது மீராவுக்குப் பாட்டுத்தான் பேச்சு. பட்சிகள் பாடுவதென்றும், பேசுவதென்றும் வித்தியாசமுண்டோ ?

இனி அவனை அடைவதெப்படியோ அறியேன்
கனியைத் தவறவிட்டேன் கைக்கெட்டும் தொலைவினில்
முன்வாசல் வரைவந்த மாதவன் மனம்மாறிப்
பின்வாங்கிச் சென்று விட்டான்! பிராணனோ
செல்லவில்லை

ஆதரவோடவனை அணைந்து வணங்கிட
காதவழி தொடர்ந்தேன்; கண்விழித்தே எழுந்தேன்

SGS-AT-1-68

# நாகரீகமானது நீடித்து உழைக்கக் கூடியது

## ASHOK

**KNITTED "TERYLENE"**
MADE FROM SPECIALLY IMPORTED 100% *'TERYLENE'* Polyester ICI Fibre

**அசோக் நிட்டெட்**
"டெர்லீன்" ஷர்ட் அணிவதால் நீங்கள் சிறப்பாகத் தோற்றமளிக்கிறீர்கள். நல்லதோற்றமளிக்கிறது. கசங்குவதில்லை. சுத்தம் செய்வது மிக எளிது. நீங்களே சலவை செய்து, அணிந்து கொள்ளலாம். உங்களுக்கு ஏற்ற ஷர்ட் அதுவே. சாதா மற்றும் கோடிட்டது.

**அசோக்**
சிறந்த "டெர்லீன்" நைலான் மற்றும் பூ வேலைகளுடன் கூடிய துணிகள் தயாரிப்பவர்கள்.

**அசோக் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் (பி.) லிட்.**
பிராட்நகர், நேபாள்

பூரண விற்பனை ஏஜெண்டுகள் :
பவான் டெக்ஸ்டைல்ஸ்
211/13, கல்பதேவி ரோடு, பம்பாய்-2
போன்: 22596 தந்தி: TRADEYAZA

தென்னிந்தியாவுக்கு வினியோகஸ்தர்கள் :
அசோக் டெர்லீன் டிரேடர்ஸ்
24, [illegible] தெரு, சென்னை.1





# உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் இல்லத்திற்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!

## லீலா லேஸ்

உங்கள் இல்லம் பரபரப்பூட்டும் புதுமைத் தோற்றம் பெற லீலா லேஸ் (பூத்தையல் இழை) உபயோகியுங்கள். அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப்படுகிறது. பலவித டிஸைன்களிலும், வர்ணங்களிலும் வரும் லீலா லேஸ் அழகிய திரைச் சீலைகளுக்கும், மெத்தையாசன உறைகளுக்கும் ஏற்றது. தவிர, மேஜை விரிப்புகள் மற்றும் தலையணை உறைகள் ஆகியவற்றுக்கும் லீலா லேஸ் உபயோகித்து, மிகக் குறைந்த செலவில் உங்கள் வீட்டுக்கு லேஸ் சுகத்தை அளியுங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள். உங்கள் வீடும் இத்தனை எழிலுடன் மிளிர வசதியிருப்பதை உணரலாம்.



உன் அலங்காரம்;
லீலா பாக்

பிரமிப்பூட்டும் பொலிவு **லீலா லேஸ்**

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்,
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59-AS

ஏஜெண்டுகள்: மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, நட்டன் பஜார், சென்னை-3.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்

G.26 TM

உறங்குகின்ற மாந்தர் கனவு தருவதுண்டு
உறக்கம் கலைந்ததனுல் கனவு தந்தவன் நானே

மணமகனை இழந்த மாபாவிமேனுக்கு
மணமிரு மாலையும் அணிமணியும் தருமோ?
மோகனனை நித்தம் மோனமதில் காணும்
யோகியாய்ச் செல்வேன் யோசனை இனியில்லை

ஒழிப்பேன் இச்சேலையை; கந்தைதனை உடுப்பேன்
உடைப்பேன் வளையல்களை! வுிட்டையும் கலைப்பேன்
நிரஞ்சனன் போனபின் அஞ்சனம் தீட்டுவரோ ?
நிரந்தரம் இலையுதிர் நெடுமரமாய் நிற்பேன்

இமைப்பொழுதும் இனிக் குமையவொண் ணுதம்மா
நமையாளும் நாதனை நாடிக் கிளம்பிவிட்டேன்
மீராவின் ப்ரபு ஹரி அவினுசினை
நேராய் நெருங்கியபின் சேராதிருப்பேனே ?

சுற்றி இருந்தவர்கள் திகைத்துவிட்டார்கள். மணவினைக்குச் செல்ல வேண்டிய பெண் மங்கலச் சின்னங்களை அழித்துவிட்டு வனத்துக்கு அல்லவா புறப்படத் தயாராகி விட்டாள்?

சந்திரமுகி மீராவைப் பிடித்து உலுக்கினுள். தான் ஒருபோதும் ஒரு சொல் தடித்துப் பேசியிராத பெண்ணிடம் முதன் முறையாகச் சீறினுள்: "மீரா, நீ என்ன நம்முடைய குடியின் மானம் மரியாதையை அடியோடு அழிப்பதென்றே பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிருயா? இந்த வீட்டோடு உன் செய்கைகள் நின்ற நாட்கள் போய்விட்டன. இப்போது அவை ஒரு புக்ககத்தையும் தொட்டு விட்டன. இதை நினைவில் வைத்துக் கொண்டு நம் மானத்தைக் காப்பாற்று."

மீரா கண்ணனிடம் மானசம்ரட்சணம் கோரினுள் என்ருல், அந்த மீராவிடமே சந்திரமுகி மானசம்ரட்சணம் கோரினுள்.

ஆனுலும் அதை மீராவால் ஏற்கத்தான் முடியவில்லை. கண்ணன் இத்துணைக் காலம் செய்தது போல் ஒதுங்கியே இருந்தாலும் அவள் மனம் ஒருகால் மாறியிருக்கக் கூடும். ஆனுல் ஒரு முகூர்த்த காலத்துக்கு முன் அவன் மணக் கோலத்தில் வந்து நின்றதை அவளால் எப்படி மறக்க முடியும்? எட்டாக்கனியைக் கிட்டத்தில் காட்டிவிட்டு அவன் தட்டிப் பறித்து விட்டான். அந்தத் தாபம் அதற்குள் எப்படித் தீரும்? இந்த ஆசாபங்கத்தில் மீராவுக்கு இயல்பான அநுதாபமும்கூட அன்னையிடம் ஏற்படவில்லை.

'கண்ணனை நாடி ஓடிவிடத்தான் வேண்டும்.' அவனை எங்கு பிடிக்கிறேனே அதுவே என் புக்ககம். வேறு ஏதோ ஒரு புக்ககத்துக்குப் போவது பற்றி அம்மா பேசுவது எவ்வளவு அர்த்தமற்றது?' என்றே கருதினுள்.

இசையை வாரி எறிந்த அன்னையின் மீது அமுதத் திவலைகளை வீசுவது போல் பாடினுள்:

கிரிதரனைத் தேடிக் கிளம்பிவிட் டேனடி
புக்ககத்தை அடையப் புறப்பட்டேனடி
சத்தியமாம் என் காந்தன் நித்தமனுளனே
நித்திதெனது கண்ணில் புத்தமுதாய் நிற்பான்

கணவன் அளிக்கும் கஞ்சியும் கந்தையும்
உணவும் உடுக்கையுமாய் உள்ளம் மகிழ்ந்தேற்பேன்
'அமர்' என்றவன் காட்டும் இடுகாட்டு மூலையும்
அமரபதவி தரும் அரியணை எனக் கொள்வேன்

சொல் செயல் சிந்தனைகள் சொந்தமாய் எதுமின்றித்
தொல்லை நெடும்பிறவித் தொழுமனையம் அளித்தேன்
அற்புத நாயகன் அற்பப் பொருள் எனை
விற்பனை செய்தாலும் சற்றும் மறுத்திடேன்



குசேலர்: கண்ணு! உனக்காக அவல் அரிசி கொண்டு வந்தேன். ஆனுல் வருகிற வழியில் ரெண்டு போலீஸ்காரர்கள் என்னை மடக்கி 'பர்மிட்' இல்லாமல் அரிசி கடத்துவதாகக் குற்றம் சாட்டி, அவலைப் பறிமுதல் செய்து விட்டனர்!

மீராவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"மீரா, மீரா, அன்னையையும் கண்ணனையும்விடச் சத்தியத்தை நெருங்கிய பந்துவாய்க் கருதும் மீரா, நீ கடைசியில் என்ன பாடினுய், மீண்டும் பாடு!" என்று அவளது உள்ளம் ஆர்ப்பரித்தது.

மெல்ல முனகிக் கொண்டாள் :

அற்புத நாயகன் அற்பப் பொருள் எனை
விற்பனை செய்தாலும் சற்றும் மறுத்திடேன்

மேர்தா அரண்மனைக்குப் பாரதத்தின் பல கோடிகளிலிருந்தும் பரதேசிகள் வருவதுண்டு. அவர்கள் அந்தந்தச் சீமைகளில் வழங்கும் அற்புதக் காதைகளைச் சொல்லக் கேட்டிருக்கிருள் மீரா. தமிழகத்திலிருந்து வந்திருந்த ஒரு சிவனடியார் அப்படியொரு கதை சொல்லியிருந்தார். நாயன்மார்களில் ஒருவரிடம் இறைவன் மாறுவேடத்தில் வந்து, "உன் மனைவியை எனக்குக் கொடு" என்று கேட்டாளும். அவரும் கணங்காது அப்படியே செய்து விட்டாராம். அதனினும் அதிசயம், அவரது மனைவியும், 'கற்புக்கு லட்சணம் கணவன் சொற்படி நடப்பதுதான்' என்று கருதி, வேஷமிட்டுவந்த இறைவனுடன் புறப்பட்டாளாம்! 'தான்' என்பதையே அழித்துக் கொள்ளும் அந்தக் கற்பு நிலை என்னையறியாமலே என்னிடமும் ஊறியிருக்கிறதா! அதனுல்தான் கண்ணன் என்னை விற்ருலும் மகிழ்ச்சியுடன் விற்கப்படுவேன் என்று பாடினேனே? சிவபெருமான் பிறர் மனைவியைத் தமக்காகக் கேட்டுச் சோதித்தார் எனில், கண்ணனே தன் மனைவியைப் பிறருக்கு விற்றுச் சோதிப்பானே?

'என்னை நீ விற்க நினைத்தாலும் அதற்கு உடன்படுகிறேன் பிரபு, உடன்படுகிறேன்! சங்கீதம்தான் என் சத்தியம். என் சங்கீதத்தில்

எது வந்ததோ அதுவே உன் ஆணை. அதைக் காப்பாற்றுவேன் பிரபு.'

மீராவின் கண்களிலிருந்து ஒரே கோவையாக நீர் வழிந்து கொண்டேயிருந்தது. பிறந்த நாள் முதல் பக்தி பண்ணியதில் அவள் கண்டதெல்லாம் பிறந்த நாளாகக் கண்ணீர் விடுவதுதானே !

சந்திரமுகி மீராவின் மனப் போராட்டத்தை உணர்ந்து கொள்ளாமலே பேசினாள்:

''மீரா, உன் ஒருத்தியின் கலியாணம் இது என்று மட்டும் நினைத்து விடாதே! சிசோதிய வம்சத்துக்கும் ராட்டோர் வம்சத்துக்கும் நடக்கிற கலியாணம் இது. இன்று ராஜஸ்தானம் வாழ வேண்டுமானால் இது அவசியம் நடந்தேயாக வேண்டும். தாத்தா எவ்வளவு முறை இதை எடுத்துச் சொல்லியிருப்பார்? இதோ வரன் வீட்டார் யாவரும் வந்தாகி விட்டது. உனக்கு மாமியாராக வரப் போகிற ஸௌபாக்கிய தேவிக்கும், மகாராணாவின் தங்கை உதயாவுக்கும் ஏற்கனவே நம்மிடம் சம்பந்தம் செய்து கொள்வது மட்டமாக இருக்கிறதாம். உன் விசித்திரப் போக்கையும் காட்டி விட்டால் அதற்குத் தூபம் போட்டாற் போலிருக்கும். இதோ பார். நான் உன் அன்னை. என் வாயால் தானே சொல்லிக் கொள்ள வெட்கப்பட்டாலும் நான்தான் உனக்கு முதல் தெய்வம். அப்புறம்தான் கண்ணன்.''

மீரா அன்னையை அமைதியாகப் பார்த்தாள்: ''நீ காட்டும் வழி, கண்ணன் காட்டும் வழி, என் சங்கீதம் காட்டும் வழி எல்லாம் ஒன்றாகத்தான் இருக்கிறது. இனி நான் மறுக்கவில்லை தாயே...! இதோ மணமேடைக்குப் புறப்பட்டேன். அழுது கலைந்த மையைச் சரி செய் பவானி! உதிர்ந்து விட்ட மகரிகா பத்திரத்தை மீண்டும் எழுதாமல் என்னடி செய்கிறாய் மாளவிகே! இன்னும் என்னவெல்லாம் அலங்காரம் செய்ய முடியுமோ, அவ்வளவும் செய்யுங்களடி ! மேவார் மகாராணாவை மணக்க சர்வாபரண பூஷிதையாக இதோ நான் கிளம்பி விட்டேன்.''

மீராவின் குரலில் இம்மிகூடத் துயரப் பசை இல்லை. அவளது பேச்சு என்றுமில்லாத அழுத்தத்துடன் வந்தது.

''என் கண்ணே கண்'' என்று அவளைக் கட்டிக் கொண்டாள் சந்திரமுகி.

ஃ ஃ ஃ

திருமணம் முடிந்து விட்டது என்று ராவ் தூதாவும், சந்திரமுகியும் மகிழ்ந்தனர்; மேர்தா மக்களும் மேவார் ராஜகுலத்தினரில் பெரும்பாலானவரும் மகிழ்ந்தனர்.

ஹோமப் புகையோடு சிசோதிய - ராட்டோர் புகைச்சல் அழிந்ததே என்று சண்டனும் ராணா கும்பனும் மகிழ்ந்தனர்.

அப்படியானால் உண்மையாகவே மீராவுக்கும் கும்பராணாவுக்கும் திருமணம் ஆகி விட்டதா?

மணமகன் மணமகளின் கரம் பிடித்துப் பாணிக்கிரகணம் செய்து கொள்வதும், அவளது காலைப் பிடித்து ஏழடி வைத்து ஸப்தபதி செய்வதும்தான் விவாகத்தின் முக்கியமான அம்சங்கள் என்பது சாஸ்திரம். தீபச்சுடரில் எரிந்து கரிந்துபோயிருந்த மீராவின் கரத்தையும், பாதத்தையும் கும்பராணா எங்கே பிடித்தான்? ஏதோ பாவனையாக ஒப்புக்குத்தானே பாணிக்கிரகணமும், ஸப்தபதியும் செய்தான்?

மீரா ஒருத்தியின் மனத்துக்குத் தவிர இது வேறு யாருக்கும் படவில்லை. படவேண்டிய முகாந்திரம் அவள் ஒருத்திக்குத்தானே இருந்தது? 'கண்ணன் என்னை விற்று விட்டானா இல்லையா? ஏன் இப்படி எதையுமே நயமறச் செய்ய மாட்டேன் என்கிறான்? கூடிக் களிக்கும் போது திடுமென மறைந்து விடுகிறான். மறைவையேனும் நிரந்தரமாகக் காப்பாற்றுகிறானா? வேண்டாத சமயத்தில் மீண்டும் வந்து சேருகிறான். இப்போது ஒரு வழியாகப் பிரச்னை முடிந்தது என்று நான் மனத்தைக் கல்லாக்கிக் கொண்ட சமயத்தில் ஏன் இந்தத் திருமணத்தைப் பற்றியே குழம்பும்படி செய்கிறான்? முடியாது, முடியாது. இனி குழம்ப முடியாது. நான் மேவார் மகாராணாவுடன் ஹாத் - லேவா செய்த தருமபத்தினிதான். அப்படித்தான் வாழப் போகிறேன்.',

ஃ ஃ ஃ

உடலை விட்டுப் பிரியும் உயிர் போல், தன்னை விட்டுப் பிரிந்து மேவார் செல்லும் மகளுக்குத் தடபுடலாகச் சீர்வரிசைகள் எடுத்தாள் சந்திரமுகி. மீரா ஒன்றை மட்டும் இறுதி வரை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாறிப் போனாள். கிரிதர கோபால விக்ரகம்தான் அது !

பிஞ்சுப் பருவத்திலிருந்து தான் அன்பு செய்த அம் மூர்த்தியை அளிக்குமாறு மீரா தாயைக் கேட்டுக் கொண்டாள். ''அம்மா, அவனை நான் கணவனாக நினைத்துக் கேட்கவில்லை. எப்படிக் கணவனுள்ள மற்ற மங்கையரும் அவனைத் தெய்வமாக வைத்துப் பூசிக்கிறார்களோ, நேசிக்கிறார்களோ, அப்படிப் பூசிக்கவும் நேசிக்கவுமே அவனைக் கேட்கிறேன் அம்மா. என்னை நம்பு. ஸ்திரீ தருமத்துக்கு விரோதமாக நான் நடக்க மாட்டேன்'' என்று உருக்கமாகக் கேட்டுக் கொண்டாள் மீரா. ''பொன்மணி பூஷணம் வேண்டாம். கண்மணி கிரிதரனைத் தருவாய்'' என்று பாடினாள்.

''அருமை மகளே! உன்னை எவ்வளவோ வருத்தி விட்டேன். இனியும் உன்னை வதைக்கக் கூடாது என்பதுதான் என் ஆசை. ஆனாலும் மீரா, உன் புக்ககத்தாரின் மனோபாவத்தை நான் மறப்பதற்கில்லை. அவர்கள் ஏகலிங்கர் மீதும் துர்க்காபரமேசுவரியின் மீதுமே தீவிர பக்தி கொண்டவர்கள். ராஜமாதா சௌபாக்கியதேவி பரமசாக்தை. அவரது கணவர் மோகல்சிங் மகாராணா துவாரகைக்கு யாத்திரை சென்றபோதுகூட சௌபாக்கியதேவி அவருடன் செல்லவில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நீ கண்ணனை ஆராதிப்பதை அவர் அநுமதிப்பாரா என்பது சந்தேகமாயிருக்கிறது'' என்றாள் சந்திரமுகி.

''பின்னால் எது நடக்கிறதோ, அது நடந்து விட்டுப் போகட்டும் அம்மா. நாமாக முன்கூட்டி ஏன் துன்பத்தை வளர்க்க வேண்டும்? இங்கிருந்து பொன்னையும், மணியையும், யானை குதிரைகளையும் எடுத்துப் போய் விட்டு என் கிரிதரனை மட்டும் விடுவதென்றால் எப்படியம்மா மனசு வரும்?.....'' என்று தேம்பியழுதாள் மீரா.

சந்திரமுகி கிரிதர விக்கிரகத்தை ஒரு பெட்டியில் வைத்தாள். ''நீ இதை எடுத்துப் போகும் பிரஸ்தாபம் இப்போது உன் புக்ககத்தினர் காதில் விழ வேண்டாம். சித்தோர் போனபின் நடப்பது நடக்கட்டும்'' என்று சொல்லிக் கொண்டே பெட்டியை மூடினாள். மூடும் போது அவளது இமைகளும் மூடிக் கொண்டன. இவ்வளவு நேரம் அவள் சிந்தாமல் தடுத்து நிறுத்தியிருந்த கண்ணீர் இப்போது வழிந்தது.

'ஆசை மகள் போகிறாள். அதன்பின் ஓர் ஆறுதலாக இருக்கக் கூடிய கிரிதரனும் போகிறான். கண்காணாத தேசத்துக்குப் போகும் குழந்தையின் விருப்பத்தைவிட என் விருப்பமா பெரிது?' சந்திரமுகி தன்னைத் தானே தேற்றிக் கொண்டாள்.

## அத்தியாயம் 13

# மனக்கதவம் மூடியது!

மேவார் தா அரண்மனையும், சோலைக்கொல்லைகளும், டாகுர் துவாரமும் பின்னே பின்னே செல்ல மீரா ஏறியிருந்த புரவி வாகனம் சித்தோரை நோக்கிப் பறந்தது. வாஞ்சையே உருவான ராவ்தூதாவும், சந்திரமுகியும், புஜாரியும் மீராவின் நெஞ்சுக்குள் வாடிய முகத்துடன் நின்றனர். 'எல்லாப் பெண்களுக்கும் விதித்த ஒன்று இது. எல்லாப் பெண்களையும் போல் நானும் இதைத் தாங்கியே ஆக வேண்டும். ஆம்.... நானும் எல்லாப் பெண்களையும் போலவேதான் எல்லா விதத்திலும்...' கல்லாக்கிக் கொண்ட மீராவின் நெஞ்சம் அவ்வப்போது இளகத்தான் தொடங்கும். தானே அதை மீண்டும் இறுக்கிக் கொள்வாள்.

வண்டி சென்று கொண்டேயிருந்தது. மீராவின் மனச் சகடமும் உருண்டு கொண்டேயிருந்தது. அதில் சிந்தனைஅரங்கள் எவ்வளவுதான் இருப்பினும் 'குடமாக'க் கோவிந்தன் ஒருவனையே சுற்றித்தான் இன்னமும் எண்ணம் சுழன்றது! இலேசில் விடும் பிரேம பாசமா அது!

'டடாக், டடாக்' என்று புதுப் புது பாதைகளில் — கரடுமுரடான மலையும்,பாலையுமான பாதைகளில் புரவிகள் ஓடிக் கொண்டிருந்தன. மீராவின் வாழ்வும்கூடப் புதுப் பாதைக்குத்தான் திரும்பி விட்டது! என்னென்ன எதிர்பாராத் திருப்பங்கள் இருக்குமோ? வறண்ட பாலையும் கரடுமுரடான மலையுமாகத்தான் அது இருக்குமோ? மீராவின் கண்கள் கரைந்தன.

''மீரா, வருத்தப்படாதே. கூடிய விரைவில் நாம் மீண்டும் உன் மனிதர்களை எல்லாம் சந்திக்கத்தான் போகிறோம். என் மகன், இல்லை, நம் மகன் — ராய்மல்லுக்குச் சீக்கிரத்திலேயே ஜோதாவின் மகளை மணமுடிக்கப் போகிறேன். அப்போது உன் உறவினர்களையெல்லாம் நிச்சயமாகப் பார்ப்போம்.''

'யார் பேசுவது? இதென்ன அசட்டுக் கேள்வி? வேறு யார் இப்படிப் பேச முடியும்? மேவார் மகாராணாதான் பேசுகிறார்! என்னை அக்கினி சாட்சியாக மணந்த கணவர்தான் பேசுகிறார்! அவரைத் தவிர வேறு யார் என் அருகில் இவ்வளவு நெருக்கமாக அமர முடியும்? ஒரு வேளை நான் இன்னும் கண்ணீர் வடித்தால் அவரே என் கண்ணைத் துடைத்தாலும் துடைப்பார். துடைக்க அவருக்கு சாஸ்திரப்படியும் சட்டப்படியும் உரிமை உண்டு. கிருஷ்ணா, கிருஷ்ணா, என்ன விளையாட்டு விளையாடுகிறாய் நீ!' பொடிப் பொடியாக உதிர்ந்து விழ இருந்த நெஞ்சை மீண்டும் கெட்டித்துப் பாறுங்கல்லாக்கிக் கொண்டாள் மீரா.

நல்ல வேளை! ராணா அவளைத் தீண்டவில்லை. ஏனெனில், அந்த ரதத்தில் சாரதிக்கும் அவர்களுக்குமிடையே மறைப்பு இல்லை. 'இத்தனை பாபத்திலும் நான் என்ன புண்ணியம் செய்தேனோ, இத்தேரில் இவர் ஏறினார்!'

போகிற மார்க்கங்களைப் பற்றி உற்சாகமாக மொழிந்து வந்தான் ராணா. மீரா சிலையாக அமர்ந்திருந்தாள். மாமன்னன் ஒருவரிடம் ஓர் இளம் பெண்ணுக்கு இருக்கக்கூடிய பயம், புது மணமான நங்கைக்கு இருக்கக் கூடிய நாணம் (இருநூறு ஆண்டுகளுக்கு முந்தைய கதை!) உற்றாரைப் பிரிந்த துயரம்— இவையே மீராவின் மௌனத்துக்குக் காரணம் என்றுதான் கும்பா எண்ணினான்.

''மீரா, உன்னுடைய வெட்கத்தையும், பிரிவுத் துயரையும் நான் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் என்னிடம் உனக்கு அச்சம் இருக்குமோ என்றும் எண்ணுகிறேன். என்னைவிட நீ ஏறக்குறைய இருபது பிராயம் சிறியவள். அதோடு என்னை ராஜஸ்தானத்துக்கே பெரிய மன்னனாக உன்னிடம் பெரிதாகப் பேசியிருப்பார்கள். இது காரணமாக உனக்கு என்னிடம் பயம் உண்டாவது இயற்கை. ஆயினும் நான் பயப்படத் தக்கவனல்ல. தேவி, உன் அன்புக்கே நான் ஆசைப்படுகிறேன். சில மனைவிகளை மணந்து அவர்களை இழந்தபின்னும், இந்த இழப்பு இறைவன் ஆணை என்று தெளிந்தபின்னும், உன்னை நான் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன் என்றால் அதற்குக் காரணம் எனக்கே புரியவில்லை. ஆண்டவன்தான் ஏதோ நிமித்தமாக நம்மைச் சேர்த்து வைத்திருக்கிறான் என்று நினைக்கிறேன். ஆண்டவன் அளித்த ஒரு பரிசு என்னிடம் பயப்படலாகுமா? மீரா, என்னைப் பூரணமாக நம்பி உன் மனம் திறந்து நடந்து கொள்ள வேண்டும். புதிய சூழ்நிலை உனக்கு எப்படி எப்படியோ இருக்கலாம். அதை ஒளிக்காமல் என்னிடம் கூறவேண்டும், என்ன?'' என்றான். (தொடரும்)

# செய்திப் படங்கள்

சென்னையிலுள்ள ஸ்ரீ குஜராத்தி மண்டலைச் சேர்ந்தவர்கள் அசோகா ஹோட்டலில் சென்னை முதல் மந்திரி திரு எம். பக்தவத்ஸலத்தின் பிறந்த நாளை ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடினார்கள்.





சங்கரதாஸ் நினைவு மன்றத்தின் சார்பில் சென்னை திரு வி. க. மணி மண்டபத்தில் அமைச்சர் திரு கக்கன் அவர்களின் தலைமையில் திரு எம். ஜி. ராமச்சந்திரன் தேசிய நாடகாசிரியர் கிருஷ்ணசாமிப் பாவலரின் உருவப் படத்தைத் திறந்து வைத்தார்.



அகில இந்திய உற்பத்தியாளர் சங்கம் காலஞ்சென்ற எம். விசுவேசுவரய்யாவின் பிறந்த நாளைச் சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் ஷெரீப் திரு எஸ். நாராயணசாமி தலைமையில் சிறப்பாகக் கொண்டாடியது.



1966 ஆசிரியர்களுக்கான தேசியப் பரிசைப் பெற்ற புதுடில்லி மதராஸி பள்ளியின் பிரின்சிபால் திரு கே. சூரியநாராயணனுக்கு டாக்டர் லோகநாதன் அவர்கள் பரிசளித்துக் கௌரவித்தார்.



கல்கத்தாவில் உள்ள அகில பாரத சங்கர சேவா சமிதியின் ஆதரவில் யோகி சுத்தானந்த பாரதியார் சங்கீத உபன்யாசங்கள் செய்தார்.

# ஆதார சுருதி

'ரதனு'



**அட்டைப்படக்கதை**

**பா**ரதி கான சபாவில் மைக்கின் முன் அமர்ந்து வெகு அடக்கமாகக் கஸ்தூரி பாடிக் கொண்டிருந்தாள். அந்த இசைவெள்ளத்தில் மூழ்கித் திணறிக்கொண்டிருந்தனர் ரசிகர்கள். ஊசி விழுந்தால்கூடச் சத்தம் கேட்கும் என்று அமைதிக்கு உவமை சொல்லுவோம். ஆனால் அந்தச் சிறு ஊசிகூட விழுவதற்கு இடமில்லை அங்கு. உள் ஹாலில் இடமின்றி வெளி வராந்தாவில் நின்றபடியே ரசித்தனர் பலர். ஒலிபெருக்கி வழியே பாய்ந்து வரும் இசை அமுதைத் தங்கள் செவிகளின் வழியே ஏற்று இதயத்தை நிரப்பிக் கொண்டு வாசல்புற 'கேட்' அருகிலும் மதில்சுவர்களிலும்கூடச் சிலர் அமர்ந்திருந்தனர். போக்குவரத்தைக் கூடத் தடை செய்தபடி அந்தத் தெருவில் பல ரகமான மோட்டார்கள் நிறைந்திருந்தன.

கச்சேரி முடிந்து திருப்தியான முகத்துடன் ஜனக் கூட்டம் வெளியேறிக் கொண்டிருந்தது. அநுபவித்த ஆனந்தத்தை அங்கேயே அசை போடுவது போல் சூழ்நிலையை மறந்து தெருவின் குறுக்கே போய் விபத்தை எதிர்கொண்டு அழைக்கச் சென்றவர்களைத் தடுத்தனர் மற்றும் சிலர். பெண்களுக்குத் தான் எதிலும் அவசரமாயிற்றே. அதிலும் மூன்று மணி நேரமாக வாயடைத்திருந்த அவர்கள் முடுக்கிவிடப்பட்ட யந்திரம்போல் பேசிக் கொண்டே விரைந்தனர்.

''அடியே, சக்கு! மோகன ராகத்தை என்னமா பாடினுள்! இன்னும் கொஞ்ச நேரம் பாடமாட்டாளா என்றிருந்தது.''

''ஏண்டியம்மா, அந்தப் பெண் ரொம்பச் சின்னவளா இருக்கிறளே.... இந்த வயதுக்குள் இத்தனை ஞானம் !''

''அதெல்லாம் வெறும் சிட்சை மட்டுமல்ல மாமி.... வரப்பிரசாதம். எல்லாருக்குமே கிடைப்பதில்லை !''

''தம்புரா மீட்டினவன்தான் அவள் புருஷனு ?''

''இல்லை பாட்டி, இல்லை! உங்களுக்குத் தெரியாதா? அட்வகேட் பூபதின்னு ராயப்பேட்டையில் இருக்காரே, அவர்தான் இவள் கணவர்.....!''

''அவர் சிறந்த ரசிகராக இருப்பார். அதனுல்தான் மனைவியின் கலைக்கு ஆதரவு கொடுத்திருக்கிறர். உங்கள் பெண்களுக்குக் கலை ஞானம் இருந்து விட்டால் மட்டும் போதாது..... அது வளரச் சரியான புருஷனும் கிடைக்க வேண்டுமே....?''

''ஆமாம், சக்கு! நம்ப பிரமீளாகூட ரொம்ப நன்ருகப் பாடுவாள். கல்யாணத்துக்கு முன்னுல் ரேடியோவில் பாடியிருக்கிறள். ஆனுல் இப்ப அவள் பாட்டு படி தாண்ட விடவில்லை அவளுடைய புருஷன். அவன், ஔரங்கசீப் வம்சமாக்கும்!''

அதே சமயம் ரசிகர்களின் இன்பத் தொல்லையிலிருந்து விடுபட்டுக் கஸ்தூரி, கணவனைப் பின்தொடர்ந்து சபாவை விட்டு வெளியில் வந்தாள். கஸ்தூரி காரில் ஏறி அமர்ந்ததும் பூபதி டிரைவர் ஆசனத்தில் வந்து அமர்ந்து வண்டியைக் கிளப்பினுன்.

ரோஜா மலர் மாலையின் மணம் அவர்களைச் சூழ்ந்தது.

''கஸ்தூரி! ஜமாய்த்து விட்டாய் போ! அம்மாவிடம் சொல்லி நாளைக்குத் திருஷ்டி சுழித்துத்தான் போட வேண்டும்.'' — கஸ்தூரியின் பளிங்கு முகம் களிப்பில் மிதந்தது.

''அதெல்லாம் ஒன்றுமில்லை, அத்தான்! உங்கள் அன்பும் ஆதரவும், ஊக்கமும்தான் காரணம். இசைக்குச் சுருதி எவ்வளவு அவசியமோ, அதைவிடப் பெண்களுக்குக் கணவனின் ரசிகத் தன்மையும் தூண்டுதலும் மிகவும் அவசியம், அத்தான்! என் இசைக்கு ஆதார சுருதியே நீங்கள்தான்....'' என்றாள் கஸ்தூரி. உணர்ச்சியின் மோதலில் குரல் கரகரத்தது. மாலையில் நடந்த சம்பவம் அவள் நினைவில் ஆடியது.

கஸ்தூரியின் தாய் கோமளம் சிறு வயதிலேயே கணவனை இழந்து கைக் குழந்தையுடன் பிறந்தகத்துக்கு வந்து சேர்ந்தாள். அவளது பிறந்தகமே கலை வாழ்வோடு பிணைந்த வம்சம். முன்னோர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நிலையில் சிறந்தவர்களாக இருந்தனர். முக்கியமாக இசைக் கலைதான் அவர்களிடையே புகழ் மணத்தைப் பரப்பியது. கோமளம் கோட்டுவாத்தியம் வாசிப்பில் தேர்ந்தவள். அவள் தந்தை 'சங்கீத சாகரம்' பட்டம் பெற்றவர். கோமளத்தின் சகோதரன் மகாதேவன், 'இசை மன்னன்' பட்டம் பெற்றவர்.

தமையன் மகாதேவனின் நிழலில் ஒதுங்க வந்த கோமளம் அதிக காலம் வாழ்ந்திருக்கவில்லை. தன் சோக வாழ்க்கையை மறக்க இசையிலேயே லயித்துக் கிடந்தாள். கஸ்தூரியின் ஏழாவது வயதில், அவள் இறந்து விட்டாள். இறக்கும் முன்னர் தமையனிடம், ''அண்ணா! குழந்தைக்குச் சாரீரம் வெகு இனிமையாக இருக்கிறது. அவளுக்குச் சங்கீதம் கற்பித்து நான் அடைய முடியாத புகழ் மணத்தைப் பெற நீங்கள்தான் உதவ வேண்டும். அப்புறம் உங்கள் மருமகளாக ஏற்றுக் கொள்ளவும் வேண்டும். செய்வீர்களா, அண்ணா? ஞான சூனியமான கணவனிடம் கலை நசுங்கி விடும். குழந்தையின் கலை வளரவும், இல்லறம் இனிமையாக மலரவும் நீங்கள்தான் துணையாக இருக்க வேண்டும்.....'' என்று தன் மன விருப்பத்தை வெளியிட்டாள். மகாதேவனுக்குத் தங்கையிடம் அளவற்ற பாசம். முகம் சுளிக்காமல் உறுதியாக அவளுக்குச் சத்தியம் செய்து கொடுத்தார்.

அப்போது மகாதேவனின் ஒரே மகன் சுகுமாரனுக்குப் பத்து வயது. ஓராண்டுக்கு முன் மனைவியை இழந்த மகாதேவன் இப்போது ஒரே ஆதரவாக இருந்த தங்கையையும் பறி கொடுத்து விட்டார். சுகுமாரன், கஸ்தூரி இருவரையும் விழிகளுக்குள் வைத்து இமையால் மூடி வளர்க்க ஆரம்பித்தார். மறுமணத்துக்குச் சிபாரிசு செய்ய வந்தவர்களையும், கால் பிடிக்க வந்த பெற்றவர்களையும் உறுதியுடன் உதறி விட்டார்.

'சங்கீதம்தான் எனக்குச் சம்சாரம்' என்று ஆணித்தரமாகச் சொல்லித் தம்மை அவர்கள் வலையிலிருந்து மீட்டுக் கொண்டார். தூரத்து உறவினளான ஒரு கிழவியை, அவளுக்கும் ஆதரவு இல்லாததைப் பயன்படுத்திக் கொண்டு, தம் குடும்பத்துக்கு உதவியாக வைத்துக் கொண்டார். பாக்கியம் மனமகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டாள்.

சுகுமாரனுக்கும் கஸ்தூரிக்கும் தாமே சங்கீத குருவாக ஆனார். சுகுமாரனுக்குக் கம்பீரமான சாரீரம். கஸ்தூரிக்குக் குயிலைப் போல் இனிமையான குரல். நிமிர்ந்து நிற்கும் மரமும் அதைப் படர்ந்து நிற்கும் கொடியையும் போல் இரு குரலும் இணையும் போது மகாதேவன் மெய்சிலிர்ப்பார்.

காலச் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. கொளுத்தும் வெய்யிலும் கொட்டும் மழையும், உறையும் பனியுமாக இயற்கை கடமையைச் செய்து கொண்டிருந்தது. சுகுமாரனும் கஸ்தூரியும்கூட இயற்கையின் விளையாட்டுக்கு இலக்காகாமல் இருக்க முடியுமா? பசும் பொன்னை வார்த்தெடுத்த சிற்பம் போல் கஸ்தூரி வளர்ந்து விட்டாள். கலையான முகமும், ஆளைக் கவர்ந்திழுக்கும் விழிகளும், அலை அலையான கூந்தலும் கலை மணம் கமழும் குரலும் அவளைப் பருவ காலப் படிகளில் மெதுவாக ஏற்றிக் கொண்டு வந்தன. பதினைந்து வயது மங்கையாக, ஆதவனின் இளம் கிரணத்தின் அணைப்பில் இலேசாக விரியும் மலர் மொட்டுப் போல், வளர்ந்து நின்ற போது கட்டிளம் காளையாகக் கம்பீரத் தோற்றத்துடன் சுகுமாரனும் வளர்ந்து விட்டான்.

வழக்கம் போல் சங்கீத சிட்சை நடைபெற்றுக் கொண்டிருந்தது. சுகுமாரனுக்குக் கலை ஞானமும் கம்பீர சாரீரமும் இருந்தாலும் கற்பனை ஸ்வரங்கள் பாடுவதில் கஸ்தூரியே முதன்மையாக விளங்கினாள். ராக ஆலாபனை செய்யும்போது கஸ்தூரியின் இனிய குரல் இமயத்தையே தொட்டு இறங்கும். சுகுமாரனுக்குக் குரல் வளைந்து கொடுப்பதில்லை. இருவரையும் மாறி மாறி நிரவல் ஸ்வரம் பாடச் சொல்லுவார் மகாதேவன். கஸ்தூரிக்கும் மேலாகச் சுகுமாரன் முயன்றாலும் சாரீரம் தட்டுத் தடுமாறிவிடும். கஸ்தூரியின் கற்பனை ஸ்வரங்களை மகாதேவன் 'ஆஹா ஆஹா' என்று மகிழ்ச்சியுடன் அனுபவிப்பார்.

அன்று நாதநாமக்கிரியை ராகத்தை இருவரையும் தனித்தனியாகப் பாடச் சொன்னார் மகாதேவன். அதிகாலை நேரம். தென்றல் காற்று பனி நீரில் குளித்தெழுந்து மொட்டவிழ்ந்த மலர்களின் மணத்தை அணைத்தபடி ஜன்னல் வழியே அவர்களைத் தழுவிச் சென்றது. பட்சி இனங்கள் ஒவ்வொன்றாகக் குரல் கொடுக்க ஆரம்பித்தன. இத்தகைய இனிய சூழ்நிலையில் இருவரும் மாறி மாறி நிரவல் செய்ய ஆரம்பித்தனர். கஸ்தூரியின் கற்பனைக்குக் கூடிய வரை சுகுமாரனும் ஈடு கொடுக்கலானான்... ஆனால் உச்சியில் நின்று கொடி நாட்டியவள் கஸ்தூரியே. சோக பாவத்துக்கேற்ற அந்த ராகம் கஸ்தூரியின் நெஞ்சிலிருந்து கொஞ்சலும் குழைவுமாக உருகி ஓடி வந்தது. அதன் பிரதிபலிப்புப் போல மகாதேவனின் இரு விழிகளிலிருந்தும் அருவியாக ஆனந்தக் கண்ணீர் கொட்டியது. 'ஆஹா....ஆஹா!' என்று தலையாட்டிக் கொண்டிருந்தவர் பேச

ழிழந்து இசையில் ஒன்றிப் போய்விட்டார். சில விநாடிகள் வரையில் அவர் மௌனமாக ரசித்தார்.

''குழந்தே! கலாதேவியே உன்னுள் அடக்கமாகி விட்டாளம்மா.... இனி என் கடமையை, என் தங்கைக்கு அளித்த வாக்கை, நிறைவேற்ற வேண்டுமே. உன் கச்சேரியைத்தான் முதலில் அரங்கேற்றவேண்டும். சுகுமாரன் மேடை ஏறச் சில வருஷங்கள் ஆகும் போலிருக்கிறது'' என்று கூறினார். கஸ்தூரி நாணம் மேலிடத் தலையைக் குனிந்து கொண்டாலும் அவளை அறியாமல் கண்கள் சுகுமாரனை நாடின. அவன் துணுக்குற்றான். அவன் முகம் உள்ளுக் கிழுத்த திரி போல் ஒளி மங்கிக் காணப்பட்டது. ஏன்? உதடுகளை இறுக்கி அழுத்தமாகத் தன் சலனத்தை மறைத்துக் கொள்ள அவன் முயல்வதையும் கஸ்தூரி கண்டாள்.

மறு நாள் காலை மோகன ராகத்தைப் பாடிச் சாதகம் செய்தார்கள். வழக்கம் போல் இருவரும் சிட்ட ஸ்வரம் பாடலானார்கள். மகாதேவனும் கண்களை இலேசாக மூடி அநுபவித்துக் கொண்டிருந்தார். சுகுமாரன் மேல் ஸ்தாயியை எட்டி ஸ்வரங்களை உதிர்த்ததும் கஸ்தூரி பல்லவியைப் பாடி முடித்து விட்டாள். பாதி கனவில் விழித்தவர் போல மகாதேவன் அவசரமாக, ''என்னம்மா, கஸ்தூரி! முடித்து விட்டாயே! உன்னால் இதையும்விட அதிகமாகக் கற்பனை போட முடியுமே ?'' என்றார்.

கஸ்தூரி அடக்கமாக, ''இல்லை, மாமா! இதற்கு மேல் எட்ட முடியவில்லை மாமா!'' என்றாள். உடல் நலம் சரியாக இல்லையோ என்று எண்ணிய மகாதேவன், ''ராத்திரி பால் சாப்பிட்டாயா, அம்மா! வெந்நீரில் குளியம்மா....!'' என்றார் அன்புடன். கஸ்தூரி சிரித்துக் கொண்டாள் மெதுவாக.

அன்று மட்டுமில்லாமல் தொடர்ந்து பல நாட்கள் சுகுமாரனைத் தாண்டிக் கொண்டு கஸ்தூரி மேலே பாடுவதில்லை. மகாதேவன் மனம் குழம்பினார். அந்தச் சமயம் சுகுமாரன் இசைப் பயிற்சியிலிருந்து விலகிக் கொண்டு விட்டான்.

''அப்பா! கல்லூரிப் பரீட்சைக்கு நிறைய படிக்க வேண்டியிருக்கிறது. சங்கீத சாதகம் செய்ய அவகாசம் இல்லையப்பா! படிப்பு முடியட்டும். பிறகு எனக்குச் சங்கீதம் கற்பியுங்கள். பாட்டைப் பாடிக் கொண்டிருந்து விட்டுப் பரீட்சையைக் கோட்டை விடுவதா, அப்பா ?'' என்றான்.

மகாதேவனுக்கு அவன் கூறுவது சரியாகப் பட்டது. ஒப்புக் கொண்டார். தனியாகப் பாடம் ஆரம்பித்த பிறகு கஸ்தூரி பழைய படி கற்பனை ஸ்வரங்களில் மகாதேவனைக் குளிர வைத்தாள். பதினேழாவது வயதில் மேடையிலும் ஏற்றி விட்டார் மாமா.... அரங்கேற்றம் நடைபெற்ற அன்றே அவளுக்கு அமோகமாகப் பாராட்டுக்கள் கிடைத்தன.

சுகுமாரன் கஸ்தூரியோடு சேர்ந்து பயிற்சி பெறுவதை நிறுத்தி விட்டாலும் இசையை மறக்கவில்லை; துறந்துவிடவுமில்லை. சமயம் கிடைக்கும் போதெல்லாம் சாதகம் செய்வதில் ஈடுபட்டான். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் பூபதி வந்து சேர்ந்தான். மகாதேவனின் ஒன்றுவிட்ட தம்பியின் மகன் பூபதி. வடக்கே வேலையாக இருந்த அவன் தந்தை 'ரிடையர்' ஆகிச் சென்னையில் குடியேறினார். பூபதி சட்டக் கல்லூரியில் சேர்ந்து படிக்கலானான். பூபதிக்கும் சங்கீத ஞானம் இருந்தது. பயிற்சி பெறவில்லையே தவிர ரசிகனாக இருந்தான். கஸ்தூரியின் இசை காந்தம் போல் அவனைக் கவர்ந்திழுத்தது. சுகுமாரனும் பூபதியும் ஒட்டிப் பழகினார்கள். பூபதி தினமும் சுகுமாரனின் வீட்டுக்கு வந்து கஸ்தூரியின் இசையை ரசிக்காமல் வீடு திரும்ப மாட்டான்.

கஸ்தூரி சிறுவயதிலிருந்தே சங்கோச சுபாவமுடையவள். மாமாவிடம்கூடக் காரணமின்றிப் பேச மாட்டாள். துள்ளித் திரிந்த பருவத்தில் சுகுமாரனோடு பேசிப் பழகிய போதும், அரட்டையாகப் பேசமாட்டாள். அப்படிப்பட்டவள் பருவமடைந்த பின்னர் எப்படி இருப்பாள்? சந்தர்ப்பம் நேரும் போது சுகுமாரனோடு பேசுவாள். அவள் வாயைக் கிளறி வம்புக்கிழுக்கும் சுகுமாரனும் வளர்ந்தபின் அடங்கி விட்டான். ஆனால் அவன் சகஜமாகப் பேசிக் கொண்டிருந்தான். கஸ்தூரியின் வாய்தான் பேசத் தயங்கியதே அன்றிப் பார்வை சுகுமாரனையே வட்டமிட்டுக் கொண்டிருந்தது. இருளில் துழாவுவது போல் அவள் விழிகள் அவன் பார்வையையும் பேச்சையும் வாயிலாகக் கொண்டு அவனது இதயத்தைத் துழாவும். இரையைத் தேடி வட்டமிடும் பறவை போல் அவள் உள்ளம் அவனிடம் எதையோ தேடி அலையும். பார்வையின் மென்மையில், இதழ்கள் விரிக்கும் ஒரு புன்சிரிப்பில், பேச்சில் சிதறும் குறும்பில் ஒரு கோடி காட்டிவிட்டாலும் போதுமே அவளுக்கு! பதில் கிடைத்த திருப்தி அடைந்து விடுவாளே. ஆனால் சுகுமாரன் சலனமற்றிருந்தான்.

கஸ்தூரி ரசிகர்களிடையே பிரபலமாகி விட்டாள். மகாதேவன் அமைதியாக மூச்சு விட்டார். தங்கைக்கு அளித்த வாக்கில் ஒன்று நிறைவேறி விட்டது. இன்னொன்றையும் நடத்திவிடத் தீர்மானித்தார். சுகுமாரன் இன்ஜினீயரிங் பரீட்சையில் பாஸ் செய்து விட்டான். உத்தியோகமும் கிடைத்துவிட்டது. இடையே சங்கீதத்திலும் தேர்ச்சி அடைந்து விட்டான். அவன் மேடை ஏறிக் கச்சேரிகளும் செய்தான். மகாதேவன் திருப்தி அடைந்தார். ஒரு நாள் மகனிடம் பேசலானார்:

''சுகு! கஸ்தூரிக்கு வயதாகி விட்டது. இருபது முடிந்து விட்டது. கல்யாணம் செய்ய வேண்டும்......''

சுகுமாரன் சிரித்தான். ''ஆமாம், அப்பா! நடத்திவிட வேண்டியதுதான்!''

மகாதேவனின் முகம் மலர்ந்தது. ''சரி, நாளைக்கே லீவுக்கு எழுதிப் போட்டு விடு. உங்கள் இருவரையும் ஒன்று சேர்த்து வைத்துவிட்டு நான் இரண்டு மாதம் க்ஷேத்ராடனம் செய்து வரலாம் என்று.....''

அவர் முடிக்கும் முன்னரே சுகுமாரன் பரபரப்புடன் வினவினான். ''என்னப்பா,



"நீ இங்கேயே உட்கார்ந்து பாடிக்கொண்டிரு. நான் அதற்குள் பக்கத்து வீடுகளுக்கும் போய்ப் பாடிவிட்டு அவர்கள் தரும் சுண்டலைக் கொண்டு வந்து உனக்குத் தருகிறேன்."

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

என்ன சொல்லுகிறீர்கள்? எனக்கும் கஸ்தூரிக்குமா கல்யாணம்?"

"பின்னே யாருக்கென்று நினைத்தாய்?"

"அப்பா! கஸ்தூரியை என் தங்கை மாதிரிதான் நான் நினைக்கிறேன்......"

"என்ன.... என்ன.....?" மகாதேவன் படபடத்தார்.

"அப்பா! கஸ்தூரி பால்மணம் மாறாத பச்சைக் குழந்தையாக இங்கு வந்தவள். என்னோடு சேர்ந்து வளர்ந்தவள். எனக்கு வேறு தங்கை தம்பி என்று யாருமில்லாததாலோ என்னவோ, எனக்கு அவளிடம் சகோதர பாசம்தான் உண்டாயிற்று. இதில் ஆச்சரியம் என்ன இருக்கிறதப்பா!" என்றான் குமார்.

மகாதேவன் இடிந்து போய் உட்கார்ந்து விட்டார். அவர் கட்டிய மனக்கோட்டை மணல் கோட்டைதானா?

"என் தங்கையிடம் வாக்குக் கொடுத்து விட்டேனே! என் மருமகளாக ஏற்கவேண்டுமென்று அவள் ஆசைப்பட்டாளே. நான் என்ன செய்வேன்?" அழாத குறையாகக் குமுறினார்.

குமாரன் மெதுவாக, "அப்பா! கவலைப் படாதீர்கள்! கஸ்தூரியின் வாழ்க்கையில் எனக்கும் அக்கறை உண்டு. பூபதி பரம ரசிகன். கஸ்தூரியை மனமார நேசிக்கிறான். பூபதி உங்கள் மகன் போல்தானே அப்பா! கஸ்தூரி, பூபதியை மணந்து கொண்டாலும் உங்கள் மருமகள்தானே அப்பா! நன்றாகச் சிந்தியுங்கள். கஸ்தூரியின் இசைக்குப் பூபதி சுருதியாக இணைந்து இருப்பான். கவலை இல்லை அப்பா!" என்று விளக்கினான். அவன் குரலில் வழிந்த அன்பும் பாசமும் மகாதேவனின் இதய ரணத்துக்கு ஒத்தடம் கொடுப்பது போல அமைந்தது. ஆனால் அதே சமயம் அடுத்த அறையிலிருந்து அவர்களது சம்பாஷணையைச் செவிமடுத்த கஸ்தூரியின் நிலையை என்ன வென்பது?

கஸ்தூரி சிறகிழந்த பறவை போல் துடி துடித்தாள். இதய வீணை மீட்டிக் கொண்டிருந்த அனுராகம் அபஸ்வரமாக ஒலித்து விட்டதே!

கஸ்தூரிக்குத் தாயார் இல்லாத குறை அப்போதுதான் வாட்டியது. என்றுமே ஒதுங்கியே வாழும் அவளது குணம். இப்போது தேற்றுவாரின்றித் தனக்குள் குமுறலானாள்.

கண்ணீருக்குத்தான் எத்தனை சக்தி! இதயத்துச் சுமையைக் கரைத்துவிட அது தான் உற்ற துணை. வெகு நேரத்துக்குப்பின் கஸ்தூரியின் மனம் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டு அமைதியாகச் சிந்திக்க ஆரம்பித்தது. ஒளி பரவப் பரவ இருள் விலகுவது போல் அவள் துயரம் விலகலாயிற்று. 'குமாரன் கூறியது உண்மையாகவும் இருக்கலாமே. ஒன்றாக வளர்ந்தவர்களிடையே சகோதர பாசம் உண்டாவது சகஜம்தானே? அவள் இதயத்தில் காதல் அரும்பியது உண்மை. ஆனால் அது ஒரு நாளாவது குமாரனின் ஆர்வம் பொங்கும் பார்வைக் கிரணம் அதன் மீது பட்டு மலர வைத்த துண்டா? இல்லை.... இன்பப் பரவசம் மிளிரப் புன்னகைத் தென்றல் அந்த அரும்பைத் தழுவியதுண்டா? இல்லவே இல்லை. எத்தனை நாட்கள் அந்தப் பார்வைக் காக, சிரிப்புக்காக ஏங்கியிருந்தாள். ஆமாம்! அவள் மனம் கற்பனையில் லயித்து அவனைத் தவறாக எண்ணி விட்டது. அவன் மனத்தைச் சரியாக உணராமல் தன் ஆசையை வளர்த்துக் கொண்டது அவள் தவறு.'

இவ்வாறாகச் சிந்தித்துத் தெளிவடைந்த கஸ்தூரி பழைய நினைவுகளைக் களைவாக்கி எதிர்காலத்தைப் பற்றி யோசித்தாள். 'பாலைவனத்தில் பொழிந்த நிலவு போல் அவள் பிரேமை வீணாகி விட்டது. குமாரனின் சொற்கள் கோடாரியாக அவள் அன்பு மரத்தை வெட்டிச் சாய்த்துவிட்டாலும் அதை அறவே வேரோடு பிடுங்க அவனுடைய சகிப்புத் தன்மைக்குத்தான் சக்தி வேண்டும்' என்று எண்ணியதுமே அவளுக்கு அழுகைதான் வந்தது. அவள் உள்ளம் சூன்யமாகி விட்டது. அந்தப் பாழ்மனையில் யார் வேண்டுமானாலும் குடியேறட்டுமே? பூபதியைப் பற்றிய நினைவு தானாக அவள் மனத்தில் நுழைந்தது. ஓரளவு அவன் மனத்தை அவள் அறிந்துதான் இருந்தாள். காதல் வசப்பட்டிருந்த அவளால் அதன் சேஷ்டைகளை உணர முடியாதா என்ன?

**ம**று நாள் மாலை மகாதேவன் தயங்கித் தயங்கி அவளிடம் விஷயத்தைக் கூறியபோது வெகு அமைதியாக மட்டுமின்றி நாணம் மேலிட, "மாமா! உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். என் நன்மையைப் பற்றி உங்களுக்கில்லாத பொறுப்பு யாருக்கு இருக்கிறது மாமா? என்னைக் கேட்க வேண்டுமா, என்ன?" என்றாள் கஸ்தூரி.

மகாதேவன் திகைத்தார். 'ஓகோ! நான் தான் அஸ்திவாரமே இல்லாமல் கோட்டை கட்டி விட்டேன். இந்தப் பெண்ணுக்குப்

பூபதியிடம்தான் ஆசை போலும்' என்று நினைத்தார். மேற்கொண்டு துரிதமாக ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தார். பூபதியிடம் அவர் வினவிய போது அவன் ஆனந்தத்தில் நிலைதடுமாறினான். மகாதேவன் கண்களில் நீர் மல்க, ''பூபதி! உன்னிடம் எனக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனாலும் நான் மனம் திறந்து சொல்லுகிறேன். கஸ்தூரி என்கிற பெண்ணை மட்டும் உன்னிடம் தரவில்லை. கலைப் பொக்கிஷத்தையும் ஒப்படைக்கிறேன். அவள் கட்டழகி மட்டுமல்ல; கலை அமுதம். அவள் உன்னுடைய இல்லறத்துக்கு ஒளியாகப் பிரகாசிப்பாள். நீ...நீ... அவளுடைய இசைக்குச் சுருதியாக இருக்க வேண்டும். அவள் அம்மா.... உன் அத்தை கோமளத்தின் அந்திம அபிலாஷையை மறக்கமாட்டாயே அப்பா, பூபதி?'' உணர்ச்சிப் புயலில் வயோதிக உடல் தள்ளாடியது. பூபதியும் உணர்ச்சி வசப்பட்டான். ''பெரியப்பா! நீங்கள் சொல்ல வேண்டுமா? எனக்குத் தெரியும், பெரியப்பா! நீங்கள் கவலைப் படாதீர்கள். கஸ்தூரியின் இதயம் மட்டும் தான் எனக்குச் சொந்தம். கலை ரசிகர்களின் உடைமை. அழியும் அழகைக் கண்டு நான் நேசிக்கவில்லை. அமர இசைக்குத்தான் நான் அடிமையானேன். என்னை நீங்கள் நம்புங்கள், பெரியப்பா!'' என்றான்.

கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. கணவனின் ஆர்வமும் ரசிகத் தன்மையும் கஸ்தூரியைப் பிரமிக்க வைத்தன.

சுகுமாரன் உத்தியோகத்துக்குப் போய் வந்தான். கச்சேரிகளும் செய்தான். ஆனால் அவன் நடையில் ஒரு சோர்வு, பேச்சில் ஒரு சோகக் கீறல், முகத்தில் ஜீவனற்ற களை. பல மாதங்கள் வரை மகாதேவன் இவைகளைக் கவனிக்கவேயில்லை. அவரே கஸ்தூரியின் பிரிவில் வாடிக் கொண்டிருந்ததனால், மகனின் குமுறலைக் கவனிக்க இயலவில்லை. சுகுமாரன் இரண்டு மாதங்கள் லீவு கேட்டுக் கொண்டு வடக்கே எங்கெங்கோ சுற்றிவிட்டு வந்தான். அவன் சந்தோஷமாக நண்பர்களுடன் ஊர் சுற்றியதாக மகாதேவன் எண்ணியிருந்தார். அவன் வீடு திரும்பிச் சில நாட்களுக்குப் பின்னர் அன்றுதான் அவர் அவன் வாய்மூலமாக உணர்ந்தார். அவர் மட்டுமா ? கஸ்தூரியும் கேட்க நேர்ந்தது.

அன்றையக் கச்சேரிக்குப் புறப்படுமுன்னர் குருவும், மாமாவுமான மகாதேவனிடம் வழக்கம் போல் ஆசி பெற வந்தாள் கஸ்தூரி. படி ஏறி ஆளோடியில் நுழைந்தவளின் கால்கள் தாமாக நின்றன. உள்ளறையில் ஒலித்த சம்பாஷணை அவளைத் தடை செய்தது.

''என்னமோ நடந்து விட்டது. நன்றாகத்தான் இருக்கிறாள் குழந்தை. பூபதியும் உள்ளங்கையில்தான் தாங்குகிறான். அவளைப் பற்றிய வரையில் ஒரு கஷ்டமும் இல்லை; ஆனால்.... ஆனால்.... எனக்கு மனம் பூரணமாகச் சந்தோஷமடையவில்லையே. கோமளத்துக்கு உன்னைப் பற்றித்தான் எண்ணம். ஆனால் என்ன செய்வது? நீ...நீ...'' மகாதேவன் நிராசையுடன் கூறினார்.

''அப்பா! எனக்கும் கஸ்தூரிக்கும் திருமணம் நடந்திருந்தால் உங்கள் வாக்கு நல்ல முறையாக நிறைவேறியிருக்காது. இல்லற வாழ்வு ஒருகால் சுகம் சோலையாக இருந்திருக்கலாம். கலை வாழ்வு பூரணமாகியிருக்காதப்பா....'' சுகுமாரனின் குரலில் தீவிரமும் ஏக்கமும் இழையோடின.

''என்ன.... என்ன சொல்லுகிறாய் நீ?'' என்று மகாதேவன் பதற்றமுடன் வினவினார்.

''அப்பா! இசைப் பயிற்சி காலை வேளைகளில் நடந்ததே, அப்போது கஸ்தூரியின் மாறுதலை நீங்கள் கவனிக்கவில்லையா? கஸ்தூரி என்னைவிட அதிக கற்பனை ஸ்வரங்களைப் பாடும் போது நீங்கள் இரண்டொரு முறை என்னை மட்டமாகப் பேசி அவளை உயர்த்தினீர்கள். நான் மனிதன்தானே? அதிலும் ஆண்.... எனக்கு ரோஷம் உண்டானது உண்மைதான். அதை மறைக்க முயன்றேன். ஆனால் கஸ்தூரி என் சலனத்தைப் புரிந்து கொண்டு விட்டாள் போல் இருக்கிறது. அதற்குப் பிறகு அவள் எனக்கு மேலாகப் பாடவேயில்லை. நினைவிருக்கிறதா?''

''ஆமாம்,ஆமாம். அவள் ஏதோ சாக்குச் சொல்லி விட்டாள். ஓஹோ! அதற்குக் காரணம் இதுதானா......?''

''ஆமாம், அப்பா! அப்பவே நான் என் உள்ளத்தை மாற்றிக் கொள்ளத் தீர்மானித்து.... வெகு பாடுபட்டு....'' சுகுமாரன் உணர்ச்சிப் பெருக்குடன் கூறினான்.

''எனக்கும் மேலாகப் புகழ்பெற அவள் விரும்பமாட்டாள். நானே ஊக்குவித்தாலும் அவள் மனம் இணங்காது. உலகத்தார் கணவனைவிட மனைவியின் இசை உயர்வாக இருப்பதாகக் கூறும்போது என் மனத்திலும் வெறுப்போ பொறாமையோ ஏற்படக்கூடும். அது சகஜம். ஆனால் அவள் இசை தடங்கலின்றி மேலேற முடியுமா? ஒருகால் அவள் கலை தாகத்தினால் புகழின் மோகத்தினால் என் உள்ளத்தைப் பொருட்படுத்தாமல் நடந்து கொண்டால் குடும்பத்தில் சௌஜன்யம் இருக்காது. மனத்தில் ஒட்டடை ஏற்பட்டால் வாழ்க்கையில் நிறைவு உண்டாகுமா?''

''சுகு! உன் முன்யோசனைகளை நான் புரிந்து கொண்டு விட்டேன். கஸ்தூரியின் இசைக் கலை வளர, உயர நீ.... உன் ஆவலைத் தியாகம் செய்து விட்டாயே. உண்மையான கலைஞன் நீ..... சாதாரணமாக ரசிகர்களின் ஆதரவு கலைஞர்களுக்குத் தேவை. பெண் கலைஞர்களுக்கோ ரசிகர்களின் ஆதரவு மட்டுமல்ல, கணவனின் ஒத்துழைப்பும் தேவை. கஸ்தூரிக்குப் பூபதியின் ரசிக உள்ளமே ஆதார சுருதியாகி விட்டது....'' மகாதேவன் பரவசத்துடன் கூறும் போதே காற்றிலாடும் பூங்கொடி போல் கஸ்தூரி ஓடி வந்து மாமாவையும் சுகுமாரனையும் வணங்கினாள்.

''மாமா..... அண்ணா!'' அவள் வாய் இருவரையும் ஒரே சமயத்தில் அழைத்தது.

காரில் போகும் போது கஸ்தூரியின் மனம் நாததநாமக்கிரியை ராகத்தின் ஒலியைக் கேட்பது போல் களித்து உருகியது.

# அமெரிக்க பாகவதர்

நம்முடைய கர்நாடக சங்கீதத்தின் மகிமையை விளக்க முற்படுபவர்கள் முத்துஸ்வாமி தீட்சிதர் அமிர்தவர்ஷணி ராகம் பாடி எட்டையாபுரத்துப் பொட்டல்பூமியில் மழை பெய்யச் செய்தது பற்றியும், தியாகராஜ சுவாமிகள் திருப்பதியில் 'தெரதீய ராதா' என்ற கிருதியைப் பாடிச் சுவாமியை மறைத்திருந்த திரையை விலகச் செய்தது பற்றியும் சொல்வது வழக்கம். இந்த இருபதாம் நூற்றாண்டிலும் அத்தகைய அதிசய சம்பவம் ஒன்று நிகழ்ந்திருப்பது அவர்களுக்குத் தெரிய வருமேயானால் அதையும் இனிமேல் சேர்த்துச் சொல்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. அதாவது, நமது மொழி, கலாசாரம் ஆகிய எதையுமே அறிந்திராத ஓர் இளைஞரைப் பத்தாயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து இங்கே கவர்ந்து இழுத்திருக்கிறது இந்தப் பொல்லாத கர்நாடக சங்கீதம். அந்த இளைஞரின் பெயர்: ஜான் ஹிக்கின்ஸ்.

அமெரிக்காவில் நியூ இங்லாந்து மாநிலத்தைச் சேர்ந்தவரான ஹிக்கின்ஸ் சரித்திரத்தில் எம். ஏ. பட்டம் வாங்கி விட்டு, உலகின் பல்வேறு பாகங்களிலும் வழங்கும் இசை வடிவங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போது, ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் பரதநாட்டிய நிகழ்ச்சியொன்றைப் போய்ப் பார்த்தார். பாவம் ததும்பும் நாட்டியம் ஒருபுறமிருக்க, அதற்குப் பின்னணியாக இழைந்த பதத்தின் அழகில், ஓசை நயத்தில், இனிமைச் சுவையில் மனத்தைப் பறி கொடுத்த அவர், அப்போதே முடிவு செய்து விட்டார்— இந்தியாவுக்குப் போய் எப்பாடு பட்டாவது இந்தக் கர்நாடக இசையைக் கற்றுக் கொண்டே தீருவது என்று. அப்படி அவரைக் கவர்ந்த பதம்: 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ!'. அந்தக் காலத்தில் பகவான் கிருஷ்ணன் இந்தப் பதத்தைக் கேட்டுவிட்டு வேகமாக ஓடி வந்தாரா இல்லையா - நமக்குத் தெரியாது. ஆனால் ஹிக்கின்ஸோ ஓடியே வந்து விட்டார் இந்தியாவுக்கு!

'புல்பிரைட் ஸ்காலர்ஷிப்' திட்டத்தின்படி (சாதாரணமாக இந்த 'ஸ்காலர்ஷிப்' ஒன்பது மாதங்களுக்குத்தான் கொடுப்பார்களாம்; இவருக்கென்று பிரத்தியேகமாக மூன்று வருஷங்களுக்குக் கொடுத்திருக்கிறார்களாம்.) இந்தியாவுக்கு வந்து சேர்ந்த இவருக்குக் கற்பிக்க முன்வந்தவர் பிரபல இசைக் கலைஞரான திரு டி. விசுவநாதன் அவர்கள்.

''நீங்கள் கற்றுக் கொண்ட விதம் எப்படி? கீர்த்தனங்களையும், ஸ்வரங்களையும் அப்படியே ஆங்கிலத்தில் ஒலிபெயர்த்து வைத்துக் கொண்டு ஆரம்பித்தீர்களா?.....'' என்று கேட்டதற்கு 'இல்லை' என்று பதிலளித்தார் ஹிக்கின்ஸ். குரு-சிஷ்யக் கிரமத்தில் அதாவது அவர் பாடிக் காட்ட; இவர் பாடிப் பழக; அவர் திருத்த; இவர் திருப்பிப் பாட — இப்படித்தான் கற்றுக் கொண்டாராம். ஆரம்பத்தில் 'ழ'வும் 'ஷ'வும் வாயில் நுழைய மாட்டேனென்று சத்தியாக்கிரகம் செய்தனவாம். இப்போது?.... 'தென்னஞ் சோலை சூழ்' என்று அற்புதமாகப் பாடிக் காட்டுகிறார் மனிதர்!

கிருதிகள், கீர்த்தனைகள், வர்ணங்கள், பதங்கள் எல்லாமாகச் சேர்த்து நூறு உருப்படிகளுக்கு மேல் கற்றுத் தேர்ந்திருக்கும் ஹிக்கின்ஸ் அரங்கேறியது 1965-ல். இடம்: திருவையாறு ஸ்ரீ தியாகப்பிரும்ம ஆராதனை விழா: பந்துவராளியில் 'சிவசிவ அனராதா'வையும், கீரவாணியில் 'கலியுண்டே கதா'வையும் பாடி முடிக்கும் வரையில் பயம்தானாம். ''ஆனால் குழுமியிருந்த ரசிகர்கள் தந்த ஆதரவு எனக்குப் பெரும் உற்சாகத்தை ஊட்டி என் பயத்தை விரட்டியடித்தது'' என்று கூறுபவர், அதற்குப் பிறகு அவ்வப்போது மேடைக் கச்சேரிகள் செய்து வருவதுடன், தம் இசையறிவையும் வளர்த்துக் கொண்டு வருகிறார்.

ஒரு நாளைக்கு எவ்வளவு மணி நேரம் சாதகம் செய்கிறார் இவர்? ஆறு மணி நேரம் செய்கிறாராம். இதைச் சொல்லிவிட்டு இன்னொரு ரசமான விஷயத்தையும் சொன்னார்: முன்பு ஒரு பத்திரிகையாளர் இவரிடம் இதே பதிலைக் கேட்டுக் கொண்டு போய் விட்டு, பத்திரிகையில் எழுதும் போது, 'பதினாறு மணி நேரம் சாதகம் செய்கிறார்' என்று எழுதினாராம். ''என்னைப் பற்றி ஜனங்

ஜே. பி. ஹிக்கின்ஸ்



களுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்பட வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்தாரோ என்னவோ ?......'' என்றார் ஹிக்கின்ஸ் சிரித்துக்கொண்டே.

நமது குரு திரு விசுவநாதனைப் பற்றி நன்றியுணர்வு பொங்கக் குறிப்பிடும் இவர், அவரைப் பற்றிக் கூறுவது என்ன? ''இசைப் புலமை என்பது விசுவநாதன் அவர்களின் குடும்பச் சொத்து. அதில் எனக்குப் பங்கு பிரித்துக் கொடுத்திருக்கிறார் என் அன்புச் சகோதரரான விசு...... நான் இந்தத் துறையில் இவ்வளவு தேர்ச்சி அடைந்திருப்பதும் சரி, இந்தியாவில் இத்தனை நாட்கள் தங்கியிருப்பதும் சரி, எல்லாவற்றுக்கும் காரணமாகஅமைந்திருப்பவர் என் குருநாதர் தான்.''

கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளின் கீர்த்தனைகளில் பெரும்பாலானவை தெலுங்கிலேயே அமைந்திருப்பதால், அவற்றின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக, திரு புருஷோத்தம நாயுடு என்பவரிடம் முறையாகத் தெலுங்கு பயின்று வரும் திரு ஹிக்கின்ஸ் பார்த்திருக்கும் ஒரே தமிழ்ப் படம்: 'எங்க வீட்டுப் பிள்ளை'. படம் தமக்கு வெகுவாகப் பிடித்திருந்தது என்றும் தகவல் தெரிவிக்கிறார்.

சாதாரணமாக, சம்பிரதாய இசைக் கலைஞர்களுக்குச் சினிமா சங்கீதத்தின் மேல் ஆழ்ந்த வெறுப்பு இருக்கும். ஆனால் ஹிக்கின்ஸ் சமாசாரமே வேறு. புதிய இசை வடிவங்களையும் வரவேற்க வேண்டும் என்பதே இவர் கருத்து. ''சினிமா இசையினால் சம்பிரதாயமான கர்நாடக சங்கீதத்துக்கு ஒன்றும் ஆபத்து வந்துவிடப் போவதில்லை! எதற்குக் கவலைப்பட வேண்டும்?'' என்கிறார்.

திருப்பதி, சிதம்பரம், தஞ்சாவூர், காஞ்சிபுரம் ஆகிய இடங்களுக்குப் போய்க் கோயில்களைப் பார்வையிட்டுவிட்டு வந்திருக்கும் இவருக்கு மறக்க முடியாத அநுபவம்: சென்னையிலிருந்து டில்லிக்கு ரயிலில் பிரயாணம் செய்தது. இயற்கைக் காட்சிகள், உடை, மொழி, பழக்க வழக்கங்கள் ஆகியவை அனைத்துமே மாநிலத்துக்கு மாநிலம் வேறுபட்டிருப்பதைக் கண்கூடாகக் கண்டு அதிசயிக்கவும், இந்த நாடு எவ்வளவு பெரியது என்று உணரவும் அப்போது வாய்ப்புக் கிடைத்ததாம்.

இவருக்குப் பிடிக்காதது எது? சென்னை நகரத்தில் ஓடும் பஸ்கள் கிளப்பும் கரும்புகை.

பிடித்தது: இரண்டு 'சம்'. ஒன்று: ரசம்; இன்னொன்று பாயசம்.

தென்னிந்தியச் சமையலை ரசித்துச் சாப்பிடும் இவர் அடுத்த ஆண்டில் அமெரிக்கா திரும்புவதற்கு முன்பு அந்தமானுக்குப் போய் வரவேண்டுமென்று திட்டமிட்டிருக்கிறாராம். அந்தமான் விஜயத்தின் நோக்கம்: அங்குள்ள பழங்குடி மக்களின் இசையைப் பதிவு செய்து கொள்வது.

வேட்டி, ஜிப்பா, நெற்றிப் பொட்டு இவற்றுடன் மேடையில் காட்சி தரும் நியூ இங்லாந்து ஜே. பி. ஹிக்கின்ஸ் பாகவதர், அமெரிக்காவுக்குப் போய் டாக்டர் பட்டம் வாங்கிக் கொண்டு, இன்னொரு முறை இந்தியாவுக்கு வரப் போவதாகச் சொல்கிறார். ''இந்தியா என் இரண்டாவது வீடு. இதை மறக்க முடியுமா என்னால்?....'' என்கிறார் சிரித்தபடி.

— முகுந்தன்

---



**நா**ட்டிலுள்ள ஒவ்வொரு ஆரம்பப் பள்ளியிலுமுள்ள ஐந்தாம் வகுப்புக் குழந்தைகள் ஒவ்வொருவர் கையிலும் திருப்பாவை — திருவெம்பாவை நூல்களைக் கொடுத்து வரும் மார்கழி மாதத்துக்குள் மனப்பாடம் செய்விக்கும் பணியில் பள்ளி ஆசிரியர்கள் ஈடுபடக் கேட்டுக் கொள்கிறோம். மார்கழி மாதம் முழுவதும் விடியற்காலையில் குழந்தைகள் பாவைப் பாசுரங்களைப் பாராயணம் செய்து கொண்டு ஆங்காங்குள்ள திருக்கோயில்களை வீதி வலம் வரவேண்டுமென ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அபிப்பிராயப் படுகிறார்கள்.

இந்நோக்கம் நிறைவேற தேவஸ்தானங்களின் டிரஸ்டிகளும், நிர்வாகஅதிகாரிகளும் பக்கங்களில் உள்ள ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுடன் தொடர்பு கொண்டு, மாணவ மாணவிகளைப் பாவைப் பாசுரங்களை மனப்பாடம் செய்யும் பணியில் ஈடுபடச் செய்யவேணும்.

ஆரம்பப் பள்ளி ஐந்தாம் வகுப்புக் குழந்தைகளுக்குத் தேவையான பாவைப் புத்தகங்கள் உள்ளூரில் கிடைக்காவிடில் அடியிற் கண்ட விலாசத்துக்குப் போதுமான தபால் பில்லைகளுடன் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்: காரியதரிசி, திருப்பாவை — திருவெம்பாவை மத்யகுழு, 15, பெரியகடைத் தெரு, மாயூரம்.

மனப்பாடம் செய்விக்கும் இத்தொண்டைக் கூடிய விரைவில் தொடங்க வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

# தீபாவளிக்கு விசேஷ தள்ளுபடி

# 10%

**26.10.66 முதல் 11.11.66 வரை.**

## கோ-ஆப்டெக்ஸ்

- ★ கற்பனை
- ★ கை வண்ணம்
- ★ எழில்
- ★ ஒருங்கே அமைந்தது.

## கைத்தறித்துணி விற்பனையில்

இந்த தள்ளுபடி எல்லா "கோ-ஆப்டெக்ஸ்" விற்பனை நிலையங்களிலும், பிரதம நெசவாளர் கூட்டுறவு சங்கங்களிலும் கிடைக்கும்.

**தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்,** எழும்பூர், சென்னை-8.



ELEGANT

சிறு சேமிப்பில் முதலீடு செய்யுங்கள்

இந்த வருஷம் புகழ் பெற்ற எச். ஜி. வெல்ஸின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடுகிறார்கள். எடையற்ற நிலை என்பது பற்றி இந்த விண்வெளிப் பயண யுகத்தில் அடிக்கடி நாம் கேள்விப்படுகிறோம். ஆனால் இந்நிலை குறித்து எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பாகவே தீர்க்க தரிசனத்துடன் சிந்தித்துக் கதை புனைந்திருக்கிறார், மேதை எச். ஜி. வெல்ஸ்.

லண்டனில் ஒரு கிளப்பில் பைகிராப்டும் பார்மலினும் அங்கத்தினர்கள். 'கிளப்' அங்கத்தினர்களிலேயே பைகிராப்ட்தான் மிகவும் பருத்தவன். சந்தேக புத்தியும் வாழ்வில் கசப்பும் கொண்டிருந்த பைகிராப்ட் சூடான கேக்குகளை மிகவும் விரும்பிச் சாப்பிடுவான். அவன் எப்போதும் பார்மலினைச் சந்தேகக் கண்களுடன் பார்த்துக்கொண்டே யிருப்பான். அவனது கண்களில் ஒரு பரிதாபகரமான ஒளி





# பைகிராப்டைப்

தோன்றி, ''தயவு செய்து சொல்லி விடாதே'' என்று பார்மலினைக் கெஞ்சும். இந்தப் பரிதாபகரமான பார்வையைப்பார்மலினால்தாங்கமுடிவதேயில்லை.

கிளப்பில் அங்கத்தினனாகப் பார்மலின் சேர்ந்த புதிதில் பைகிராப்ட் அவனது நட்பை நாட வந்தான். பார்மலின் அப்போது மிகவும் கூச்சமுடையவனாக இருந்தான். கொஞ்ச நாட்களில் பைகிராப்டும் பார்மலினும் நெருங்கிய நண்பர்கள் ஆகிவிட்டனர்.

பைகிராப்ட் ஓயாமல் பேசிக்கொண்டே யிருப்பான். அவனுக்குத் தெரியாத விவரமே கிடையாது. எல்லாவற்றைப் பற்றியும் பேசுவான். தனது பருத்த தேகத்தைப் பற்றி ஒரு நாள் பைகிராப்ட் பேசத் தொடங்கினான். அவனுடைய பருத்த உடல், அந்தப் பருமனைக் குறைப்பதற்குரிய வழிகள் ஆகியவற்றைப் பற்றிப் பேசிப் பேசி அவன் பார்மலினை மிகவும் 'போர்' அடித்துவிட்டான். பைகிராப்டினுடைய



ஓயாத பேச்சு பார்மலினுக்குத் தீராத தலைவலியாக இருந்து வந்தது.

பார்மலினுக்கு ஓர் இந்துக் கொள்ளுப்பாட்டி இருந்தாள். அவள் வைத்தியத்தில் மிகவும் தேர்ச்சி பெற்றவள். பார்மலின் சிறிது கறுப்பாக இருப்பான். தனது நிறத்தைக் கொண்டு தனது கொள்ளுப் பாட்டி இந்தியாவைச் சேர்ந்தவள் என்பதைத் தனது நண்பர்கள் கண்டு பிடித்து விடுவதைப் பார்மலின் விரும்புவதில்லை.

இங்கிலாந்து நாட்டு மருந்துகள் எவையும் பைகிராப்டின் பருமனைக் குறைக்க முடியாமற்போகவே அவன் பார்மலினுடைய உதவியை நாடினான்.

தனது கொள்ளுப் பாட்டி எழுதி வைத்திருக்கும் வைத்திய முறைகளைப் பைகிராப்டுக்கு எழுதிக் கொடுக்கப் பார்மலினுக்கு விருப்பம் தான். ஆனால் பார்மலின் ஒரு நிபந்தனை விதித்தான். இனி, கிளப்பில் ஓயாமல் பேசிப் பேசிப் பைகிராப்ட் பார்மலினைப் 'போர்' அடிக்கக் கூடாது என்பதுதான் அது. பைகிராப்ட் சிறிது தயங்கிவிட்டுப்பிறகு இந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டான்.

பார்மலின் எழுதிக் கொடுத்த விநோதமான வைத்திய முறைகளைப் பைகிராப்ட் அனுசரிக்கத் தொடங்கிப் பதினைந்து நாட்கள் கழிந்து விட்டன. எதுவுமே நிகழவில்லை. தினந்தோறும் பைகிராப்ட் கிளப்புக்கு வருவான். ஆனால் அவன் நிபந்தனைப்படி பார்மலினுடன் பேசாமல் இருந்து வந்தான்.

இப்படி இருக்கையில், திடீரென்று ஒரு நாள் பைகிராப்டிடமிருந்து பார்மலினுக்குத் தந்தி வந்தது. ''கடவுளின் மேல் ஆணை, உடனே புறப்பட்டு வா!''

தந்தியைப் பார்த்ததும் பார்மலின் அலறி அடித்துக் கொண்டு பைகிராப்டினுடைய வீட்டுக்கு ஓடினான். அங்கு அந்த வீட்டு வேலைக்காரிதான் இருந்தாள். அவள் கூறிய செய்தி இன்னும் திகிலூட்டுவதாக இருந்தது.

பைகிராப்ட் தனது அறையின் உட்பக்கம் தாளிட்டுக் கொண்டு இரண்டு நாட்கள் ஆகிவிட்டதாக அவள் கூறினாள். இரண்டு நாட்களாகப் பைகிராப்ட் வெளியே வரவேயில்லை!

பார்மலின் இதைக் கேட்டு அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தாலும் சிறிதும் தயங்காமல் உடனே அந்த அறையின் கதவைத் தட்டினான். உள்ளேயிருந்து பைகிராப்டின் குரல், ''யாரது பார்மலினா?'' என்று கேட்டது. ''யாரது, பைகிராப்டா?'' என்று பார்மலின் பதிலுக்குக் கத்தினான்.



சில நிமிடங்களுக்குத் தொடர்ச்சியாக உள்ளேயிருந்து விநோதமான சப்தங்களும், பைகிராப்டின் வழக்கமான முனகல்களும் வந்த வண்ணம் இருந்தன. சிறிது நேரத்தில் கதவு திறக்கப்பட்டது. ''உள்ளே வா'' என்று அழைத்தது பைகிராப்டின் குரல்.

# பற்றிய உண்மை

எச். ஜி. வெல்ஸ்



உள்ளே நுழைந்த பார்மலின் தன் எதிரே பைகிராப்ட் நின்று கொண்டிருப்பான் என்று எதிர்பார்த்ததில் தவறு ஒன்றுமில்லை. ஆனால், பார்மலினுக்கு அவனது வாழ்வின் மிகப் பெரிய அதிர்ச்சி அங்கே காத்திருந்தது. பைகிராப்டை அறையின் உள்ளே காணவில்லை!

பைகிராப்ட் என்ன ஆளுன் என்று கண்டுபிடிக்கப் பார்மலினுக்குச் சிறிது நேரம் ஆயிற்று. உண்மையிலேயே அது மிகப் பெரிய கண்டு பிடிப்புத்தான். அறையின் உச்சியில் மேல் தளத்தின் மேல் இடித்துக் கொண்டு பைகிராப்ட் தொங்கிக் கொண்டிருந்தான்.

வியப்புக்கு மேல் வியப்பும், அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியும் தொடர்ந்து வந்தன. மேல் தளத்தில் எதையும் பிடித்துக்கொண்டு பைகிராப்ட் தொங்கிக்கொண்டிருக்கவில்லை. ஹைட்ரஜன் வாயு அடைக்கப்பட்ட பலூனைப்போல் இயல்பாகவே அவனது தலை மேல் தளத்தில் இடித்துக்கொண்டிருந்தது!

இதைப் பார்த்த பின்னர்தான் பைகிராப்டுக்கு என்ன நேர்ந்துவிட்டது என்பது பார்மலினுக்குத் தெரிய வந்தது. பார்மலின் கொடுத்த மருந்து, பைகிராப்டின் பருமனைக் குறைப்பதற்குப் பதிலாக, அவனது எடையைக் குறைத்து விட்டது. இதுவும் பைகிராப்டின் தவறுதான். தனது 'பருமனை' அவன் எப்போதும் 'எடை' என்று தான் அழைத்து வந்தான்.

அதிர்ச்சியும் வியப்பும் ஓரளவுக்கு நீங்கிய பின் பைகிராப்ட் கீழே இழுக்கப் பட்டான். பார்மலின் அவனை ஒரு மேஜையின் அடியில் தள்ளினுன். இனி பைகிராப்ட் என்ன செய்வது என்பதுதான் மிகப் பெரிய பிரச்னையாக இருந்தது. ஆனுல் கண்டிப்பாகச் செய்யக்கூடாத ஒன்றைப் பார்மலின் சுட்டிக் காட்டினுன்.

ஆம்! பைகிராப்ட் தனது அறையை விட்டு வெளியே செல்லவே கூடாது. வெளியே சென்ருல் அவன் காற்றில் மிதந்து ஆகாய வெளிக்கே சென்று விடுவான்!

வெகு நேரத்துக்குப் பைகிராப்ட் பார்மலினையும், அவனுடைய கொள்ளுப் பாட்டியையும் திட்டிக் கொண்டேயிருந்தான். ஆனுல் தவறுகள் தன்மேல் தான் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது.

இப்படி இருக்கும்போது திடீரென்று ஒரு புதிய பிரச்னை எழுந்தது. ''பைகிராப்ட் தூங்குவது எப்படி?''

பைகிராப்டின் தினசரி வாழ்க்கையை வசதி மிக்கதாகச் செய்வதற்குப் பல யோசனைகள் கூறினுன் பார்மலின். ஒரு படுக்கையைத் தலை கீழாகக் கவிழ்த்துத் தொங்க விட்டான்.... பைகிராப்டின் கைக்கு எட்டும் தூரத்தில் 'அழைப்பு மணி' ஒன்றையும், 'பிரிட்டிஷ் கலைக் களஞ்சியங்கள்' இரண்டையும் வைத்தான். அந்த இரு புத்தகங்களையும் கையில் வைத்துக் கொண்டால் அவற்றின் கனத்தில் பைகிராப்ட் கீழே வர முடியும். இரண்டு நாட்கள் பைகிராப்டின் அறையிலேயே தங்கி இவைகளைச் செய்து முடித்தான் பார்மலின். தலைகீழாக நிறுத்தப்பட்ட ஒரு விளக்கும் பைகிராப்டின் அறையில் தொங்க விடப்பட்டது.

இவ்விதமே சில நாட்கள் சென்றன. ஒரு நாள் பைகிராப்டின் அறையில் உட்கார்ந்து 'விஸ்கி' அருந்திக் கொண்டிருக்கும்போது பார்மலின் மூளையில் ஓர் அரிய யோசனை பளிச்சிட்டது. ஈயத்தால் செய்யப்பட்ட உள்ளணியை பைகிராப்ட் அணிந்து கொண்டால்...? பைகிராப்ட் இந்த யோசனையை ஆனந்தக் கண்ணீருடன் வரவேற்ருன்.

ஈயத்தால் செய்யப்பட்ட உள்ளாடை, அடியில் கனமான ஈயம் பொருத்தப்பட்ட காலணி இவற்றை அணிந்து கொண்டு, கையிலும் கனமான ஈயக் குண்டுகள் அடங்கிய ஒரு பையை வைத்துக் கொண்டால், பைகிராப்ட் எப்போதும் போல் வெளியில் செல்ல முடியும். ஈயத்தின் எடை அவனைக் காக்கும்.

இந்த யோசனையைக் கேட்டதும், ஏற்பட்ட அளவு கடந்த மகிழ்ச்சியில் தன்னையே இழந்தவனுய், ''நான் இனி கிளப்புக்குக்கூட வரலாம்'' என்று பைகிராப்ட் கத்திவிட்டான். இதைக் கேட்டவுடன்தான் தனது அரிய யோசனை தனக்கே ஆபத்தாக முடிந்து விட்ட விவரம் பார்மலினுக்குப் புரிந்தது. பைகிராப்ட் எப்போதும் போலக் கிளப்பில் 'போர்' அடிக்கத் தொடங்கி விடுவான்!

பைகிராப்ட் திரும்பவும் கிளப்புக்கு வரத்தான் செய்தான். ஆனுல் அவன் தனது ஓயாத பேச்சால் பார்மலினை போரடிக்கவில்லை. தனியே ஒரு நாற்காலியில் அமர்ந்துகொண்டு, தனக்கு மிகவும் பிடித்தமான சூடான கேக்குகளை விரும்பிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஆனுல், அவன் கண்கள் எப்போதும் பார்மலினைச் சந்தேகத்துடன் நோக்கிக் கொண்டேயிருக்கும். அவனது கண்களில் தோன்றும் ஒரு பரிதாபகரமான ஒளி, 'தயவுசெய்து எவரிடமும் சொல்லிவிடாதே' என்று பார்மலினைக் கெஞ்சும். இந்தப் பரிதாபகரமான பார்வையைப் பார்மலினுல் தாங்க முடிவதேயில்லை!

—சீர்காழி த. ஜயராமன்

# பாலுஸேரி பெனிபிட் சிட்பண்ட் பிரைவேட் லிட்.

(நிறுவியது: 1947)

தலைமைக் காரியாலயம் &
ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
பாலுஸேரி பில்டிங்
3, சிங்கராச்சாரி தெரு
சென்னை - 5

கிளைகள்:
புது டெல்லி - 1, 3 & 5
பெங்களூர் - 9
கல்கத்தா - 29
பம்பாய் - 1 & 22

## ஏலச் சீட்டுகள் - 1966 நவம்பர் ஸீரிஸ்

### பம்பாய் கிளைகள்

| கிங்ஸ் சர்க்கிள் கிளை | போர்ட் (Fort) கிளை |
|---|---|
| விஜய விஹார் (ஷண்முகானந்தா சபா அருகில்) 17-A, பிளாங் ரோடு, பம்பாய்-22 D. D. போன்: 471455 - தந்தி: GROWRICH | சத்னம் மான்ஷன் முதல் மாடி 245, பி. டிமெல்லோ ரோடு (G. P. O. அருகில்) பம்பாய் - 1 B. R. தந்தி: EVERMANS |
| ஏலத் தேதி: 20-11-66 (குறுகியகால சீட்டுகள்) சேரக் கடைசி தேதி: 19-11-66 | ஏலத் தேதி: 26-11-66 (குறுகிய&நீண்டகால சீட்டுகள்) |
| ஏலத் தேதி: 19-11-66 (நீண்டகால சீட்டுகள்) சேரக் கடைசி தேதி: 17-11-66 | சேரக் கடைசி தேதி: 25-11-66 (குறுகிய & நீண்டகால சீட்டுகள்) |

**கிங்ஸ் சர்க்கிள் கிளை**

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத்தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| A | 200/- | 25 | 5000/- |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| C | 200/- | 50 | 10000/- |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**போர்ட் (Fort) கிளை**

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத்தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**கிங்ஸ் சர்க்கிள் கிளை:**
வேலை நேரம்: காலை 8 முதல் 10-30 மணி வரை; மாலை 4 முதல் இரவு 8 மணி வரை
வார விடுமுறை நாள் - வெள்ளி

**போர்ட் (Fort) கிளை:**
வேலை நேரம்: காலை 11 முதல் மாலை 6 மணி வரை
வார விடுமுறை நாள் - ஞாயிறு

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

**பாலுஸேரி மூலம் சேமிப்புகளைப் பெருக்கி பயனடையுங்கள்**



# 25. வேந்தன் கழல் காட்டிய வேய்ங்குழல்

மேல் மழை நாடு சோழ வள நாட்டின் உட்பிரிவுகளில் ஒன்று. இது மண்ணுலகுக்கு அருமங்கலமாக விளங்குவது. அதற்கும் ஒரு தனி மங்கலமாகப் பொலிவது திருமங்கலம் என்ற பழைமையான திருத்தலம். இத்தலம் லால்குடி இரயில் நிலையத்திலிருந்து பூவாளூர் வழியே வடமேற்கில் மூன்று கல் தொலைவில் உள்ளது. தாய்க் கொலை செய்த பாவம் நீங்கப் பரசுராமர் இறைவரை இங்கு வழிபட்டு அருள் பெற்றார்; இறைவர் பரசு என்ற படைக்கலத்தை நல்கினார். அதனால் இங்குள்ள இறைவருக்குப் பரசுராமீச்சரம் உடையார், திருமழுவுடைய நாயனார், சாமவேதீசுவரர் என்ற திருநாமங்கள் வழங்குகின்றன. நல்ல நீர்வளமும் நில வளமும் உடைய இத்திருத்தலத்தில் வேத ஓசையும், வேய்ங்குழல் ஓசையும் வெண் சங்க ஓசையும் எப்போதும் இனிமையாக முழங்கும்.

சீரும் சிறப்பும் பொருந்திய அத்திருப் பதியில் ஆயர்குலம் செய்த தூய பெருந் தவத்தினால் ஆனாய நாயனார் அவதரித்தார். இறைவருக்குப் பஞ்ச கவ்யம் தருவதும், திருநீற்றுச் சாணம் தருவதும் பசுக்களே. பசுக்களை இனிது காக்கும் குலம் ஆயர் குலம். அக்குலம் விளங்கத் தோன்றிய நாயனார் ஆன்களை உடையவராதலின் ஆனாயர் என்னும் திருநாமம் பெற்றார். ஆயர் குலத்தார் அனைவரும் யதுகுல க்ஷத்திரியர். சாக்ஷாத் கிருஷ்ண பகவான் அக்குலத்தில் அவதரித்தவர். யதுகுல மரபு உயர்ந்த மரபு. அவர்களில் பலர் அரசர்களாக இருந்திருக்கிறார்கள். யது குலத்தாருக்குச் சில பகுதிகளில் மந்திரி என்றே பெயர் வழங்குகிறது. ஆகவே அவர்களில் பலர் மந்திரிகளாகவும் இருந்திருக்கிறார்கள் என்று அறியலாம். அந்த யதுகுலத்தில் பிறந்தோர் அனைவரும் திருமண் இட்டுக் கொள்கிறவர்கள். ஆனால் பழங்காலத்தில் அவர்களில் திருநீறு அணிந்து கொண்டவர்களும் உண்டு என்று தெரிகிறது.

ஆனாயர் தூய ஒளியை வீசும் வெண்ணீற்றை விரும்பும் 'திருத் தொண்டில் நின்றார். மனத்தாலும் வாக்காலும் சிவபெருமானை அன்றி வேறு ஒன்றையும் விரும்பவில்லை. ஐந்தெழுத்தை ஓதும் சிந்தை யுடைய அவர் திருநீற்றை நிறையப் பூசிக் கொண்டும், திருநீறு பூசும் தொண்டரைக் கண்டு அன்பு செய்தும் அவர் உள்ளம் உவக்கத் தொண்டு செய்து மகிழ்வார்.

கன்றுகளையும், பசுக்களையும், எருதுகளையும் புறங்காட்டுக்குக் கொண்டு சென்று, விலங்குகளால் வரும் துன்பமும், நோயும் வாராவண்ணம் காப்பாற்றி, இனிய மென்புல்லையருத்தி, நன்னீர் பருகுவித்து, ஆன் இனங்கள் அளவின்றிப் பெருகுமாறு செய்தார் ஆனாயர். கன்றுகள், பால் கறவை மாறிய பசுக்கள், பால் கறக்கும் பசுக்கள், சினைப் பசுக்கள், இளங் கன்றுடைய பசுக்கள், எருதுகள் ஆகிய இவைகளைத் தனித் தனியே கொண்டிருந்த தொழுவங்கள் பல அவரிடம் இருந்தன. கோவலர் என்றும் ஏவல் புரிந்திட ஆயர்குலத் தலைவராக விளங்கினார் ஆயனார். சிவமூர்த்திக்கு உபயோகமாகும் பால் முதலியன தரும் ஆவின் குலத்தைக் காப்பாற்றிச் சிவப் பணி செய்து வந்த அவர், சிவ பெருமான் திருவடியில் அன்பு பொருந்திய இசையுடனே வேய்ங்குழல் ஊதுவதை மேற்கொண்டார்.

இசை எல்லோரையும் இசைவிப்பது. எல்லா உயிர்களையும் இசைவிப்பது. இனிய இசையால் கல்லும் புல்லும் உருகும். சராசரங்கள் தழைக்கும்.

இசைக் கருவிகள் ஐந்து வகைப் படும். துளைக் கருவி, நரம்புக் கருவி, தோற் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்பன. அதில் புல்லாங்குழல் துளைக் கருவியாகும். யாழ் நரம்புக் கருவி. யாழைவிடக் குழல் உயர்ந்தது. யாழ் செயற்கை; குழல் இயற்கை.

கானகத்தில் மூங்கில்கள் ஓங்கி வளர்ந்திருக்கும். அதில் சில சமயம் நெருப்பு உண்டாவதால் சில மூங்கில் குழாய்களில் தொளை உண்டாகும். அப்பொழுது காற்று வீசும். அதனால் அந்தக் குழாய்களில் இயற்கையாகவே

இனிய நாதம் உண்டாகும். இந்த இனிய வேய்ங்குழலை முதன் முதலாக ஐந்து உயிர்கட்கு இன்பமூட்டியவர் முருகவேள். ''குழலன் கோட்டன் குறும்பல்லியத்தன்'' என்று கூறுகிறது திருமுருகாற்றுப்படை. பின்னர் வேய்ங்குழலை வாசித்துப் பசுக்களுக்கு மகிழ்ச்சியை விளைவித்தவர் கண்ணபிரான்.

ஒத்த நிலத்தில் காற்று மயங்காதபடி இனிது வளர்ந்த மூங்கிலை ஒரு புருடாகாரமாய் வெட்டி அதனை நிழலிலே ஓராண்டு உலருமாறு செய்ய வேண்டும். நான்கு பக்கங்களின் காற்று மயங்கின் நாதம் இராது. இளமையாகவும் முதுமையாகவும் இன்றி ஒரு புருடாயுள் வளர்ந்த மூங்கிலாக இருக்க வேண்டும். அவ்வாறு ஓராண்டு நிழலில் உலர்ந்த குழல்களில் திருகுதல், பிளத்தல் முதலியன இன்றிச் செவ்வையாக இருப்பதை எடுத்து, அடிப்புறத்தில் ஓரங்குலம் விடுத்து ஊதுவதற்குத் தொளை போட வேண்டும். இவ்வாறு இசைக் கலை நூலில் கூறிய முறைப்படி வளர்ந்த மூங்கிலில் நன்கு செய்து அமைத்த குழலில் எம்பிரானுடைய பஞ்சாக்கரத்தைத் தொடுத்து ஏழிசையின் சுருதி பெற வாசித்து, சராசரங்களெல்லாம் பொருந்துமாறு இசையமுது வழங்கினார் ஆனாயர். வன்மை, மென்மை, சமன் என்ற மூவகையான ஒலிகளால் அமிர்தம் ஒழுகுவதுபோல் இவர் இனிய குழலை வாசித்தபோது, சரம், அசரம் இரண்டும் உருகி இசை மயமாயின. பிறவிப் பெரும் பிணிக்குச் சிறந்த மருந்தாகிய திரு ஐந்தெழுத்து அந்த இசைக்கு உள்ளுறையாக விளங்கியபடியால் உலகங்களெல்லாம் அதனைக் கேட்டு உய்வு பெற்றன.

ஒருநாள் ஆனாயர் நறுமலர் மாலை புனைந்தார்; தலைமயிரைக் கோதி ஒரு புறம் முடித்தார்; அதில் கண்ணிமாலையைச் சூடினார். வடிந்த காதிலே காந்தள் மலரைச் செருகினார். மரவுரியும், தழையுடையும் கட்டிக் கொண்டு, நெற்றி நிறையத் திருநீறு பூசிக் கொண்டார். காலில் தோற்பாதுகை தரித்துக் கொண்டார். வெண் கோலும், வேய்ங் குழலும் எடுத்துக்கொண்டு, ஏவலரும் கோவலரும் தொழுது சூழ, ஆனிரைகளும் சூழ, முல்லை நிலத்துக்குச் சென்றார். அப்பொழுது கார்காலம். முல்லை மலர் பூத்து எங்கும் இயற்கை யன்னை களி நடம் புரிந்தாள்.

அழகிய கொன்றை மரம் ஒன்று இனிது பூத்திருந்தது. தாழ்ந்த கிளைகளைக் கொண்டிருந்த மரத்தில் வண்டுகள் தேனை உண்டு உலவின. அக்கொன்றை மரத்தில் இருந்த பூங்கொத்துக்களும், கனிகளும் அவருக்குச் சிவபெருமானை நினைவூட்டின. ஆத்தி சூடியமர்ந்த தேவனின் நினைவு வந்ததும் உள்ளம் உருகியது. அன்பு ஊறிப் பொங்கிய அமுத இன்னிசைக் குழலில் இசை வெள்ளத்தின் மடையைத் திறந்தார். பிறவிப் பெரும் பிணிக்குச் சிறந்த மருந்து திரு ஐந்தெழுத்தே. அது வேத இருதயமாக எல்லா மந்திரங்கட்கும் மூலமாக மகா மநுவாக விளங்கும். இத்திருமந்திரத்தை உள்ளுறையாக வைத்து, எல்லா உயிர்களுடைய எலும்பும் கரையுமாறு குழல் வாசிக்கத் தொடங்கினார் ஆனாயர். அந்த இன்னிசை கற்பகப் பூவிலிருந்து உண்டாகிய தேனும், தேவாமிர்தமும் கலந்து பாய்வது போல் எல்லா உயிர்களுக்குள்ளும் புகுந்து நிரம்பியது.

ஆனாய நாயனாரின் இனிய நாதத்தைக் கேட்ட ஆனிரைகள் அறுகருந்தி அசை போடாமல் அருகு வந்து நின்றன. தாய் மடியில் பால் குடித்துக் கொண்டிருந்த இளங் கன்றுகள் பால் குடிப்பதை விட்டு மறந்து நின்றன. எருதுகளும், மான் முதலிய விலங்குகளும் மயிர் சிலிர்த்து வந்து அணைந்தன. ஆடுகிற மயில்கள் ஆடல் விடுத்து அருகு வந்தன. நாகலோகத்திலிருந்த நாகர்கள் பில வழியே வந்து இன்புற்றனர். மலைகளில் வாழும் அரமகளிர் வந்து மயங்கினர். விஞ்சையர், கின்னரர், தேவர் முதலியோர் உருகி விமானங்களின் மீது வந்து அணைந்தார்கள். கற்பகத் தருவின் கீழ் அமர்ந்து கிளிகளுக்கு அமுது ஊட்டிக் கொண்டிருந்த அமர மாதர்கள் அக்கிள்ளைகளுடன் கூந்தல் அணைய விமானம் ஏறி வந்து இசையமுதைப் பருகி உருகினார்கள். இசையைக் கேட்டு வாய் பிளந்து நின்றிருந்த பாம்பின் அருகில் மயில் இருக்கிறது. மயிலின் மீது பாம்பு விழுந்து புரள்கிறது. சிங்கமும் யானையும் ஒன்றுபட்டு நிற்கின்றன. 'ஆ' வென்று வாயைப் பிளந்து கொண்டு நிற்கும் புலிக்கு அருகில் வந்து நிற்கிறது மான். இப்படியாகப் பகைவர்கள் ஒன்றுபட்டு நின்றனர். காற்று வேகமாக வீசவில்லை. மரங்களின் மலர்க் கிளைகள் அசையவில்லை. மலையிலிருந்து விழும் அருவிகளும் ஆறுகளும் ஒலித்து ஓடவில்லை. முகில் மழை பொழியாது நின்றது. சமுத்திரத்தில் அலை ஓய்ந்து விட்டது. ஆனாயரின்

குழல் வண்ணத்தில் சராசரங்கள் யாவும், விண்ணுலகும், மண்ணுலகும் இசை மயமாகிப் பொறிபுலன் கரணங்களெல்லாம் ஒன்றுபட்டன. உருகி உருகி அன்பு பெருகி நின்றன. மண்ணும் விண்ணும் நிறைந்த அவ்விசை பொய்யன்புக்கெட்டாத ஐயன் திருச் செவியிலும் அணுகியது.

**ஆனாயர் குழலோசை கேட்டருளி அருட் கருணை**
**தானாய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்**
**கானாதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து**
**வானூடு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடை தாழ**

அருட் கருணையாய திருவுள்ளமுடைய தவ வல்லியாகிய அம்பிகையுடன், கானம் முதலிய கலைகட்கெல்லாம் காரணராகிய கண்ணுதற் கடவுள் விடையின் மீது விண்மிசை தோன்றியருளினார். குழல் ஒலியில் ஐந்தெழுத்தினால் பரவும் இசையை விரும்பிய திருகூத்தர் திருத் தொண்டர் முன்னே நின்று அருள் புரிந்தார். செம்மை மனமுடைய பெரியோருடைய குழல் நாதத்தை எப்பொழுதும் கேட்க விரும்பிய எம்பெருமான், ''இந்நின்ற நிலையே நம்பால் அணைவாய்'' என்று அருளிச் செய்தார். ஆனாயர் குழல் வாசித்த வண்ணமாகவே இறைவர் அருகில் விளங்கும் பதம் பெற்றார்.

# 26. கையிருக்கக் கட்டை ஏன்?

அறுபத்து மூன்று நாயன்மார்களில் துறவற நெறி நின்று வீடு பேறு பெற்றவர் இருவர். ஒருவர் திருநாவுக்கரசு நாயனார்; மற்றவர் மூர்த்தி நாயனார்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமானுக்குச் செய்யும் திருத் தொண்டுகள் பலவற்றுள் சந்தனக் காப்பு சிறந்தது. சிவபெருமான் திருமேனியில் சந்தனக் காப்பு பொருந்திக் குளிர்வித்தால் உலகில் உள்ள எல்லா உயிர்களையும் குளிர்விப்பது போலாகும்.

கஸ்தூரி, கோரோசனம், குங்குமப்பூ பச்சைக் கர்ப்பூரம் முதலிய நறுமணப் பொருள்களைக் கூட்டி இறைவருக்கு ஒருமுறை சந்தனக் காப்புச் செய்தவர் தேவ வருடத்தில் கோடி வருடம் சிவலோகத்தில் இன்புற்று இருப்பர்.

**உகந்த கந்தஞ் கலவிய லேபனம்**
**உகந்த லிங்கத் தொருதினஞ் சாத்தினோர்**
**இகந்து பாவம் இமையவர் கோடியாண்**
**டகந் தெளிந்தங் கரன்பதி நண்ணுவரர்**

என்பது சிவ புண்ணியத் தெளிவு. இத் திருத் தொண்டினை இடையறாது செய்து சிவபதம் பெற்றவர் மூர்த்தி நாயனார்.

தமிழகத்தில் பழைமையான நாடு பாண்டிய நாடு. அது நல்வழியில் வந்த செல்வமுடைய குடிகள் பலர் நிறைந்து வாழும் சிறப்புடையது. ''பூமியர் கோன் தென்னாடு முத்துடைத்து'' என்ற திருவாக்கின்படி முத்தும் முத்தமிழும் தந்து முதன்மை பெற்றது. செந்தமிழ்க் கழகமும், சந்தனச் சோலையும் விளங்கும் பொதிய மலையிலிருந்து வீசும் தென்றற் காற்றினால் குளிர்வது அந்நாடு. தென்றலும், தென்றமிழும் பிறந்த நாடு அதுவாயின் அதன் பெருமையை ஆரே அளக்கவல்லார்? எந்நாட்டினும் சிறந்த அந்நாட்டின் தலை நகரம் மதுராபுரி. அகில லோக நாயகி தடாதகைத்தாய் திருவவதாரம் செய்ததும், இறைவர் இருந்து அரசு புரிந்ததும், அறுபத்து நான்கு திருவிளையாடல் புரிந்ததும், மதுரைமாநகரில் எனின் அதன் சிறப்பு இமய மலையிலும் உயர்ந்தது அன்றோ? திருமகள் நீங்காது வாழும் அத்திருநகரில் முத்தமிழ்ச் சங்கம் ஓங்கி உயர்ந்திருந்தது. இத்தகு சீரும் சிறப்பும் மிக்க மதுரையம்பதியில் மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தார். வணிகர் குலம் செய்த மாதவத்தால் தோன்றிய அவர், அகப் பற்று, புறப் பற்று என்ற இரு பற்றுக்களையும் விட்டு, பற்றற்ற பரமனின் பாதங்களைப் பற்றி நின்றார். அவர் சுற்றமும் தொடர்பும் நீத்து வாழ்ந்த முனிவர்.

சொக்கலிங்கப் பெருமானுக்கு நாள் தோறும் சந்தனம் அரைத்துக் கொடுக்கும் திருத் தொண்டினைப் புரிந்து வந்தார் மூர்த்தி நாயனார். அதுவே அவரது நித்தியக் கடமையாக இருந்தது.

மண்ணாசை கொண்ட வடுகக் கருநாட்டு மன்னன் ஒருவன் நால்வகைப் படையுடன் தென் திசை நோக்கி வந்தான். கடல் போன்ற சேனைகளைப் பரப்பிப் பாண்டியனை வென்றான். வெற்றி பெற்ற அவன், சந்தனச் சோலை சூழ்ந்த செந்தமிழ் மதுரையைத் தலைநகராகக் கொண்டு அரசு புரியலானான். செம்மை மனம் இல்லாத அம்மன்னன் சைவ நெறிநின்று உய்யு நெறியறியாது,



''ரேடியோவிலே எனக்கு சான்ஸே கிடைப்பதில்லே. அதனாலே, பெரிய பொண்ணுக்கு ஆகாஷவாணி; சின்னவளுக்கு விவித் பாரதி என்று பெயர் வச்சிருக்கேன்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

சமண சமயத்தைச் சார்ந்தான். தான் சார்ந்ததோடன்றித் தெய்வநலம் மிக்க சைவ நலம் பேணும் திருத் தொண்டர்களையும் துன்புறுத்தி வன்மை புரிந்து வந்தான். அரவடியார்க்கு இடர் பல புரிந்த அவன் கீர்த்தி மிக்க மூர்த்தி நாயனாருக்கும் தீங்கு பல புரிந்தான். ஆனால் இடம் கொண்ட அவர் அரசனுடைய இடரைப் பொருட்படுத்தாது தமது திருத் தொண்டினை முன்னிலும் பன்மடங்கு அன்புடன் செய்து வந்தார். அம்மன்னன், நாயனாருக்குச் சந்தனக் கட்டை கிடைக்காமல் செய்தான்.

மூர்த்தி நாயனார் முக்கட் பரம் பொருளைச் சிந்தித்து, ''புன்மைச் செயல் புரிவதில் வல்ல சமணர்களுடன் பொழுது போக்கும் வன்மைக் கொடும் பாதகம் மாளவும், வாய்மை வேத நன்மைக்குரிய சைவ நெறி நின்ற மன்னர் ஆளவும் வேண்டும்; அந்நாள் எந்நாளோ!'' என்று வருந்தினார். நாயனார் எண்ணியது சைவ நெறியின் கருணைக்கு மாறுபட்டதன்று. உடம்பில் உதிரப் பரு வந்தபோது அதை அறுத் தெறிதல் கருணைக்கு மாறுபட்ட செயலாகாது அல்லவோ?

சந்தனக் கட்டை எங்கும் கிடைக்காதவண்ணம் பாதகன் தடுத்ததில் அடியார் துன்புற்று உள்ளம் சோர்ந்தார். பகற் பொழுது கழிந்தது. மாலை சோமசுந்தரக் கடவுளுடைய திருக் கோயிலை அடைந்தார். எம் பெருமானுடைய திருமேனிக்குப் பூசும் சந்தனக் கட்டைக்குத்தான் முட்டு வந்தது. சந்தனத்தைத் தேய்க்கும் கைக்கு முட்டு வரவில்லையே என்று எண்ணி வட்டமான பாறையில் முழங் கையை வைத்துத் தேய்த்தனர். கையின்புறம் தோல் தேய்ந்து உதிரம் ஒழுகிற்று. பின் நரம்புகள் தேய்ந்தன. அதன்பின் எலும்பு கரைந்து தேய்ந்தது.

**நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச் சின்று**
**முட்டும்பரி சாயினும் தேய்க்குங்கை முட்டா தென்று**
**வட்டத்திகழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்**
**கட்டும்புறந் தோல்நரம் பென்பு கரைந்து தேய**

உதிரம் பெருக, கையெலும்புக்குள் மூளை சொரிய மூர்த்தி நாயனார் செய்யும் திருத் தொண்டினைக் கண்டால், கருணைக் கடலாகிய இறைவர் பொறுப்பாரா? உடனே அருள் திருவாக்கு ஒலித்தது. ''அன்பனே! அன்பின் மிகுதியில் இனி இச் செய்கை செய்யாதே. உன்பால் கொடுமை செய்தவன் வலிந்து கொண்ட நாடு முழுமையும் நீ கொண்டு, அநீதியை விலக்கி, நீதியை நிலைநிறுத்தி, நியதியாகத் திருப்பணி செய்து முடிவில் சிவலோகம் வரக் கடவாய்'' என்று அருளிச் செய்தது அத்திருவாக்கு.

மூர்த்தி நாயனார் கல்லில் கையைத் தேய்ப்பதை நிறுத்தினார். புண்ணாகிய அவரது கை செழுமையுற்று விளங்கியது. திருமேனி ஒளி பெற்றது. அவருக்குத் தீங்குசெய்த வடுகக் கருநாட்டு மன்னன் அந்நாள் இரவில் உயிர் துறந்தான். நல்லோர்கள் விரைந்து சிவலோகம் சேர்வதுபோல், அடியார்க்கு இடர்புரிந்த அப்பாதகன் தீவாய் இடர்புரிந்த அப் பாதகன் தீவாய் நரகில் வீழ்ந்தான்.

**அடியார் மனஞ்சலிக்க எவராயினும் பழிக்க**
**அபராதம் வந்து கெட்ட பிணிமூடி**
**அனேவோரும் வந்து சீசீ என நால் வரும் பழிக்க**
**அனலோடழன்று செத்து விடுமாசு போல்**

என்பது அருணகிரிப் பெருமானின் வாக்கு. ஆகலினால் அடியார்க்கு மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் என்றும் ஒரு சிறிதும் இடர் புரியக் கூடாது.

(தொடரும்)



விஞ்ஞான ரீதியில் தயாரிக்கப்பட்ட
22. காரட் ஹேமா கோல்டு கவரிங் நகைகள்
டுவின் பிரதர்ஸ்
கதம்ப மாளிகை




□ எலுமிச்சம் பழத்திலிருந்து சாறு பிழிந்ததும் அதைத் தூக்கி எறிந்து விடாதீர்கள். எலுமிச்சம் சக்கையைக் குளிர் பானங்களிலும், கேக்குகளிலும் கலந்தால் நறுமணம் வீசும். எலுமிச்சைத் தோலில் சிறிது உப்பைத் தூவிப் பல் தேய்த்தால் பல் பிரகாசமாகும்.

■ ஏலக்காயைச் சேதமின்றித் தூள் செய்ய அதனுடன் ஒரு சிட்டிகை அரிசியைச் சேர்த்துத் தூள் செய்யுங்கள்.

□ வடிகட்டிய தேயிலை ரோஜாச் செடிக்கு நல்ல சத்துள்ள உரமாகும்.

ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா' தகவல்: வி. சம்பத்குமார்




தற்சமயம் தார்வாரில் கர்நாடக சர்வகலா சாலையில் பௌதிகப் பேராசிரியராக இருக்கும் என். வி. வி. ஜே. சுவாமி எம். எஸ்ஸி. பி.எச்டி. அவர்கள் அமெரிக்காவில் பிளாரிடா மாகாண சர்வ கலாசாலையில் பி. எச். டி. பட்டம் பெற்றவர். அந்தப் பட்டம் வழங்கப்படும் பட்டமளிப்பு விழாவுக்கு முதல் நாள் அந்த சர்வ கலாசாலையின் அத்யட்சகரிடமிருந்து டெலிபோனில் அழைப்பு வந்ததாம். நேரில் வந்து பார்க்கும்படி. என்னமோ ஏதோ என்று பலப்பல எண்ணிக்கொண்டே பல்கலைக் கழக அத்யட்சகர் டாக்டர் டி. ஜி. காம்பெல்லின் அறைக்குள் நுழைந்தாராம்.

டாக்டர் காம்பெல், "மிஸ்டர் சுவாமி! உங்கள் பெயருக்கு முன்னால் நான்கு எழுத்துக்கள் என். வி. வி. ஜே. என்று இருக்கின்றனவே, அவற்றின் முழு உருவத்தையும் சொல்லுங்கள் என்றாராம்.

திரு சுவாமி தமது முழுப் பெயரையும் சொன்னாராம்: (என்) நியாயபதி (வி) வேங்கட (வி) வைகுண்ட (ஜே) ஜகந்நாத சுவாமி.

இந்த முழுப் பெயரையும் பலமுறை சொல்லிக் காம்பெல் உச்சரிக்கக் கற்றுக் கொண்டாராம். பிளாரிடா பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் பட்டம் பெறுபவர்களின் முழுப் பெயரையும் சொல்லிக் கூப்பிட்டுப் பட்டம் வழங்குவது சம்பிரதாயமாம்!

பட்டம் வழங்குவதில் மகிழ்ச்சியுற்றிருந்த காம்பெல் அவர்களுக்கு, திரு சுவாமியின் பெயர் மிகுந்த சிரமத்தை அளித்துத்தானிருக்கும் பாவம்!



## தீர்க்க தரிசனம்

கென்னடி கொல்லப்பட்ட தினத்தன்று டல்லாஸுக்குப் போக விமானம் ஏறுவதற்குச் சில நிமிஷங்களுக்கு முன் அவர் சொன்ன வார்த்தைகள்: "அமெரிக்க ஜனாதிபதியை யாராவது சுட்டுக் கொல்ல நினைத்தால், அது ஒரு பெரிய காரியமில்லை. அவர் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு தொலை நோக்கி பொருத்திய துப்பாக்கியை எடுத்துக் கொண்டு ஓர் உயரமான கட்டடத்தில் ஏறிக்கொள்ள வேண்டியதுதான். அந்த மாதிரி ஒரு முயற்சியைத் தடுக்க யாராலும் முடியாது!"

ஆதாரம்: "டைம்"
தகவல்: "மனிக்"

## மலர்கள்

ஜப்பானில் பரீட்சை எழுதும் கல்லூரி மாணவிகள் விரும்பினால் பரீட்சை முடிவை அவர்களுக்குத் தந்தி மூலம் பல்கலைக் கழகம் தெரிவிக்கிறது. மலரும் உள்ளங்களுக்கு ஏற்ப, முடிவைக் கழக நிர்வாகிகள் அறிவிக்கும் முறைதான் நூதனமானது. வெற்றித் தந்தியைக் கண்டதும் நங்கையின் முகம் மலரும். ஆகவே 'முல்லை மலர்ந்தது' என்று தந்தியின் வாசகம் அமைந்திருக்கும். தோல்வியில் கண்ணீர் சிந்துவாள். தந்தியின் வாசகம்: "ரோஜா மலர் உதிர்ந்து விட்டது."

— மரகதம் நாராயணன்

சால்ட் லேக் நகர போலீஸ் ஸ்டேஷனில், ஒருவர் தம் மனைவியையும் நாயையும் காணவில்லையென்று புகார் செய்தார். போலீஸ் இன்ஸ்பெக்டர் அவரிடம் ஒரு காகிதத்தை நீட்டி, "இதில் அடையாளங்களைக் குறித்துக் கொடுங்கள்... நாங்கள் இரண்டொரு நாளில் கண்டுபிடித்து விடுகிறோம்" என்றார்.

அந்த ஆள், அந்தப் படிக்கையில் அடையாளங்களைக் குறித்துக் கொடுத்து விட்டுப் போனார் — நாயின் அடையாளங்களை மட்டும்!

'மின்னேமார்ப்பானியம்'

## பதில்

"அல்லும் பகலும் உழைத்தாலும் அதற்குத் தகுந்த பலன் நீ மேற்கொண்டிருக்கும் தொழிலில் கிடைக்காது. ஆனந்தமான வாழ்க்கை வாழமுடியாது. வறுமையில் உழன்று வாடி வருந்தித் தான் சாக வேண்டும். இந்தத் தொழிலை விட்டுவிடு. உடனே பதில்."

மேற்படி கடிதம் எழுதியவர் யார் தெரியுமா? பிரபல நாவலாசிரியர் நத்தானியல் ஹாதார்னேயின் அன்னையார். அப்போது தான் நத்தானியல் எழுதத் தொடங்கிய காலம். உடனே பதில் எழுதினார் அவர்:

அன்புள்ள அம்மா! என்னை வேறு தொழில் செய்யச் சொல்கிறீர்கள். டாக்டர் தொழிலில் ஈடுபட்டு மனிதர்களின் நோய்களைக் குணப்படுத்தினால் அவர்கள் உயிருடன் உள்ள வரையில்தான் என் பெயர் நிலைத்து நிற்கும். மந்திரியாகி அரசியலில் ஈடுபட்டால் மக்களின் குறைகளைத் தீர்க்கவேண்டும். அது மிகவும் கஷ்டம். கஷ்டப்பட்டாலும் வசைமாரி தான் மிச்சம். வக்கீல் தொழிலில் நான் வெற்றி பெற்றால் தோல்வி அடைந்தவர்கள் என்னைவெறுப்பார்கள். இத்தகைய பணம் சம்பாதிக்கும் ஆசையைப் பெருக்கும் தொழில்களினால் எல்லாம்பெயரும் புகழும் என்றும் நிலைத்து நிற்கும் பாக்கியம் கிட்டாது. எழுத்து, நூல், இலக்கியம்! இவைதான் அழியாதவை. ஒவ்வொரு வீட்டு அலமாரியிலும் நான் எழுதிய புத்தகங்கள் இருந்தால் உனக்குப் பெருமையல்லவா? --தே




தானாகவே இயங்கும் நூல்நிலையம் ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறது டெல்ஃபியிலுள்ள டச்சு பல்கலைக் கழகம். புத்தகப் பட்டியலுள்ள அறையில் வைக்கப்பட்டுள்ள ஆறு தனிப்பட்ட டெலிபோன்களில் ஒன்றில் மாணவர்கள் தாம் விரும்பும் புத்தகத்தின் எண்ணைச் சுழற்ற வேண்டும். உடனே அந்தப் புத்தகம் கைக்கு வந்து சேர்ந்துவிடும்!

தேவையான புத்தகம் கிடைத்து விட்டால், அது ஓர் இயந்திரத்தின் மூலம் கீழே எடுத்துச் செல்லப்படும். புத்தகம் இல்லையெனில் உடனே பொறுப்பாளருக்கு அறிவிக்கப்படும். இந்தப் புதிய முறையினால் தடங்கல்கள் ஏதுமின்றி, சராசரி பதினாறு விநாடிகளில் ஒரு புத்தகத்தைப் பெற முடிகிறது என்று கூறப்படுகிறது.

தகவல்: கி. நாராயணன்
ஆதாரம்: 'ஹிந்து'

## எலும்பு வீடு



உக்ரேனில் உள்ள கானேவ் நகருக்கு அருகில் 7000 ஆண்டுகளுக்கு முந்திய எலும்பு வீடு ஒன்று தோண்டி எடுக்கப்பட்டுள்ளது.

இது 270 சதுர அடி உள்ள வீடு; இதில் பத்துப் பன்னிரண்டு பேர் வசித்திருக்கலாம்.

அறுபது ராட்சத யானைகளின் எலும்புகளால் அவ்வீடு கட்டப்பட்டுள்ளது.

இவ்வீட்டில் வசித்தவர்கள் அக்காலத்தில் ராட்சஸ யானைகளை வேட்டையாடி அவற்றின் எலும்பால் இவ்வீட்டைக் கட்டியிருக்க வேண்டும். —ஏ.பி.என்.




சென்ற நூற்றாண்டின் பிரபல ஓவியரான காகின் (Gaugin) தம் வாழ்க்கையின் கடைசி நாட்களில் வறுமையால் பெரிதும் அவதிப்பட்டார். "வாழ்ந்து என்ன பயன்?" என்ற விரக்தியோடு விஷத்தைக் குடித்தார். ஆனால் அந்த விஷம் சரியாக வேலை செய்யாது, கடுமையான வயிற்று வலியை உண்டாக்கிவிட்டது. 1902-ம் ஆண்டு அவர் இருதய நோயால் இறக்கு முன்னர்: "வறுமையிடம் நான் தோற்றுப் போனேன்" என்று ஒரு சிறு தாளில் எழுதி வைத்திருந்தார்.

அந்தச் சிறு காகிதம் 1957ல் பாரிஸ் மாநகரில் நடந்த அபூர்வப் பொருள் ஏலத்தில், பதினாயிரம் ரூபாய்க்கு விலை போயிற்று!

தகவல்: "மலிக்"
ஆதாரம்: 'டைம்'

## பெரியவனாக வழி!

சுவாமி ராமதீர்த்தர் கல்லூரிப் பேராசிரியராக இருந்த போது, ஒரு நாள் கரும் பலகையில் ஒரு கோடு கிழித்து மாணவர்களிடம், "இந்தக் கோட்டைச் சிறிதாக்குக?" என்றார்.

ஒரு மாணவன் எழுந்து அந்தக் கோட்டின் ஓரத்தை அழிக்கப் போனான். உடனே சுவாமி "சிறிதாக்கச் சொன்னேனே தவிர அழிக்கச் சொல்லவில்லையே!" என்றார். மாணவர்கள் யோசனையில் ஆழ்ந்தனர்.

ஒரு மாணவன் எழுந்து கரும்பலகையருகில் சென்று, அதற்குப் பக்கத்தில் அதைவிடப் பெரிய கோடு ஒன்றைப் போட்டான். சுவாமி மகிழ்ச்சியடைந்து அந்த மாணவனைப் பாராட்டி விட்டு, "இந்தக் கோடு என்ன நீதி புகட்டுகிறது? வாழ்க்கையில் தான் பெரியவனாக ஆவதற்குப் பிறரை அமுக்கவோ அழிக்கவோ வேண்டாம். பெரிய வேலையைச் செய்வதால் பெரியவனாக ஆகலாம்" என்று விளக்கினார்.

தகவல்: 'தஞ்சை விந்தன்'



# ஊர் வம்பு

- பம்பாய்த் தமிழ்ச் சங்க வெள்ளிவிழா
- கல்வெட்டுக் கருத்தரங்கு
- கவலைகளை மறக்க மருந்து
- காமதேனு

பம்பாயில் தமிழ் ஆர்வம் ஒன்றையே மூலதனமாகக் கொண்டு 1941ம் ஆண்டு தொடங்கப் பெற்றது பம்பாய்த் தமிழ்ச் சங்கம். இருபத்தைந்து ஆண்டுகளாக எத்தனையோ தமிழ்ப் பேரறிஞர்களைப் பம்பாய்க்கு வரவழைத்து அவர்களது ஆய்வுரைகளை அங்குள்ள தமிழர்கள் கேட்டு மகிழ வாய்ப்பைத் தேடித் தந்த பெருமை அச்சங்கத்தின் தனி உரிமை. தமிழ்ச் சங்கத்துக்கென்று கலை நிகழ்ச்சிகளின் வசூலைக் கொண்டே தனியானதொரு மணி மண்டபம் எழுப்பியிருப்பது பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் தனிப் பெருமை. வாரக் கூட்டங்கள், இலக்கிய விழாக்கள், சொற்பொழிவு — பாட்டு — கட்டுரைப் போட்டிகள் நடத்துதல், பல பெரிய நாடகக் குழுவினர்களை வரவழைத்து நாடகங்கள் நிகழ்த்துதல் ஆகியவை மூலம் பம்பாய் முழுதும் தமிழ் மணங் கமழச் செய்து வருகிறது பம்பாய்த் தமிழ்ச் சங்கம்.

இவ்வரிய, பெரிய தொண்டுகளைச் செய்து வரும் மேற்படி சங்கத்தின் வெள்ளிவிழா அண்மையில் நடைபெற விருக்கிறது. அதை யொட்டி, ஒரு நாடகப் போட்டி வைத்து அதில் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடகங்களுக்குப் பரிசுகள் வழங்கியிருக்கிறார்கள்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் வெள்ளி விழாவை யொட்டி 12—10—66 அன்று சென்னை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டலில் டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் தலைமையில் ஒரு விசேஷ விருந்து அளிக்கப்பட்டது. மேற்படி விருந்து வைபவத்தில் சென்னை நகரத்துப் பல பிரமுகர்களும், பல அறிஞர்களும், கலைஞர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

நாடகப் போட்டியின் முடிவு இக்கூட்டத்தில் அறிவிக்கப்பட்டது. முதற் பரிசு குமாரி ஆர். சூடாமணியின் 'அருணோதயம்' என்னும் நாடகத்துக்கும், இரண்டாம் பரிசு கொழும்பு எஸ். பரமஸ்வாமியின் ''எல்லாம் நிறைந்தவன்'' என்னும் நாடகத்துக்கும் அளிக்கப்பட்டிருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். மேலும் மூன்று நாடகங்களுக்குப் பரிவுப் பரிசுகளும் வழங்கியிருக்கின்றனர்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கம் மேலும் மேலும் தமிழுக்குத் தொண்டாற்றிப் பொன் விழா, வைர விழா ஆகிய வெற்றி விழாக்களைக் காண வேண்டும் என்று வாழ்த்துகிறோம்.

* * *

திருவல்லிக்கேணி கோயில் ஒன்றில் பக்தர்கள் கோயில் பிரசாதங்களான புளியோதரையையும், தயிர்சாதத்தையும் சாப்பிட்டு விட்டுக் கையை ஒரு ஸ்தம்பத்தில் தடவிச் சுத்தம் செய்துகொண்டு ஸ்தம்பத்தை அசுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். இதனால் ஸ்தம்பம் தேய்ந்து மழுங்கி அதிலுள்ள அற்புதமான கல்வெட்டுச் சாஸனம் மறைந்துகொண்டிருந்தது. கல்வெட்டு ஆராய்ச்சியாளர், சிபா கம்பெனியார் தயாரித்துள்ள ரசாயனப் பசையை அந்த ஸ்தம்பத்தில் தடவிப் பிரதி எடுத்துப் பார்த்தார்கள். அந்த ஸ்தம்பத்தில் 'ஸ்வஸ்திஸ்ரீ' என்ற அழகான பழம் வார்த்தை கிடைத்தது. நம் பெருமைகளை உணரத்தக்க பல கல்வெட்டுக்கள் இப்படிக் கேட்பாரற்று அநாதையாகக் கிடக்கும் அவலத்தை எடுத்துச் சொன்னார் திரு சா. கணேசன். இப்பொழுது முதன் மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலமும் தமிழ்நாட்டுத் தொல்பொருளியல் துறையினரும் கல்வெட்டுச் சாஸனங்களைப் பாதுகாக்க முன்வந்துள்ளதைப் பாராட்டினார் அவர்.

ராஜாஜி ஹாலில் அக்டோபர் 8, 9 தேதிகளில் கல்வெட்டுக் கருத்தரங்கில் பங்கு பற்றிய பல அறிஞர்களின் ஆராய்ச்சிச் சொற்பொழிவுகளும், கல்வெட்டு ஆராய்ச்சிக் கண்காட்சியும் விருந்தாக அமைந்தன. எழுத்து வளர்ந்த விதம், நம் பழம் தேர்தல் முறை, சேரர், சோழர், பாண்டியர், பல்லவர் வம்சாவளி வரலாற்றை விளக்கும் கல்வெட்டுக்களின் பிரதிகள், பல கோயில்களின் அருமையான படங்கள் ஆகியவை பிறநாட்டாரும் பார்த்து அயர்ந்து போகும்படி

பம்பாய்த் தமிழ்ச் சங்க விருந்தில் கலந்துகொண்ட பிரமுகர்கள்.



அமைந்திருந்தன கண்காட்சி யிலே. தமிழர்களின் பெருமைக்குச் சான்றாகத் திகழ்ந்த இந்தக் கல்வெட்டுக் கண்காட்சி அறிவூட்டும் சாதனமாகவும் விளங்கியது.

ஃ ஃ ஃ



செகந்திராபாத் ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கர் மந்திரைச் சேர்ந்தவர்கள் கெட்டிக்காரர்கள். அந்நகரிலுள்ளவர்கள் ரேஷன், அரிசி, கடன் தொல்லைகளை மறந்து மூன்று மணி நேரம் கவலையற்றிருக்க ஒரு மருந்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்; ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் அவர்களின் நவரஸங்களை வழங்கும் சங்கீத உபன்யாசமே அந்த மருந்தாகும். சாஸ்திரிகள் பதினெட்டு வயதிலேயே சிப்ளாக் கட்டை ஏந்திக் காலக்ஷேபக்'கலைக்குத் தனி மாண்பும் மவுசும் அளித்துவருகிறார் என்பது யாவரும் அறிந்த விஷயம். அவரது பக்திச் சுவை ததும்பும் கதைகளைக் கேட்டு மகிழ்வதோடு, சங்கர் மந்திர் கட்டட நிதிக்குப் பொருள் வழங்கும் நல்வாய்ப்பையும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

ஃ ஃ ஃ

காமதேனு வற்றாது கொடுக்கும் பொக்கிஷம் என்பார்கள். சென்னை மவுண்ட் ரோட்டில் டி. யூ. வி. எஸ். ஸ்தாபனத்தார் 17.25 லட்சம் மூலதனத்துடன் 'காமதேனு' என்ற பெயரில் சூபர் மார்க்கெட் ஒன்றைத் திறந்திருக்கிறார்கள். 13ந் தேதி மாலை ஐந்து மணிக்கு மாதிரி விற்பனை இந்தக் 'காமதேனு'வில் நிகழ்ந்தது. பத்திரிகையாளரும், சென்னை மக்களில் சிலரும் வந்திருந்தார்கள். எல்லாருடைய கண்களும் குழந்தைகள் உணவுப் பொருள்களான அமுல், ஹார்லிக்ஸ், கிளாக்ஸோ ஆகியவை பக்கமே சென்றன. அங்கு ஒரு பெரிய 'க்யூ'வே உண்டாகிவிட்டது.

'காமதேனு'வுக்குள் நுழைந்தால் பலசரக்குச் சாமான்கள், ஜவுளி, மருந்துகள், அழகு சாதனங்கள், காய்கறிகள், பழங்கள், எவர்ஸில்வர் பாத்திரங்கள் அத்தனையும் மூன்று மாடிக் கட்டடத்துக்குள் கிடைத்து விடுகின்றன. 'விலை மிகவும் குறைவாக இருக்குமா?' என்று பலர் கேள்விக் குறி எழுப்பினர். 'டி. யூ. வி. எஸ். விலை மாதிரிதான்' என்றார் அதிகாரி ஒருவர். 'ஆனால் அளவும் டி. யூ. வி. எஸ். மாதிரி இராதே' என்ற சந்தேகக் குரலை எழுப்பினார் பத்திரிகையாளர் ஒருவர். 'எல்லாவற்றையும் முன்கூட்டியே அளந்து பாலிதின் பைகளில் அடைத்து வைத்து விட்டோம். கவலை வேண்டாம்!' என்று அபய மளித்தார் அந்த அதிகாரி.

குழந்தைகள் உணவுப் பொருள்கள் பிளாக் மார்க்கெட்காரர்கள் கையில் சிக்காமலிருக்க ஓர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். குழந்தை உணவு வாங்கும் நபர்கள் ஐந்து ரூபாய்க்குக் குறையாமல் ஏதாவது பண்டம் வாங்க வேண்டும் என்ற நிபந்தனையை விதிக்கப் போவதாக அதிகாரி திரு மகாதேவன் தெரியப்படுத்தினார். ஆனால் உண்மையில் சிரமப்படும் புள்ளிகளுக்கு இதனால் உபத்திரவம் ஏற்படாம லிருக்குமா? மற்றொரு யோசனையும் அடிபடுகிறது, வாங்கும் பால் டப்பிகளின் 'ஸீலை'த் திறந்து கொடுத்து விடலாமென்று. இப்படிச் செய்தால் பண்டம் கெடும்; ஆனால் கறுப்பு மார்க்கெட் ஒழிந்துவிடுமா?

'எல்லாருக்கும் எல்லாப் பொருள்களும் தட்டுப்பாடின்றிக் கிடைத்து விட்டால் பிளாக் மார்க்கெட்டுக்கு இடம் ஏது? பற்றாக்குறை தானே இந்தக் கறுப்பு மார்க்கெட்டை உற்பத்தி செய்கிறது' என்று ஓர் அநுபவஸ்தர் சொன்னார்.

காமதேனு வற்றாக் களஞ்சியமா, இல்லை, சென்னைப் பகதாஜு என்பது போகப் போகத் தெரிந்து விடுகிறது!



# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

நாமதம் செய்யாமல் காரியாலயத்துக்கு விரைந்து சென்ற குமரன் ஜெஹூர் ஆஸ்பத்திரி டாக்டருடன் தொலைபேசியில் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அவருக்குக் காளியின் நிலைமையை விவரித்தான். காளி அன்று காலை நடந்து கொண்ட விதத்தை நினைத்து அந்த டாக்டரின் மனத்தில் கோபம் இருக்கத்தான் இருந்தது. குமரனுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு உச்சிக் கடவுக்கு வர அவர் ஒப்புக் கொண்டாலும் மறு நாள் காலையில்தான் அது சாத்தியமாகும் என்று தீர்மானமாகச் சொல்லி விட்டார். இந்தத் தகவலை வள்ளியிடமும் அஞ்சலையத்தையிடமும் தெரிவித்து அவர்களைத் தைரியமாயிருக்கும்படி சொல்லி விட்டுக் குமரன் தன் வீட்டுக்குத் திரும்பினான்.



மறு நாள் காலையில் சொன்ன நேரத்துக்கு டாக்டர் அருளானந்தம் தமது காரிலேயே புறப்பட்டு அணைக்கட்டு வீட்டுக்கு நேரே வந்து குமரனைச் சந்தித்தார். இருவருமாக அதே காரில் காளியண்ணனின் வீட்டுக்கு விரைந்தனர்.

கவலையே உருவாக அஞ்சலையத்தையும் வள்ளியும் அவர்களை வரவேற்றனர்.

"ராத்திரி பெல்லாம் ஜுர வேகம் சொல்லி முடியாது. கண்ணையே முழிக்காமே வாய்க்கு வந்தபடி பெல்லாம் அண்ணன் அனத்திகிட்டிருந்திச்சு" என்று விவரித்தாள் வள்ளி.

டாக்டர் நோயாளியைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு ஓர் இஞ்செக்ஷன் கொடுத்தார். "நோயாளி இனி மேல் இங்கே இருப்பது சரியல்ல. ஆஸ்பத்திரியிலேயே சேர்த்தால்தான் நேரடி

ாகக் கவனித்து உடம்பைக் குணப் படுத்த முடியும்'' என்றார் தீர்மானமாக.

'' டாக்டரய்யா..... அண்ணனின் நிலைமை அவ்வளவு மோசமாகவா இருக்கு ?'' என்று அலறினாள் வள்ளி.

''இன்னும் சிறிது தாமதித்தாலும் உயிருக்கே ஆபத்தாய் முடியும்'' என் றார் டாக்டர்.

ஃ ஃ ஃ

மேம்பாறைக் கசத்தில் வெள்ளி மீன்கள் துள்ளி விளையாடிக் கொண் டிருந்தன. துள்ளுவதும் பாய்வதும் ஒன்றை யொன்று துரத்துவதுமாக அவை காட்டிய விளையாட்டுக்கள்




தையாவது மங்காவின் மனம் ரசித்தால்தானே ? த்துப் பிடித்தாற் போலத் ான் அவள் கசத்தின் கரை ில் உட்கார்ந்திருந்தாள்.

மூங்கில் புதரிலிருந்து அக்காக்குருவிகள், ''அக்கா...அக்கா !'' என்று அழைக்கும் ஏக்கக் குரல் அவ்வப்போது அவள் காதில் ஒலித்துக் கொண்டிருந்தது. ''அக்கா, அக்கா!''என்று அவள் மனமும் எதிரொலி எழுப்பிக் கொண்டிருந்தது.

வள்ளியக்காவைப் பார்த்துப் பத்து நாட்களுக்கு மேல் ஆகி விட்டனவே! ''இன்றாவது வந்திருப்பாள்'', ''இன் றாவது வந்திருப்பாள்'' என்று ஒவ் வொரு நாளும் அந்த வீட்டுக்கு நடந்து நடந்து மங்காவுக்குக் கால் ஓய்ந்து போனதுதான் மிச்சம். வீடு பூட்டியே கிடந்தது. வீரன் வாய்க்கால் மட்டும் யாரைப் பற்றிய சிந்தனையும் இல்லா மல் தன் போக் கில் ஓடிக்கொண் டிருந்தது. வெள் ளாடும் குட்டி களும் வள்ளியின் கவனிப்பின்றி இஷ்டம் போல் திரிந்து கொண் டிருந்தன.

வெறிச்சோ வெறிச் சென்று இருந்தது மங்கா வின் மனம். ஆசு பத்திரிக்கு

அஞ்சலையத்தை மட்டும் போயிருந்தால் போதாதா? வள்ளியக்காவும் எதற்காக அந்தக் கிழூர் ஆசுபத்திரியிலேயே பழி கிடக்க வேண்டும்? அவன்தான் அண்ணன் உடம்பைக் குணப்படுத்திவிடப் போகிறனா? ஆசுபத்திரியிலே சேர்ந்த பிறகு டாக்டரின் பொறுப்புத்தானே? இவர்கள் இரண்டு பேர்களும் அங்கேயே தவம் கிடப்பதற்கு என்ன அவசியம் இருந்தது?

எல்லாவற்றுக்கும் மேல் காளியண்ணனை நினைத்துத்தான் மங்காவின் மனத்தில் ஆத்திரம் பொங்கியது. புலியோடு போராட அது ஏன் முன்னால் போய் நிற்க வேண்டும்? காயம் பட்டதுதான் பட்டாயிற்றே, அதற்கு மேல் வீறுப்பு என்ன வேண்டியிருந்தது? முதல் நாளே அந்த டாக்டர் வந்து பார்த்தபோது ஒத்துப் போயிருந்தால் ஒரு தொல்லையும் இருந்திருக்காது இல்லையா? அப்போது அவரை அவமரியாதையாகப் பேசி விரட்டியடிப்பானேன், இப்போது நாள் கணக்காக ஆசுபத்திரியிலேயே படுத்துக் கிடப்பானேன்?

மங்காவுக்குக் கோபம் கோபமாக வந்தது. யார் மேல் கோபித்துக் கொள்வது என்றுதான் புரியவில்லை. கசத்தில் தம்மை மீறி விளையாடிக் கொண்டிருந்த மீன்களைப் பார்த்து அவளுக்கு ஆத்திரம் வந்தது.

''என்ன விளையாட்டு வேண்டியிருக்கு? போங்க எல்லாரும்'' என்று ஒரு பெரிய கூழாங்கல்லை எடுத்துக் கசத்தில் வீசியெறிந்தாள். மீன்கள் நாலா பக்கமும் சிதறி ஓடுவதைப் பார்த்து அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''என் புத்தியே புத்தி! உங்கமேலே ஏன் கோவிச்சுக்கறேன்? நீங்களா அக்காவை ஆசுபத்திரிக்கு அனுப்பினீங்க?'' என்று சிரித்தாள்.

மூங்கில் புதரில் அக்காக் குருவி ''அக்கா'' என்று அழைக்கும் குரல் மீண்டும் கேட்டது. மங்காவின் ஆத்திரம் சட்டென்று அந்தத் திசையில் திரும்பியது.

''என்னைக் கேலி செய்யவா அப்படிக் கத்தறீங்க? தொலைச்சுப் போடுவேன் தொலைச்சு'' என்று கத்திக் கொண்டே மூங்கில் புதரை நோக்கி ஒரு கல்லை வீசினாள். அக்காக் குருவிகள் அந்தக் கணமே அங்கிருந்து பறந்து சென்றன.

'எனக்கு ஏன் இப்படிக் கோவம் வருது? வள்ளியக்கா வரும்போது வந்துக்கட்டுமே... அதுக்காக நான் ஏங்கிக் கிடக்கணுமா என்ன?' என்று தனக்குத் தானே கூறிக் கொண்ட மங்கா அங்கிருந்து எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.

அவள் கால்கள் அவளை உடும்புக் கொட்டகைப் பக்கம் இழுத்துச் சென்றன. அத்திமர மேட்டில் காளியண்ணனுக்குப் பதில் மாயாண்டி உட்கார்ந்திருந்தான். மாயாண்டி பீடி குடிப்பதில்லை. ஆனால் பீடி குடிக்கத்தான் அந்த மேட்டில் உட்காரலாம் என்று எதுவும் கிடையாதே!

மங்காவைக் கண்டால் மாயாண்டிக்கு எப்போதுமே பயம்தான். மங்காவின் துடுக்குத்தனத்தை எதிர்த்து நிற்க அவன் உடம்பில் திராணி கிடையாது. ஆனைப்பட்ட காளியண்ணனே திணறியபோது அவன் எந்த மூலை? ஆகவே மங்காவைக் கண்டுவிட்டால் அப்போதுதான் ஏதோ அவசர வேலை ஞாபகம் வந்தது போல் எழுந்து சென்று விடுவதுதான் அவன் வழக்கம்.

ஆனால் இன்று அவன் மங்கா வருவதைப் பார்த்ததும் பாராததுபோல் உட்கார்ந்திருந்தான். மங்காவுக்கே ஆச்சரியமாக இருந்தது.

''என்ன, மாயாண்டியண்ணே, ஏன் சோர்ந்தாற் போல் உட்கார்ந்திட்டே? வள்ளியக்கா இருந்தாலாவது பசி நேரத்துக்குச் சோறு கிடைக்கும் உனக்கு. இப்பத்தான் அது ஆசுபத்திரியிலே போய் உட்கார்ந்திருக்கே'' என்று கூறிச் சிரித்தாள்.

''ஏன் மங்கா, சமாசாரம் தெரியாதா உனக்கு?''

''என்ன சமாசாரம்?''

''காளியண்ணனுக்குக் கையையே எடுத்திடப் போறாங்களாம்''

''என்ன சொன்னே?''

''புலியடிச்ச காயம் ஆறுமே புரையோடிப் போச்சாம். அந்தக் கையை அறுத்து எடுக்கல்லேன்னு ஆளே பொழைக்க முடியாதுன்னு டாக்டர் சொல்லிட்டாராம்!'' என்று கூறும் போதே மாயாண்டியின் கண்களில் கண்ணீர் பொங்கி நின்றது.

''யோவ், யாருகிட்டே அளக்கறே?'' என்று கத்தினள் மங்கா.

மாயாண்டி பெருமூச்செறிந்தான். ''முனியாண்டி சொன்ன தகவல் பொய்யா யிருக்கக் கூடாதான்னுதான் மனசு கிடந்து அடிச்சுக்குது. ஆனா அது உண்மைதான் மங்கா. அந்தக் குமரய்யா கூட இன்னிக்கு லீவு போட்டுட்டு அங்கே போயிருக்காரு'' என்று விம்மும் குரலில் கூறினான்

# B·I



# S. S. ரஜூலா

**சென்னையிலிருந்து**

7-11-66ல் புறப்படுவதாக முன்பு குறிப்பிடப்பட்டிருந்த ரஜூலா கப்பல் இப்பொழுது 6-11-66ல் புறப்படும்

**1966 நவம்பர் 6** | **1966 நவம்பர் 30**

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர் : குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை-1

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1966 நவம்பர் 7** | **1966 டிசம்பர் 1**

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விபரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

மாயாண்டி. பாவம், அவனுடைய லட்சிய வீரனுக்கு இப்படி ஒரு சோதனை நேர்ந்திருப்பதை அந்த அப்பாவி எப்படித் தாங்குவான்?

மங்கா சிரித்தாள். "நீ ஏனய்யா அதை நெனைச்சுக் கண்ணீர் வடிக்கிறே? புலி வெட்டனடயா சும்மாவா? கைதானேய்யா போகப் போவுது? உயிர் போயிடல்லையே! புலியடிச்ச வீரர்ங்கற பட்டம் போயிடல்லையே?" என்றாள்.

அதற்கு மேல் அவள் அங்கே நிற்கவில்லை. விடுவிடென்று நடக்க ஆரம்பித்தாள், ஓட்டமாக ஓடி வந்து வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு தரையில் தொப்பென்று விழுந்தாள். கனமான ஏதோ ஒன்று அவள் நெஞ்சை அழுத்துவது போல் அவளுக்குத் தோன்றியது. குப்புற விழுந்த நிலையில் வெகு நேரம் அப்படியே இருந்தாள். அப்படியே தூங்கியும் விட்டாள்.

மாலையில் வெள்ளாத்தாள் வேலையிலிருந்து வீட்டுக்குத் திரும்பியபோதும் மங்கா இன்னும் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள்.

"அடியாத்தே... சாது கணக்கா தூங்கற தூக்கத்தைப் பாரு" என்று அதிசயித்த வெள்ளாத்தாள், "தா, வெளக்கு வெக்கற நேரத்திலே என்ன தூக்கம் இது? எழுந்திரு!" என்று அதட்டியவாறே அவளைக் காலால் உதைத்து எழுப்பினாள்.

எழுந்து உட்கார்ந்து கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டே மங்கா பெரிதாக ஒரு கொட்டாவி விட்டாள்.

"சீ வாயை மூடு... அச்சானியம் போலக் கொட்டாவி வேறயா?" என்று எரிந்து விழுந்தாள் வெள்ளாத்தாள். அப்போதுதான் மங்காவுக்குச் சுய உணர்வு முழுதும் திரும்பியது.

"ஆத்தா நீயா? ரொம்ப நேரம் தூங்கிட்டேனா?"

"என்னைக் கேளு... கண்ணு தெரியலே... கையெழுத்து மறையற நேரமாயிருச்சு... அப்படி என்ன தூக்கம்னு கேக்கறேன்."

"எனக்கே தெரியலே ஆத்தா. வீட்டுக்குள்ளே வந்து விழுந்ததுதான் தெரியும். அடிச்சுப் போட்டாப்பலே தூங்கிப் போயிருக்கேன்" என்றாள் மங்கா, அதிசயத்துடன் விழிகளை உருட்டியவாறு.

"அடிச்சுப் போடாத குறைதான் வேறென்ன? சரி, சரி, மலங்க மலங்க முழிச்சது போதும். காலா காலத்திலே அருவிக் கரைக்குப் போயி மொகத்தைக் கழுவிக்கிட்டு ஒரு குடம் தண்ணி எடுத்துக்கிட்டு வா. ஒரு நாளைப் போலே நான் வீட்டுக்கு வந்துதான் உலையேத்தணும். பெத்த பொண்ணு குதிர் கணக்கா வளர்ந்திருந்து என்ன பிரயோசனம்?" என்று எரிச்சலும், புகைச்சலுமாக முணுமுணுத்தாள் வெள்ளாத்தாள்.

மங்கா பதில் வார்த்தை எதுவும் பேசாமல் குடத்தைக் கையில் எடுத்துக்கொண்டு அருவிக் கரைக்குச் சென்றாள்.

வெள்ளாத்தாள் அடுப்புச் சாம்பலை அள்ளி எடுத்துப் போட்டுவிட்டு மிச்சமிருந்த சுள்ளிகளையும் சருகுகளையும் சேர்த்து அடுப்புக்குள் திணித்தாள். பின்பு அவற்றைப் பற்ற வைப்பதற்காக நெருப்புப் பெட்டியை எடுத்தாள். அவளுக்கு எரிச்சலூட்டுவதற்காகவே காத்திருந்தாற்போல் நெருப்புப் பெட்டி காலியாயிருந்தது. மருந்துக்கு ஒரு குச்சி கூட அதில் இல்லை.

"தூ!" என்று ஆங்காரத்துடன் அதை ஒரு மூலையில் வீசியெறிந்த வெள்ளாத்தாள் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கக் குடிசைக்கு வெளியே வந்தாள். அருவிக் கரையிலிருந்து மங்கா கையில் பிடித்த தண்ணீர்க் குடத்தை ஆட்டியவாறு வந்து கொண்டிருந்ததைப் பார்த்து வெள்ளாத்தாளின் எரிச்சல் மேலும் அதிகரித்தது.




"ஐந்து ரூபா கைமாத்து கேட்டாயே! எப்போ திருப்பித் தருவாய்?"
"பத்தாவது ஐந்தாண்டு திட்ட முடிவில்."

''வளர்ந்த பொண்ணு லச்சணமா கொட்டத்தை இடுப்பிலே வச்சு எடுத்து வரத் துப்பில்லே உனக்கு. கை வீச்சு என்ன வேண்டியிருக்கு கைவீச்சு?'' என்று சிடுசிடுத்துக் கொண்டே தண்ணீர்க் குடத்தை வெடுக்கென்று அவள் கையிலிருந்து பிடுங்கிக் கொண்டாள்.

''வத்திப் பெட்டியை நீதான் காலி செய்தியா?'' என்று சீறினாள்.

''வத்திப் பெட்டியிலே வெல்லமா அடைச்சு வச்சிருந்தது நான் காலி செய்ய? காலையிலே மூத்தண்ணி காய்ச்ச நீதானே கடைசிக் குச்சியைப் பத்த வச்சிட்டுக் காலிப் பெட்டியை வீசி யெறிஞ்சே?'' என்றாள் மங்கா.

''எதிர்த்து வாயாடத் தெரியுதில்லே? வேறே வத்திப் பெட்டி வாங்கி வெக்கறதுக்கு என்ன கொள்ளை?'' என்று அவள் முகத்தில் இடித்தாள் வெள்ளாத்தாள்.

எதிர்பாராத இந்தத் தாக்குதல் மங்காவைத் திகைக்கச் செய்தது. ஆத்தாளை முறைத்துப் பார்த்தாள்.

''என்ன முறைக்கறே? ஊரெல்லாம் சுத்தத் தெரியுது, இதுமட்டும் செய்யத் தெரியலியோ? ஓடிப் போய் மூலைக்கடையிலேருந்து வத்திப் பெட்டி வாங்கி வா சீக்கிரம்'' என்று அவளை விரட்டினாள்.

''ஆத்தாவாம் ஆத்தா! மூஞ்சியைப் பாரு!'' என்று அவளுக்கு அழகு காட்டிவிட்டு, மங்கா மூலைக் கடையை நோக்கி விரைந்தாள்.

மூலைக் கடையில் மங்கா தான் வந்த காரியத்தையே மறந்து நிற்கும் படியான பேச்சு நடந்தது. அப்போது தான் ,, கீழூரிலிருந்து திரும்பி வந்திருந்த முனியாண்டியுடன் பேசிக் கொண்டிருந்தான் மாயாண்டி.

''தோள் பட்டையோட கையை வெட்டி எடுத்திட்டாங்கன்னு சொல்லறே...?''

''ஆமாம் மாயாண்டி. மூணு மணி நேரம் நடந்திருக்கு இந்த ஆபரேசன். இன்னிக்கு அதைச் செய்திருக்காட்டி, காளியண்ணன் கதை காலைக்குள்ளேயே முடிஞ்சு போயிருக்குமாம்!''

''இனிமே ஆபத்து இருக்காதில்லே?

''உயிருக்கு இனிமேல் ஆபத்து இல்லே. ஒரு வாரத்துக்குள்ளே எழுந்து நடமாட முடியும்னு டாக்டர் உறுதியாச் சொல்லிட்டாரு. ஆனா பாவம், கையில்லாத காளியண்ணனை நினைச்சுப் பார்க்கவே கஷ்டமாயிருக்கு'' என்று பெருமூச் செறிந்தான் முனியாண்டி.

'' அதைச் சொல்லாதேண்ணே...: எனக்கு அழுகையே வந்திடும்'' என்று கண்களைத் துடைத்து விட்டுக்கொண்டான் மாயாண்டி.

''அந்த வள்ளிப் பொண்ணும் அவுங்கத்தையும் துடிச்சுத் துடிச்சு அழுதுக்கிட்டிருக்காங்க. பார்க்கவே கண்ராவியாயிருந்திச்சு'' என்றான் முனியாண்டி.

ஓர் ஓரமாக நின்று அவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த மங்கா, சட்டென்று முன்வந்தாள். ''ஏனய்யா! நீ கடை வச்சிருக்கிறது வியாபாரம் செய்யறதுக்கா, இல்லே வம்பு பேசறதுக்கா?'' என்று கேட்டாள் வெடுக்கென்று.

''உனக்கு என்ன வேணும்?'' என்று கேட்டான் முனியாண்டி.

''வத்திப் பெட்டி.''

''இந்தா, ஓடு.''

''நான் ஏன்ய்யா ஓடணும்? உங்க பேச்சு என்னைக் கடிச்சா முழுங்கிப் போடும்?''

மாயாண்டி அவளை வியப்புடன் பார்த்தான்.

''எங்க பேச்சை யெல்லாம் கேட்டுக்கிட்டிருந்தாயா மங்கா?''

''கேட்டேன், கேட்டேன். அதுக்கு என்ன செய்யணும்? ஒப்பாரி வெச்சு அழச் சொல்லறியா? கண்ணிலே தண்ணியே வராது எனக்கு!'' என்று கூறிவிட்டு விருட்டென்று அங்கிருந்து வீட்டை நோக்கி நடந்தாள் மங்கா.

அவள் வரத் தாமதமான ஒவ்வொரு நிமிஷமும் வெள்ளாத்தாளின் ஆத்திரம் விஷம் போல் ஏறிக் கொண்டிருந்தது. மங்காவின் தலையைக் கண்டதுமே அவ்வளவு ஆத்திரத்தையும் அவள் மேல் கொட்டினாள்.

''ஏண்டி துப்புக் கெட்டவளே...ஒரு வத்திப் பெட்டி வாங்கி வரத்துக்கா உனக்கு இவ்வளவு நேரம்?'' என்று சீறினாள்.

''என்ன முழுகிப் போச்சு? கொட்டிக்கிற சோத்தைக் கொஞ்சம் பொறுத்துக் கொட்டிக்கிட்டா என்ன கொறைஞ்சா போயிடும்?'' என்றாள் மங்கா அலட்சியமாக.

வெள்ளாத்தாளின் கோபம் எல்லை மீறியது. ''எதுத்தா பேசறே? உன்னை என்ன செய்யறேன் பாரு'' என்று பல்லைக் கடித்தவாறு பாய்ந்து சென்று ஒரு மூலையிலிருந்த விறகுக் கட்டையைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

''ஆத்தா, அதைக் கீழே போட்டு விடு'' என்று கத்தினாள் மங்கா.

''என்னடி பயங் காட்டறே?'' என்று கேட்டுக் கொண்டே கையில் விறகுக் கட்டையுடன் ஓரடி முன்னால் வந்தாள் வெள்ளாத்தாள்.

''ஆத்தா, இன்னிக்கு மட்டும் என் மேலே கையை ஓங்கினே, என் கை சும்மா இருக்காது!''

''அட, என்னையே மெறட்டறியா?''

''ஆமாம் ஆத்தா. உன்கிட்டே நான் எவ்வளவோ அடி பட்டிருக்கேன். உன்னை எதிர்த்துக் கையை ஓங்கினது கிடையாது. ஆனால் இன்னிக் கதை வேறே. மனசிலே இருக்கிற கோபத்தை யார் மேலே காட்டறதுன்னு துடிச்சுக்கிட்டிருக்கேன் நான்'' என்றாள், மங்கா நிதானம் இழக்காமல்.

''அப்படியா? உன் மூஞ்சிக்குக் கோபம் வேறு கேடா?'' என்று கோபமும் கிண்டலுமாகக் கூறிக் கொண்டே வெள்ளாத்தாள் விறகுக் கட்டையை ஓங்கிக் கொண்டு மங்காவின் மேல் பாய்ந்தாள், மங்கா இரண்டு அடிகூடத் தன்மேல் தாங்கிக் கொள்ளவில்லை. தாயாரின் கையிலிருந்து விறகுக் கட்டையை வெடுக்கென்று பிடுங்கி எறிந்துவிட்டு அவள் தலை முடியைப் பிடித்துக் கொண்டாள்.

''ஏ மங்கா, விடுறியா இல்லையா?'' என்று வெள்ளாத்தாள் குரலெழுப்பிக் கத்துவதற்குள்ளேயே மங்கா அவள் முகத்திலும் முதுகிலும் தோளிலும் விலாவிலும் மனம் போனபடி புடைத்துத் தீர்த்தாள். வெள்ளாத்தாள் பதிலுக்கு அவளைக் குத்திப் பிறாண்டிக் கீறி அடித்தது எதையும் அவள் லட்சியம் செய்யவில்லை. தாயும் மகளும் அந்த இருண்ட குடிசைக்குள் ஒருவரையொருவர் ஆத்திரம் தீர அடித்துக் கொண்டனர். கட்டிப் புரண்டு மோதிக் கொண்டனர். இருவர் கைகளும் ஓய்ந்து போதும் போதுமென்று ஆன பிறகுதான் இருவரும் பிரிந்து தனித் தனியே நின்றனர்.

எதிர் மூச்சு சற்று அடங்கியதும், ''எங்கே வத்திப் பெட்டி?'' என்றாள் வெள்ளாத்தாள், உதட்டில் பல்பட்ட காயத்திலிருந்து பெருகிய ரத்தத்தைத் துடைத்து விட்டுக் கொண்டு.

''இந்தா பிடி'' என்றாள் மங்கா, முகத்தில் படிந்த புழுதியைத் தட்டி விட்டவாறு.

வெள்ளாத்தாள் வாய் திறவாமல் சிம்னி விளக்கை ஏற்றி அடுப்படியை அடுத்த மூலைப் புரையில் வைத்துவிட்டு, அடுப்பைப் பற்ற வைத்தாள்.



''என் கணவருக்கு ஸ்ட்ராங் காப்பி. எனக்கு லைட் காப்பி தான் பிடிக்கும்.''

''எங்க வீட்டிலே கூட காப்பிப் பொடி வாங்கின முதல் ரெண்டு நாட்களுக்கு மட்டும் எல்லாருக்குமே ஸ்ட்ராங் காப்பி. அப்புறம், பொடி தீருகிறவரையிலும் ஒரேடியா லைட் காப்பி தான்.''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மங்கா ஒருமூலையில் தன் முழங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து கொண்டாள்.

வெள்ளாத்தாள் உலையேற்றி வைத்து விட்டு முறத்தில் அரிசியைப் போட்டுத் தவிடு, உமி போகப் புடைத்த பிறகு அரிசியிலிருந்த கல்லையும், நெல்லையும் பார்த்துப் பொறுக்க ஆரம்பித்தாள். மங்கா எழுந்து சென்று அவளருகே உட்கார்ந்து, தானும் ஓரிரண்டு நெல்லையும் கல்லையும் அரிசியிலிருந்து பொறுக்கிப் போட்டாள்.

உலைநீரில் ஓசை ஆரம்பித்தவுடன் வெள்ளாத்தாள் முறத்திலிருந்த அரிசியை அள்ளி ஒரு மண் வட்டிலில் போட்டாள்.

''நான் கழுவி எடுத்து வாரேன்'' என்று கூறிய மங்கா, குடத்துத் தண்ணீரை வட்டிலில் சரித்துக் கையால் நன்றாகக் கிளறித் தேய்த்த பிறகு, கழுநீரை வடித்து எடுத்து வந்தாள். மௌனமாக அதைக் கையில் வாங்கி உலைப் பானையில் போட்டாள் வெள்ளாத்தாள். சில நிமிஷங்களுக்குள்ளேயே உலைநீரும் அரிசியும் சேர்ந்து கொண்டு தள தளவென்று கொதிக்க ஆரம்பித்தன. தாயும் மகளும் அடுப்படியில் எதிரெதிரே உட்கார்ந்து கொண்டு சோறு கொதிப்பதை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். (தொடரும்)





# அஞ்சாமல் ரயில் வழியே போக வேண்டாம்

சுபஸ்ரீ

சாமியார்கள் சமாஜத்து மகாநாட்டுக்குப் புறப்பட்ட சந்நியாசித் தலைவர் ஒருவரை ஏற்றிச் சென்ற எக்ஸ்பிரஸ் வண்டி இருபது மணி நேரம் தாமதமாக அடைந்ததால், கோபமடைந்த காவியுடைக்காரர் ரயில் இலாகாவைச் சபித்து விட்டாராம்! அதன் காரணமாகத்தான் ரயில் வண்டிகள் பல விபத்துக்களுக்கு ஆளாகி வருகின்றன என்ற வதந்தியை ரயில்வே மேலிடம் நம்பவில்லை. ஆயினும், 'ஊருக்கு இளைத்தது இருப்புப் பாதையும் ரயில் வண்டிகளும்' என்று சொல்லும்படி சத்தியாக்கிரகங்களுக்கும் ஆர்ப்பாட்டங்களுக்கும் ரயில்வே மூலதனங்கள் இலக்காவதைக் கண்டு அந்த இலாகா ரயில் இன்ஜின் போலப் பெருமூச்சு விடுகிறது. இதனை மாற்ற, தலைநகரில் நடைபெற்ற உயர்தர அதிகாரிகள் மகாநாட்டில் கீழ்க்காணும் தீர்மானங்களுக்குப் பச்சை விளக்கு காண்பிக்கப்பட்டது.

இயற்கை தரும் மழை, வெள்ளம் போன்ற தொல்லைகள் போதா என்று, இனம் தெரியாத சூழ்ச்சிக்காரர்களும் ரயில்களைக் கவிழ்க்க முயன்று வருவது வேதனைக்குரிய விஷயம். எல்லா விபத்துக்களையும் உடன் விசாரணை செய்து, விபத்தின் மூலம் மெக்கானிகல் குறை என்றோ, மனித அஜாக்கிரதை என்றோ இம்மி பிசகாமல் கண்டுபிடித்து, குற்றமிழைத்த ஊழியர்களைத் (பெரும்பாலும் பாயிண்ட்ஸ்மென்) தண்டித்தாலும் பொது ஜனங்கள் மனமும் பீதியும் இரு தண்டவாளங்கள் போல் இணைந்துள்ளன. விபத்தில் உயிர் இழப்பவர்களது சுற்றத்தாருக்கு வழங்கப்படும் நஷ்டஈட்டுத் தொகையை விபத்துக்கு விபத்து வளரும் பஞ்சப்படி போல் உயர்த்திக் கொண்டே வந்தும் பயனில்லை. கண்ணில் விழுந்த கரித் துண்டு போல, அச்சம் பிரயாணிகள் மனத்தை நெருடிக் கொண்டேயிருக்கிறது. ஆகவே, சீதனப் பெட்டியின் தன்மையைப் போல் மனத்தில் நம்பிக்கை உணர்ச்சி ஊட்டக் கூடிய புதிய முறைகளை அமலுக்குக் கொண்டுவர நிர்வாகம் நினைத்துள்ளது.



## பிரயாணக் கவசங்கள்

ஒவ்வொரு பிரயாணியையும் எத்தகைய ஆபத்தினின்றும் காப்பாற்றக் கூடிய உறுதியான கவசங்களை ஒவ்வொரு டிக்கட்தாரருக்கும் வழங்குவது என முடிவாகியுள்ளது. இவை வெவ்வேறு வகுப்புகளை உத்தேசித்துக் கண்ணைக் கவரும் மூன்று அழகிய வர்ணங்களில் தயாரிக்கப்படும். கவசத்தை மாட்டுவதோ கழற்றுவதோ மிக எளிதான முறையில் அமைக்கப்படும் என்று டிசைன் பிரதிநிதி உத்தரவாதம் அளிக்கிறார். இதன் மூலம் இரட்டை நன்மைகள். டிக்கட் இல்லாத நபர்களை இது காண்பித்துக் கொடுக்கும். தவிர பிரயாணிகள் சட்டைப் பைகளிலுள்ள பணத்தை ஜேப்படித் திருடனிடமிருந்து காப்பாற்றிப் பாதுகாப்பும் வழங்கும். டிக்கட்டுடன், கவசத்துக்குரிய விலை டெபா



சிட்டாகப் பெறப்படும். இறங்கும் ஸ்டேஷனில் இந்தப் பணம் திருப்பி வழங்கப்படும். இந்தக் கவச டிசைன் ஆராய்ச்சிக்காக ஒரு டெக்னிகல் குழு வெளி நாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொள்ளும் என்பது இன்றின் கரிய நிறம் போல், வெளிப்படை. அந்தக் கவசத் தயாரிப்புத் தொழிற்சாலையை எந்தப் பிராந்தியத்தில் அமைப்பது என்பது மூலப் பொருள்கள் மலிவாகக் கிடைக்கும் இடத்தைப் பொறுத்ததுதான் என்றாலும், ராஜ்ய முதன் மந்திரிகளின் போரிக் கோரப்பட இருக்கிறது. கவசங்களை ஸ்டேஷன்களுக்கு விநியோகிக்க, பிரயாணிகளுக்கு வழங்க, பணம் திருப்ப — ஆகிய அதிகப்படி வேலைச் சுமையைச் சமாளிக்கப் புதிய இலாகா ஒன்று கவச டைரக்டரின் கீழ் இயங்கும். இது வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒருவாறு குறைக்க உதவும் அல்லவா?

## வாழ்க பல்லாண்டு

ஓடும் வண்டியில் நடமாடும் (அல்லது நொண்டும்) பிச்சைக்காரர்கள் 'காயமே இது பொய்யடா', 'வாழ்வாவது மாயம்', 'நாம் சாகாமலிருப்பது என்ன நியாயம்?' போன்ற பாடல்களைப் பாடிக்கொண்டு வருவதால் ஏறுவதற்கு முன்பே அச்சமடைந்த பிரயாணிகளுக்கு இது அபசகுனம் போல் அமைகிறது என்று பலர் ஒப்பாரி வைத்திருக்கின்றனர். ரயில் பிரயாணங்களில் மூட்டைப் பூச்சியை நீக்க வேண்டும் என்பது மட்டுமல்ல; குறைகளையும் அகற்ற வேண்டும் என்பது நிர்வாகத்தின் நீங்காத ஆவல். 'ரயில் பெட்டிகளில் நல்ல மங்களகரமான பாடல்களையே பாடவேண்டும்' என்று அகில இந்திய ரயில் பிச்சைக்காரர்கள் சங்கத்துக்கு வேண்டுகோள் விட்டிருக்கிறது. அந்த ஸ்தாபனமும் பிரபல சினிமாக் கவி ஞாளர்களுக்குச் சுபத்த சாகித்தியங்களை வழங்க இரந்துள்ளது.

மற்றும், டிக்கட்டுகளில் 'வாழ்க நீடூழி' என்ற சொற்றொடரைப் பிராந்தியப் பாஷைகளில் அச்சடிப்பதன் மூலமும், பச்சைக் கொடிகளில் 'பல்லாண்டு' எனப் பதிவு செய்வதன் வாயிலாகவும், பிரயாணிகளை ஊக்குவிக்கத் தீர்மானித்துள்ளது. இதற்காக எவ்வளவு நிதி தேவை என்ற எஸ்டிமேட் அக்கௌண்ட்ஸ் இலாகாவில் நிரந்தரப் பரிசீலனையில் இருந்து வருகிறது. இடைக்காலத்தில் வண்டிகள் வருகை — புறப்பாடு இவற்றைப் பின்—அறிவிக்கும் ஊழியர் மூலம் 'வாழ்க பிரயாணிகள் நெடுங்காலம்!' 'ஆபத்தற்ற பிரயாணத்தை ஆண்டவன்(!) அருளுக' என்ற மங்கள சுலோகங்களை மைக்கில் வசனமாகவோ இசை வடிவிலோ (முகாரி ராகம் மட்டும் அனுமதிக்கப்படவில்லை!) தெரிவிக்க உத்தரவு பிறப்பித்துள்ளது.

## சத்தியாக்கிரக ஸ்பெஷல்!

எல்லைப் போராட்டங்களும் மொழிக் கிளர்ச்சிகளும் நடைபெறும்போது 'தெய்வமே' என்று போகும் ரயில் வண்டிகளைத் தாக்குவதும், நிறுத்துவதும், உடைப்பதும், அரசியல் தர்மமாகத் திகழ்ந்து வருவதை நிர்வாகம் வியாகூலத்துடன் நோக்குகிறது. இதனால் பிரயாணிகளுக்கு ஏற்படும் ஆபத்தும் சிரமமும் இவ்வளவு அவ்வளவு அல்ல. இதுவரை ரயில்வே, போக்குவரத்தின் முதுகெலும்பாகத்தான் பணி புரிந்து வந்திருக்கிறது. ஆனால் அது அரசியல் உணர்ச்சிகளின் மொழியாகவும் இயங்க வேண்டும் என்று மக்கள் விரும்பினால் இந்த ஜனநாயக உலகில் மறுப்பதற்கில்லை. இதனை உத்தேசித்து 'சத்யாக்கிரக ஸ்பெஷல்' என்ற ரயில் தொடர் நடைமுறைக்கு வரவிருக்கிறது. சம்பந்தப்பட்ட கட்சிகள் முன்னமேயே ரயில் நிர்வாகிகளுக்கு எழுதி டெபாஸிட்டும் கட்டிவிட்டால், குறிப்பிட்ட லைனில் பிரயாணிகள் இல்லாத இந்த ஸ்பெஷல் விடப்படும். அப்புறம் அதனை உடைப்பதோ, எரிப்பதோ அவர்கள் பாடு. எல்லாம் முடிந்த பிறகு, நஷ்டமடைந்த மூலதனத்தைக் கணக்கிட்டுக் கட்சிக்காரர்களுக்குப் பில் வழங்கப்படும். ஒரு மாதத் தவணைக்குள் செலுத்தத் தவறினால் டெபாஸிட் பறிமுதல் செய்யப்படும். ரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில் தார் பூசுவது போன்ற திருப்பணிகளில் நிபுணத்வம் வாய்ந்தவர்களுக்காகச் சம்பந்தப்பட்ட ஸ்டேஷன் மாதிரி போர்டு சிலவற்றையும் இந்த ஸ்பெஷல் தாங்கிச் செல்லும். இத்தகைய சத்யாக்கிரக ஸ்பெஷல் எரிப்பு சம்பந்தமான அரசியல் நிகழ்ச்சி உற்சவங்களைக் கொண்டாடுவதைச் சட்ட பூர்வமாக்கப் புதிய மசோதா ஒன்று பார்லிமெண்டில் கொண்டுவரப்படும்.

## பொறுப்புணர்ச்சிப் பிரசாரம்

இடையே, ரயில்களைத் தகர்க்கும் 'மேனியா' எந்த உணர்ச்சி உந்துதலால் ஏற்படுகிறது என்பதை ஆராய சைகாலஜி நிபுணர்கள் குழு ஒன்று அமைக்கப்பட விருக்கிறது. நடுவில், 'ரயில்வே மக்களின் ஆஸ்தி; அதனை அழிப்பது முறையல்ல' என்ற பொறுப்புணர்ச்சியை ஜனங்களிடையே நிலவச் செய்வது அவசியமாகிறது. இது சம்பந்தமான பிரசாரப் பணியை மேற்கொள்ளும்படி சந்நியாசிகள் சேவக் சமாஜத்திற்கு எழுதப்பட்டுள்ளது. இதுநாள் வரை ரயில் சொந்த ஆஸ்தி போல் டிக்கட் இன்றிப் பயணம் செய்து வந்த காவிப் பரம்பரையினர் இனி ரயில்வே பாஸில் ஊர் ஊராகச் சென்று பஜனை, உபன்யாசம் மூலம் மக்களிடையே பொறுப்புணர்ச்சியை ஊட்டுவார்கள்.

ரயில் பிரயாணத்தை, ரிஸர்வேஷன் செய்யப்பட்ட பிரயாணியின் நிறை மனத்துடன் மக்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே நிர்வாகத்தின் நோக்கம். அதனை நிறைவேற்ற எத்தகைய தடங்கல்களையும் ஆபத்தையும்....

(இதற்குள் 'எங்கோ ரயில் விபத்து' என்ற அதிகாரபூர்வமான செய்தி வர, மகாநாடு கலைந்தது)

# தாதுகோபுரம்

கோவி. மணிசேகரன்

அரண்மனை அல்லோல கல்லோலப்பட்டது. எங்கும் சோகக் குழப்பம்! எவர் முகத்திலும் சோங்கிய குமுறல்! திசைக்குத் திசை வீரர்கள் பறந்த வண்ணம் இருந்தனர். 'என்ன நடந்ததோ? ஏது நிகழ்ந்ததோ?' — எவர் நாவிலும் இதே சொற்கள்!

ஏற்கனவே உடல் நலிவால் படுக்கையில் கிடந்த ரோகணத்து மாமன்னர் கமுனு எதைப் பற்றியும் அதிகமாகக் கவலை கொண்டு மேலும் உடலைச் சவலையாக்கிக் கொள்ளாதவராய், அடிக்கடி சாளரத்தை நோக்கிய வண்ணமாக இருந்தார். ருவான் வெளிசயா எனப்படும் தாது கோபுரத்தின் நிர்மாணத் தொடக்கத்திலேயே அவருடையகவனம் இருந்தது. அரண்மனை



யிலோ, வேட்டைக்குச் சென்ற இளவரசன் சாலியைக் காணோம் என்ற குழப்பம்! குமுறல்!

மிருகம்தான் அடித்துப் போட்டுவிட்டதோ அல்லது திசை தெரியாத இடத்தில் திணறிக் கொண்டிருக்கிறானோ? ஒரு தினமா, இரு தினங்களா? விளையாட்டுப் போலப் பத்துத் தினங்களுக்கு மேலாகி விட்டன. இனியும் தாமதித்தால் பயனில்லை என்று கருதிய தீசன், நூறு வீரர்களை அழைத்துக் கொண்டு தாமே புறப்பட ஆயத்தமானார்.

''அண்ணா!''

மன்னர் கமுனு மெல்லத் திரும்பிப் பார்த்தார். அவருடைய அழகிய வதனம் வறண்டிருந்தது. துன்பத்தின் ரேகைகள் பூரண முற்றுகையுடன் காணப்பட்டன. கண்களில் மாவலி கங்கை பிரவாகம் எடுத்தது. இலேசான பெருமூச்சு!

''கவலைப்படாதீர்கள் அண்ணா! எப்படியும் சாலியைக் கண்டுபிடித்து அழைத்து வருகிறேன்!'' — தம்பி தீசன் தேற்ற வேண்டுமே என்று வலுவான சொற்களை அழுத்தமாகச் சொன்னார். ஆனால் மன்னர் கமுனு?

புன்னகையில் சூன்யம் தவழ அவலமாக நோக்கினார், ''எனக்குச் சிறிதும் நம்பிக்கையில்லை, தம்பி!''

''எனக்கு நிறைய இருக்கிறது, அண்ணா! ஏதோ திசை தெரியாத இடத்தில் திண்டாடிக் கொண்டு இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். எப்படியும் கண்டுபிடித்து அழைத்து வருவேன்!''

அருமைத் தம்பி தேற்ற வேண்டுமே என்று தேற்றுகிறான். ஆனாலும் அவனைத் தடுப்பானேன்? சென்று பார்த்து விட்டுத்தான் திரும்பட்டுமே! ''தம்பி! ருவான் வெளிசயா எப்படி இருக்கிறது? என் மூச்சிருப்பதற்குள் அந்தத் தாது கோபுரத்தைக் கட்டிக் காண்பித்து விடுவாயா?''

தீசனுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. இளவரசனைக் காணாமல் அவலப்பட்டுக் கொண்டிருக்கும் இந்நேரத்தில் அண்ணன் ருவான் வெளிசயாவெனும் தாது கோபுரத்தின் மீது அக்கறை காட்டுகிறாரே!

தம்பியின் இந்தச் சிந்தனையைப் புரிந்து கொண்ட ரோகண மன்னர் கமுனு, மெல்லச் சிரித்த வண்ணம், ''தம்பி! இந்தப் பிறவியில் எனக்குள்ள கடைசி ஆசை நீ நினைப்பது போல் சாலியல்ல! அவனில்லாவிட்டால் இந்தப் பரந்த ரோகணத்தை ஆள நீ இருக்கிறாய்! அவனிருந்தாலும் கூட உனக்குப் பின்தான் இந்த நாட்டை ஆள வேண்டும் என்பது என் விருப்பம். இதனைப் பிரகடனப்படுத்தவும் இருந்தேன். தீசா! உன் அண்ணன் வீரத்தால் சாதித்துப் பெறவேண்டிய புகழனைத்தையும் பெற்றாகி விட்டது. ஆனால் என் இதயம் குளிரப் பௌத்தத்துக்கு நான் செய்ய வேண்டிய ஓரே தொண்டு இந்தத் தாது கோபுரம் — ருவான் வெளிசயா! அதனை விரைவில் முடித்து எனக்குக் காட்டு! அப்போதுதான் என்னுடைய ஆத்மா சாந்தி அடையும்!''

என்ன மறுமொழி கூறுவதென்றே புரியாமல் திணறினார் தீசன். ருவான் வெளிசயாவின் வேலையே இப்போதுதான் தொடக்கம் பெற்றிருக்கிறது. முடிவு பெற ஆண்டுகள் பலவானாலும் ஆச்சரியப்படுவதற்கில்லையே!

''விரைவில் கட்டி முடிப்பேன், அண்ணா! எனக்கு விடை கொடுங்கள்!'' என்றார் தீசன். மன்னர் கமுனுவும் தலையசைவின்மூலம் விடை கொடுத்து அனுப்பி வைத்தார்.

இலங்கை வரலாற்றில் தனிப் பெரும் புகழாசனத்தில் வீற்றுச் செங்கோலோச்சியவர் மன்னர் கமுனு. இவரைத் துஷ்ட கமுனு வென்றும் வரலாறு கூறுகிறது. முழுக்க முழுக்க முந்திய பகுதியில் தமிழர்களை இலங்கையை விட்டு விரட்டியடிக்க முனைந்ததால் 'துஷ்டகமுனு' வென்று தமிழர்களாலும் பிந்திய பகுதிகளில் தாம் ஒரு தீவிர பௌத்தன் என்பதையும் மறந்து, கண்டி கதிர்காமக் கடவுளுக்குத் திருப்பணிகள் பல செய்ததால் 'துஷ்ட கமுனு' என்று சிங்களவர்களாலும் தூற்றுதலுக்கு ஆளான 'துஷ்டப் பட்டம்' அது!

ரோகணத்தின் தலைநகரான மகாகமை ஒரு நிலையான அமைதி பெற்றதென்றால், அது மன்னனின் — கமுனுவின் — வீரச் சாதனைதான். அத்தகைய வீரம்தான் இப்போது படுக்கையில்

சாய்ந்து கிடந்தது. வயதான கோளாறு என்று சொல்வதற்கில்லை. வயதில் சாதித்த வீர சாகசச் செயல்களின் தளர்ச்சிக் கோளாறு என்று வேண்டுமானால் சொல்லலாம்! காலம் சென்ற அவருடைய வீரத்தாய்விகாரமா தேவிதான் பௌத்த மதப் பற்றுக் கொண்டு மகன் கமுனுவை எப்படியெல்லாம் ஆட்டி வைத்தாள்! சங்க காலத்திலேயே தமிழர், சிங்களவர் என்ற இன வெறி தலைதூக்கியாடியதை 'மகாவம்ச'த்தைக் கேட்க வேண்டுமே!

கணத்துக்குக் கணம் புன்னகையும், தலையசைவுமாகக் காணப்பட்ட மன்னர் கமுனு இளமை வாழ்க்கையை ஒரு கணம் எண்ணிப் பார்த்து நெடிதான ஒரு பெருமூச்சை வெளிப்படுத்தினார். அவருடைய பகை நிறைந்த கண்களைத் திறந்து பண்பான படிப்பினையைப் போதித்தவாறே அவரிடம் தோல்வி கண்ட தமிழ் மன்னர் ஏராளச் சோழரெனும் மனுநீதி கண்ட சோழர் தானே! அவரை நினைக்க நினைக்கத் தமிழ்க் குடிக்கு ஏதேனும் செய்ய வேண்டும் போலத் தோன்றியது. கண்டி முருகனுக்குக் கடமை யாற்றினார். ஆனால் மக்களுக்கு?

திடுமென்று அரண்மனையில் மகிழ்ச்சி நிரம்பிய எழுச்சிக் குரல் கேட்டது. மன்னர் கமுனு மெல்லச் சாளரத்தில் எட்டிப் பார்த்தார். தொலைவில் அரசத் தேர் வந்து கொண்டிருந்தது. மக்களின் குதூகல ஆரவாரத்தை நோக்குகையில் சாலி கிடைத்து விட்டான் என்று ஊகிக்க நேர்ந்தது. மெல்லப் படுக்கையில் சென்று படுத்துக் கொண்டார்.

சற்றைக்கெல்லாம் இளவரசன் சாலியை அழைத்துக் கொண்டு அறையினுள் நுழைந்தார் தீசன். அவருடன் ரோகணத்தின் மதிமந்திரியாகிய மகா தேரரும் நுழைந்தார்... அவர் பௌத்த மதத் தலைமைப் பிட்சுவானாலும் மன்னர் கமுனுவுக்காக எந்தவிதத் தியாகத்தையும் செய்ய வல்லவர். மன்னர் கமுனுவால் பௌத்தம்தான் எவ்வளவுக்குச் சிறந்து விட்டது: உயர்ந்து விட்டது!

மகன் சாலியைக் கண்ட மன்னர் கமுனு பொருள் நிறைந்த நோக்குடன் கவனித்தார். பிறகு தம்பியை நோக்கி, "எங்கு அகப்பட்டான்?" என்று விசாரணை செய்யலானார்.

தீசனும் பணிவுடனும், அதே நேரத்தில் ஆத்திரம் கலந்த ஆவேசத்துடனும் சொன்னார்: "அண்ணா! சாலியின் புத்தி சகதியில் உழலத் தொடங்கி விட்டது!"

கண்களைச் சற்றே அகல விரித்த கமுனு மன்னர், "என்ன நடந்தது தம்பி?" என்றார் வியந்த குரலுடன்.

"அண்ணா! 'காட்டில் வேட்டையாடப் போகிறேன்' என்று கூறி, ஒரு வேட்டுவப் பெண்ணைக் காதலிக்கத் தொடங்கி விட்டான் சாலி! அவள் குலமென்ன? நம் மரபென்ன? மதமென்ன?"

"அப்படியா? ஏன் சாலி! உன் சிற்றப்பன் சாட்டும் குற்றம் உண்மைதானா??"

"முழுக்கவும் உண்மை தந்தையே!"

"சாலி! மிகவும் துணிச்சல்காரன் நீ!"

"இல்லையென்றால் வேட்டுவப் பெண்ணை நான் காதலிக்க மாட்டேனே!"

"காதல் துணிச்சலைப் பெற்றவனிடமே காட்டுகிறாயா?"

"ஏன்? வள்ளி என்ற வேட்டுவப் பெண்ணைக் காதலித்த முருகனுக்குப் பணிகள் செய்ய, சிங்களவர் முன்பே துணிச்சலைக் காட்டிய உங்கள் மகன்தானே அப்பா நானும்?"

"அண்ணா! இருந்தாலும் இவனுக்கு இத்தனை நாவழுத்தம் கூடாது!" என்று குறுக்கிட்டார் தீசன். அவரைக் கையமர்த்திய மன்னர் கமுனு, "சாலி! காதலிக்கு முன் சிந்தித்துத்தான் காதலித்தாயா?" என்றார் வினயமாக.

"காதல் என்பதே சிந்திப்பதுதான் தந்தையே! சிந்தியாதது காதலாகாது; காமம்!"

"உன் முடிவு?"

"அந்த வேட்டுவ மகளையே மணப்பேன்!"

"நீ அரியணைக்குரியவன்!"

"நான் அவளுக்குரியவனாகி விட்டேன்; அரியணையைப் பற்றிக் கவலையில்லை. அதைத் துறக்கவும் சித்தமாயிருக்கிறேன்!"



''நல்லது!'' என்று கூறிய மன்னர் கமுனு, தம்பி தீசனை நோக்கி, ''தம்பி! அந்த வேட்டுவப் பெண் எங்கே இருக்கிறாள்?'' என்றார் கடுமையாக!

''சிறைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறேன், அண்ணா!''

''அவள் மட்டும் தனியாகத்தான் இருந்தாளா?''

''உடன் அவளுடைய தந்தையையும் சிறைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறோம்!''

''இருவரையும் அழைத்து வா!''

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த வேட்டுவப் பெண்ணும், அவளுடைய தந்தையும் அழைத்து வரப்பட்டனர். வேட்டுவப் பெண்ணைக் காணக் காண மன்னர் கமுனுவின் ரத்த நாளங்களில் வீணையின் ஒலிபோல் விண்ணென்ற நாதம் கேட்டது. இவள்தான் எவ்வளவு கொள்ளை அழகாக இருக்கிறாள்! தூயதான ஒரு தமிழச்சியின் தனிக் கோலம் அவளுடைய சந்தன மேனியில் கொலுவிற்றிருந்தது.

''பெண்ணே, நீ யார்?'' — சோகமே மன்னர் நிதானமாகக் கேட்டார். ஆனால் அந்த வேட்டுவப் பெண் பளிச்சென்று பதில் சொன்னாள்: ''இதோ நிற்கும் இவருடைய— என் தந்தையின் மகள்!''

அந்த உடல் நலிவிலும் கலகலவென்று நகைத்துவிட்டார் மன்னர் கமுனு. ''பின் என் மகளென்று நான் குறிப்பிட்டேன்?''

''நல்ல வேளையாக அந்தப் பாவத்தை நான் செய்யவில்லை, மன்னர் பெருமானே!''

''என்ன? அரச குடியில் பிறப்பது பாவமா?''

''பின் இல்லையா? இல்லாவிட்டால் இதோ நிற்கும் இளவரசர் இப்போது என்னைக் கைவிட நேர்ந்திருக்குமா?''

சாலி இடைப் புகுந்தான்: ''நான் கைவிட்டு விட்டதாக யார் சொன்னார்கள்? சத்தியமாகக் கைவிடமாட்டேன்! நீ வணங்கும் அந்த முருகன் மீதும், நான் வணங்கும் புத்த பெருமான் மீதும் ஆணையிட்டுக் கூறுகிறேன். உன்னைக் கைவிட மாட்டேன்!''

வேட்டுவப் பெண்ணின் கண்களில் கலகலவென்று நீர் சுரந்தது. இதனைக் கண்ணுற்ற மன்னருடைய கண்களும் கலங்கத் தொடங்கின. ஆனால், தம்பி தீசன் மிகுந்த ஆவேசத்துடன் நின்று கொண்டிருப்பதைக் கண்ணுற்றுச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டார்.

''வள்ளி!''

''என் பெயர் அதுவல்ல!''

''நான் உன்னை அழைப்பது இப்படியாக இருக்கட்டுமே! ஏனென்றால் ஒருவிதத்தில் வள்ளியின் வாழ்க்கை உன் வாழ்க்கையாக அமைந்திருக்கிறது. ஆகவே, உன்னை வள்ளி என்றே நான் அழைப்பேன். வள்ளி! நீ உன் காதலைத் தியாகம் செய்வதுதான் நல்லது!''

''முடியாவிட்டால்?''

''உன் தந்தைக்கு மரண தண்டனை!''

''அவர் செய்த குற்றம்?''

''உன்னைப் பெற்றது!''

''இதனால் தாங்கள் அடையும் லாபம்?''

''உனக்கு ஏற்படக்கூடிய நட்டம்!''

''எனக்கு நட்டம் ஏற்பட்டதாக யார் சொன்னார்கள்? என் காதலர் மரண தண்டனை படையவில்லையே!''

''தந்தையை விடக் காதலன்தான் பெரிதா?''

''இப்படிச் சொல்லுங்கள், ஒரு மகளுடைய வாழ்வைவிடத் தந்தையின் உயிர் பெரிதல்ல!''

மன்னர் கமுனு ஒரு கணம் மலைத்து விட்டார். ''பெண்ணே! நன்கு பேசுகிறாய்!''

''இல்லை; நன்றாகப் பேசியிருந்தால், என்னைப் பெற்ற குற்றத்துக்காக என் தந்தைக்கு மரண தண்டனை அளிக்கப்போவதாகச் சொன்னீர்களே, அப்போதே பேசியிருப்பேன்!''

''என்ன பேசியிருப்பாய்?''

''தம்மை இளவரசர் என்று காட்டிக் கொள்ளாமல், என்னைப் பெண்டாண்ட மகனைப் பெற்ற பாவத்துக்காகத் தங்களுக்கு என்ன தண்டனை அளிப்பது என்று பேசியிருப்பேன்!''

தீசனுக்கு ஆத்திரம் வெகுவாகப் பொங்கி எழுந்தது. எவ்வளவு நெஞ்சழுத்தத்துடன் இவள் பேசுகிறாள்!

தம்பியின் உணர்ச்சி வயப்பட்ட சினச் சீற்றத்தைக் கைச் சமிக்ஞையால் அடக்கிய மன்னர் கமுனு, ''வேட்டுவப் பெண்ணே! புத்திசாலித்தனமாகப் பேசுகிறாய் அல்லவா?'' என்றார் குறும்பாக!

''என் பெயர் 'புத்தி' என்று வைத்திருந்தால் தங்கள் திருக் குமாரருடைய பெயரும் இணைந்து 'புத்திசாலி' என்ற சொல் அழகாக இருந்திருக்கும்!''

''அதிகப் பிரசங்கிப் பெண்ணே! நீ காதலித்த குற்றத்துக்காக உன்னைத் தண்டிக்கப் போவதில்லை. ஒரு மன்னன் முன்னால் அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசியதற்காகத் தண்டிக்கப் போகிறேன். உனக்குச் சிறைத் தண்டனை!''

''எனக்கு மட்டும்தானே?''

''உன் அப்பனுக்கும்!''

''அவர் எதுவும் பேசவில்லையே!''

''உனக்குத் துணை வேண்டாமா?''

''வேண்டாம்!''

''தனியாகவே சிறையில் இருப்பாயா?''

''என் காதலர் துணை யிருக்கிறார்!''

''அவன் அரண்மனை மஞ்சத்திலிருப்பான்.''

''ஆனால் என் நெஞ்சத்திலும் இருப்பார்!''

''அப்படி யென்றால் தண்டனையை அனுபவி.''

அதற்கு மேல் மன்னர் கமுனு எதையும் பேசிக் கொள்ளவில்லை. ஆத்திரமும், ஆவேசமுமாகக் காணப்பட்ட தீசன், வேட்டுவப் பெண்ணுடன் வெளியேறினார். அவனைப் பின்தொடர்ந்து மகாதேரரும் நடந்தார். அப்போது, ''மகாதேரரே!'' என்ற மன்னருடைய குரல் கேட்டுத் தயங்கி நின்றார் மந்திரியார். ''உங்களுடன் கொஞ்சம் பேச வேண்டும்!''

மன்னரின் அருகே வந்து அமர்ந்தார் மகாதேரர்.

இளவரசன் சாலியின் காதல் செய்தி மகாகமை நகரம் முழுதும் பரவியது. அரண்மனையில் காதுடன் காது வைத்தாற் போல் பலர் பலவிதமாகப் பேசத் தொடங்கினர். இந்தப் பேச்சுக்களும், வாதங்களும் அடங்கவே பத்துத் தினங்கள் பிடித்தன. ஒருவாறு அமைதி கண்டார் தீசன். காணு

# ஜம்ஷெட்பூர் எஃகுத் தொழிலாளிகள் 'சிரமவீர்' தேசிய விருதுகள் பெறுகிறார்கள்

இந்தியாவின் புதிய வீரர்களை — டெக்னீஷியன்களையும், ஆலைத் தொழிலாளிகளையும் — பெருமைப்படுத்துவதற்காக மார்ச் 1966ல் முதலாவது விழாவை நமது அரசாங்கம் நடத்தியது; 'சிரமவீர்' தேசிய விருதுகள் வழங்கி அவர்களைப் பாராட்டியது. குறைந்த செலவில் அதிக உற்பத்திக்கு வழி செய்யும் யோசனைகளுக்கு ஊக்கம் அளிப்பதற்காக ஒவ்வொரு ஆண்டும் இப்பரிசுகள் வழங்கப்படும்.

இந்த ஆண்டு வழங்கப்பட்ட 27 விருதுகளில் இரு முதற் பரிசுகள் உட்பட ஐந்து பரிசுகள் டாடா ஸ்டீல் தொழிலாளிகளுக்குக் கிடைத்திருக்கின்றன. இந்நாட்டிலேயே அதிகமான விருதுகள் பெற்றுள்ள தனியொரு ஸ்தாபனம் இதுதான்.

ஜம்ஷெட்பூர்த் தொழிலாளிகள் கடந்த 20 ஆண்டுகளில் 12000க்கும் அதிகமான யோசனைகளைத் தெரிவித்திருக்கிறார்கள். அவற்றுள் கிட்டத்தட்ட 1000 யோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. உற்பத்தியைப் பெருக்குவதற்கும், தொழிற்சாலை விபத்துக்களைத் தவிர்ப்பதற்கும், தொழிற்சாலையில் கிடைக்கும் பொருள்களையும், அனுபவ அறிவையும் கொண்டு சுயதேவையைப் பூர்த்தி செய்வதற்கும் இக்கருத்துக்கள் வழிவகுக்கின்றன.

உற்பத்தியின் ஆரம்ப நிலையில் இருந்தே சுய முயற்சியை ஊக்குவிக்கும் கருத்தரங்குத் திட்டத்திற்குத் (Suggestion Box Scheme) தாம் முன்னோடியாக அமைந்தது குறித்து டாடா ஸ்டீல் ஸ்தாபனத்தார் பெருமிதம் அடைகிறார்கள். இத்திட்டம் இப்பொழுது இந்தியாவில் உள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும் நடைமுறைக்கு வரத் தொடங்கியுள்ளது.

**டாடா ஸ்டீல்**



The Tata Iron and Steel Company Limited

JWT TN 3274A

Graphic CP-2



7 நாட்களில் உங்களுடைய முகப்பருக்களை அகற்றி சருமத்தை பிரகாசப்படுத்தும்



- கிருமிநாசினி கலந்தது. டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது.
- சுகந்தமான மணமுள்ளது.

# Nital

MEDICATED PIMPLE CREAM

(நிடால் முகப்பரு க்ரீம்)

விலை
ரூ. 1/90
வரிகள் தனி

மருந்து கலந்த நிடால் முகப்பரு க்ரீம் உங்கள் சருமத்தில் தோன்றும் பருக்களை ஒருவித அபாயமுமில்லாமல் அகற்றி விடுகிறது. சருமத்துக்கும் பாதுகாப்பளிக்கிறது. சருமத்தின் அடித்தளம்வரையில் இறங்கி கிருமிகளை நாசம் செய்து விடுகிறது. பருக்கள் உலர்ந்து உதிர்ந்து விடுகின்றன. சொட்டையோ, தடமோ பின்பு எதுவும் இருக்காது.

யௌவனத்தின் பொலிவை மிகைப் படுத்துவதாலும், சருமத்தின் சுகாதாரத்தை அபிவிருத்தி செய்து பிரகாசப் படுத்துவதாலும் நிடால் க்ரீம் ஆண்களோ, பெண்களோ, யாவருககும் மிகவும் ஏற்றது.

| | |
|---|---|
| இலவசம்— | நிடாலின் விவரங்கள் அடங்கிய சிறிய புத்தகத்தை விநியோகஸ்தர்களிடம் பெறலாம். |

தயாரிப்போர்:
**கொச்சின் பாம் பிரைவேட லிட்**
நவரத்ன ஹவுஸ், மந்தரா ரோடு
கொச்சி - 2

உபயோக முறை டப்பாவிற்குள் அடங்கியுள்ளது.

சென்னை, ஆந்திரப் பிரதேசம், மைசூர் மற்றும் கேரள ராஜ்யத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
M/s. கணபதி & கோ., 103-104, லிங்கி செட்டித் தெரு, த.பெ.பெ. 1986, சென்னை-1

மல் போன இளவரசனைக் கண்டு பிடித்தாய் விட்டது. இப்போது, ருவான் வெளிசயாவை மூன்று மாதங்களுக்குள் கட்டி முடிக்க வேண் டும் என்று மன்னர் உத்தரவிட்டிருப்பதாக மகாதேரர் சொன்னாரே, இது முடிகிற காரியமா?

ஆனால் சாலியோ பித்தம் பிடித்த நிலையில் ஊணுறக்கமின்றி, உற்ற அலங்காரமின்றிப் பார்க்கப் பரிதாபமாக நடமாடிக் கொண் டிருந்தான். சிறைச்சாலைப் பக்கம் அவன் நெருங்காமல் இருக்கப் பலத்த காவல் போடப் பெற்றிருந்தது. சிறையில் அந்த வேட்டுவப் பெண் அழுத கண்ணீரில் காதலைக் குளிப்பாட்டி, தொழுத கரங்களில் முருகனை வழிபட்டுத் தன்னைத்தானே கருக்கிக்கொண் டிருந்தாள். இவையெல்லாம் நிசனுக்கும் தெரியும். ஆனாலும் அந்தக் காதலை நிறை வேறவிடாமல் செய்துவிட வேண்டும் என் பதில் தீவிரமாக இருந்தார். அண்ணன் மகன்மீது அவருக்கு இருந்த பற்று—எதிர்கால நோக்கு அவரை அவ்வாறு செய்யத் தூண் டியது. மேலும் ஒரு தமிழ்ப் பெண்ணை மணப்பதா? சிங்களச் சிம்மாசனம் ஏற்பதா? கொடுமை! கொடுமையிலும் கொடுமை?

வெளியில் பாதக்குறட்டொலி கேட்டது. மகாதேரர்தான் வருகிறார். அவரை எழுந்து வரவேற்றார் நிசன். "வாருங்கள் மகா தேரரே! தங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!"

"என்ன நிசா! ஏதேனும் அவசரமான விஷயமா?"

அருகிலிருந்த பொன்னாசனத்தில் அமைதி யாக அமர்ந்தார் மகாதேரர்.

"சுவாமி! மன்னருடைய ஆசை மேலிய ஆணையை எப்படி நிறைவேற்றுவது என்பது தான் புரியவில்லை. ருவான் வெளிசயாவைக் கட்டி முடிக்க என்னதான் வேகமாக வேலைகள் நடைபெற்றாலும் இரண்டாண்டுகளேனும் ஆகும். மூன்று மாதங்களுக்குள் கட்டி முடிக்க வேண்டும்; கண்ணால் பார்த்து நிறை வடைய வேண்டும் என்கிறாரே அண்ணன்! அது முடிகிற காரியமா? தாங்களாவது எடுத்துச் சொல்வீர்கள் என்றுஅழைத்தேன்!"

மொட்டைத் தலையைத் தடவி விட்டவண் ணம் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்த தேரர் தயங்கிய குரலில் சொன்னார்: "நிசா! உன்னுடைய நிலையில் நீ சொல்லும் காரணம் சரியே! ஆனால், மன்னர் என்ன நினைக்கிறார் தெரியுமா? இன்னும் மூன்று மாத காலத்துக்குள் தாம் இறந்துவிடக் கூடும் என்று உறுதியாக நம்புகிறார். ஜாதகத் திலும் மாரகம் வலிமையாகப் பேசுகிறது. ஆசையின் காரணமாகச் சிந்தையை இழந் திருக்கிறார். அத்துடன் சாலியின் பிரச்னை வேறு!"

"சாலியின் பிரச்னை என்னையும் பல சமயங் களில் வாட்டி வதைக்கத்தான் செய்கிறது. என்ன செய்வது? அவன் அந்த வேட்டுவப் பெண்ணை மறப்பதாகத் தெரியவில்லையே!"

"அவன் எப்படி இருக்கிறான்?"

"அவனும் அவன் நிலையில்தான் இருக் கிறான்!" என்ற நிசர் சட்டென்று ஏதோ முடிவுக்கு வந்தவராகக் காணப்பட்டார்.



"நாய் பேஷானதுதான். வாங்கிக் கொள்கி றேன். ஏதுமான விசேஷம் உண்டா?"

"பேஷா உண்டு. மூன்று தடவை வித்து விட்டேன். மூன்று தடவையும் என்னிடமே திரும்பி வந்துவிட்டதுன்னு விசேஷத்தைப் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

அடுத்து அந்த வேட்டுவப் பெண்ணைச் சிறையிலிருந்து அழைத்து வரும்படி ஆணை பிறந்தது.

"பெண்ணே! காதலைத் துறப்பது அந்நாளை சாத்தியமில்லை என்பதுதான் உன் னுடைய முடிவான வாதமா?"

நிசனுடைய நாவிலிருந்து கடகடச் சொற்கள் புறப்பட்டன.

வெறுமை நிறைந்த நகை புரிந்தாள் வதங்கி வற்றலாகிவிட்ட அந்த வேட்டுவப் பெண்: "பிரபோ! காதல் என்பது தாது கோபுரம் அல்ல! நினைத்தால் கட்டுவதற்கும், வேண்டாம் என்றால் இடித்துத் தள்ளுவதற் கும்! அது தெய்வ சிருஷ்டி!"

எந்த நோக்கத்துடன் அழைத்தோமோ அந்த நோக்கம் அந்த வேட்டுவப் பெண் வாயிலாகவே வெளிப்படக் கண்டு வியந்து போனார் நிசன்! இதுவும் விதியின் சேட்டை தானோ?

"பெண்ணே! நான் கட்டும் தாதுகோபு ரத்தை மனத்தில் வைத்துத்தான் நீ பேசு கிறாய் என்று நினைக்கிறேன். தாதுகோபுரம் கட்டுவதென்பது அவ்வளவு எளிதா?"

"காதலிப்பதைவிட அது எளிதுதான்!"

"அப்படியென்றால் உன் காதல் நிறை வேற நான் ஒரு நிபந்தனை விதிக்கிறேன். கட்டுப்படுவாயா?"

"நிபந்தனையைச் சொல்லலாம்!"

"அதோ, நிர்மாணத் தொடக்க வேலைகள் நடைபெறும் நீ குறிப்பிட்ட அந்தத் தாது கோபுரத்தை மூன்று மாதங்களுக்குள் கட்டி முடிக்க வேண்டும் என்று மன்னர் ஆசைப்படு கிறார்; ஆணையிட்டிருக்கிறார்! நீ அதை நிறை வேற்றி விட்டால் அடுத்துச் சாலியைக் கணவ ராக அடையலாம்!"

கொஞ்ச நேரம் அமைதியாக நின்றாள் வேட்டுவப் பெண்! "மன்னர் ஏன் இத்தனை அவசரப்படுகிறார்?"

"மரணத்தின் பயம்; சாவதற்குள் கண்ணால் கண்டு ஆத்ம நிறைவடைய வேண்டுமாம்!"

**கடலுக்கு அடியில் ஆறு**

ருஷ்யாவில், மங்கிஷ்லாக் தீபகற்பத்தில் மாபெரும் எண்ணெய்ப் படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த வறண்ட தீபகற்பத்துக்கு நல்ல குடி தண்ணீர் வேண்டும். எனவே, சோவியத் எஞ்சினியர்கள் காஸ்பியன் கடலின் அடியில் குடிநீர் விநியோக அமைப்பு ஒன்றைக் கட்டப் போகின்றனர். 200 கிலோமீட்டர் நீளமுள்ள இந்த அமைப்பின் வழியாக, வோல்கா நதித் தண்ணீர் செல்லும்!

"மூன்று மாதங்களென்ன? மூன்று வாரங்களில் கட்டி முடிக்கிறேன். அதைக் கண்டு மன்னர் ஆத்மா நிறைந்துவிட்டது என்று சொன்னால் போதுமல்லவா?"

ஈசனுக்கு அரட்சி கண்டது. "பெண்ணே! நான் சொல்வது மிக உயரமான தாது கோபுரம்! சிங்களவர் பெருமையைப் பௌத்தத்தின் மூலம் ஸ்தாபிக்கப் போகும் ருவான் வெளிசயா!"

"புரிகிறது, பிரபோ! நன்றாகப் புரிகிறது. நீங்கள் நினைப்பது போலவே அந்த ருவான் வெளிசயாவைக் கட்டி முடிக்கிறேன். மன்னர் அதனைக் கண்டு ஆத்ம நிறைவு கண்டால் எனக்கு இளவரசரைக் கொடுத்து விடுவீர்களா?"

"வாக்குத் தவற மாட்டேன்!"

"புத்தபெருமான் மீது சத்தியம் செய்யுங்கள்!"

ஈசன் அவ்வண்ணமே சத்தியம் செய்தார். பிறகு சொன்னார்: "நீ தவறிவிட்டால் சாலி, உன்னை வெறுக்குமளவுக்கு நடந்து கொள்வாயல்லவா?"

"அவ்வண்ணமே நடந்து கொள்வேன்!"

"உன் குலக் கடவுள் முருகன் மீது ஆணையிடு!"

வேலின் மேல் ஆணையிட்டாள் வேல் விழியாள் வேட்டுவப் பெண்!

ருவான் வெளிசயா வெகு வேகமாக எழத் தொடங்கியது.

தன்னின மக்கள் அனைவரையும் திரட்டி வந்து நீண்ட மரங்கள் பலவற்றை வெட்டிச் சாய்த்தாள் வேட்டுவப் பெண். அந்த மரங்களை அறுத்துச் சீவி நட்டு, மூங்கில்களாலும், பலகைகளாலும், தடித்த துணிகளாலும்தாது கோபுரத்தை உருவாக்கிச் சுண்ணாம்பு பூசித் தத்ரூபமாக நிர்மாணித்துவிட்டாள். மூன்றே வாரங்களில் ருவான் வெளிசயா முடிந்து விட்டது. அதனைக் காணக் காண வியப்பும் திகைப்பும் அடைந்தார் ஈசன். இப்படி ஒரு திட்டத்தில் அது உருவாகும் என்று அவர் எதிர்பார்க்கவேயில்லை. மன்னர் இதனைக் கண்டு உண்மையறிந்தால், மறுகணமே வேட்டுவப் பெண்ணுக்கு மரண தண்டனை விதித்தாலும் வியப்பதற்கில்லை.

பல்லக்கு ஆயத்தமானது. மன்னர் கமுனு அதில் அமர்ந்தார். பக்கலில் மகாதேரர் அமர்ந்தார். எண்மர் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு சென்றனர். உடன் ஈசனும் புரவியில் சென்றார்.

காவ்பாக வழியைக் கடந்ததும் வானுற ஓங்கி எழுந்திருந்த ருவான் வெளிசயாவைப் பார்வையிட்டார் மன்னர் கமுனு! "ஆகா! எத்தனை உயரம்! எத்தனை அழகு! என் வாழ்வின் கடமை முடிந்து விட்டது. தேரரே! பல்லக்கை அரண்மனைக்குத் திருப்புங்கள்!" என்றார் பொன்மருவிய புன்னகையுடன்.

"கோபுரத்தைப் பார்வையிட வேண்டாமா?" ஈசன் வற்புறுத்தினார்.

"தேவையில்லை, தம்பி! உடல் என்னமோ செய்கிறது! இப்படியே அரண்மனைக்குத் திரும்பி விடுவோம். ஈசா! ருவான் வெளிசயாவால் என் ஆத்மா நிறைந்துவிட்டது. சாலி பற்றிய பிரச்னைக்கு ஒரு முடிவு கண்டால் நான் நிம்மதியாகச் சாகமுடியும்!"

தேரரைப் புன்னகையுடன் நோக்கினார் கமுனு. தேரரும் மெல்ல முறுவலித்தார்.

ஈசன் வேதனை கலந்த பெருமூச்சுடன் கூறினார்: "அண்ணா! பிரச்னைக்கு வேறு வழியே இல்லை. அந்தப் பெண்ணை அவன் மணந்துதான் தீர வேண்டும்."

"நீயா இப்படிச் சொல்லுகிறாய்?"

"நானேதான் அண்ணா! முடிவு செய்து விட்டேன்!"

"உன் முடிவு அதுவானால் என் ஆத்மா மேலும் நிறைவடையட்டும்!"

வேட்டுவப் பெண்ணை மணந்தான் ரோகணத்து இளவரசன் சாலி. பலர் எதிர்ப்பைத் தெரிவித்தனர். இதனால் அரசப் பதவியையே துறந்தான் சாலி. அடுத்து அரியணையில் அமர வேண்டியவன் ஈசன் என்று பிரகடனப்படுத்தினார் மன்னர் கமுனு!

மணமக்கள் மன்னரைக் கண்டு ஆசீர்வாதம் பெறச் சென்றனர். அவர்களிருவரை மட்டும் உள்ளே அனுமதிக்கும்படி ஆணை பிறப்பித்தார் சிங்கள மன்னர்.

இருவரும் பணிந்தெழுந்தனர். மன்னர் கமுனு புன்னகையுடன்சொன்னார்: "சோழன் மகளே! மனம் நிறைந்ததா?"

சோழ குமாரி பூரித்துச் சொன்னாள்: "பிரபோ! தங்கள் ஆத்மா நிறைந்ததாகச் சொல்லிய ஒரு பொய் மூலம், எங்கள் மனம் — மணம் நிறைந்தது. தாங்கள் ஆடிய இந்த நாடகத்தால் தங்கள் மனம் வெற்றி பெற்றதோ, என்னமோ? எங்கள் காதல் வாழ்வு பெற்றது!"

"சோழன் மகளே! உன் தந்தைக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றினேன். அவருடைய ஆத்மா வானுலகில் சாந்தியடையும். அதுவே என் ஆத்மசாந்தியாகும். உனக்கு வாழ்க்கையளிக்கும்படிதான் உன் தந்தை தோல்வி கண்டு உயிர் பிரியும் நேரத்தில் என்னிடம் வேண்டினார். ஆனால் உன்னை ஒரு வேட்டுவக் குலத்தில் வளர்க்க வைத்த பாவத்துக்காக என் மகனையே அளித்தேன். சிங்கள மரபைக் காக்க வேண்டுமல்லவா? ஆகவேதான் அரியணையைப் பிடுங்கி விட்டேன். அதற்காக வருந்தாதே!"

"சிங்களப் பெருமா! எங்களுக்குள்ள அரியணை கானகத்தில் இருக்கிறது. அங்கே நாங்கள் தனி மாளிகை கட்டிக் கொண்டு அரசியல் தொல்லையற்ற வாழ்வில் இனிப் போம்! ஆசி வழங்குங்கள்!"

"நிறைவான வாழ்வையும், நிறைவின்பமும் பெற்று நீடூழி வாழுங்கள்!" கமுனுவின் கண்களில் மகிழ்ச்சி நீர் கரை புரண்டது.



தன் கணவனுடைய மேஜை மீது கிடந்த அந்தத் திருமண அழைப்பைக் கண்ட ஜானகி, சில வினாடிகள் தன் சிந்தனையை ஓட விட்டுப் பார்த்தாள். அது யாருடைய திருமணமாக இருக்கும் என்று. தன் கணவனுக்குத்தான் யாரோ அனுப்பி யிருக்கிறார்கள். அது மட்டுமா? தன் கணவனுடைய பெயருக்கு முன்னால் 'திருமதியும்' என்று தன்னையும் சேர்த்து விலாசமிடப்பட்டிருந்தது. மணமகன் சீனிவாசன், மணமகள் வேதவல்லி. பார்த்த மாத்திரத்திலேயே அது மணமகனின் வீட்டாரின் அழைப்பிதழ் என்றும் புரிந்தது.

''ஓ! என்ன ஜானகி? அந்த அழைப்பைப் பார்க்கிறாயா?'' என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான் ராஜாராமன்.

தன் கணவனின் வருகையைக் கண்ணுற்ற ஜானகி திரும்பி, ''வந்து விட்டீர்களா? ஆமாம், இந்தக் கல்யாணக் கடிதாக வந்திருக்கே, யாருக்குத் திருமணம்?'' என்று கேட்டாள்.

''யாருக்கா? லலிதாவின் அண்ணன் சீனிவாசனுக்கு!''

''லலிதாவா?'' — புருவம் சுருங்கக் கேட்டாள் ஜானகி.

''அட! உன்னிடம் சொல்லவில்லையா? சரி! எங்கள் அலுவலகத்திலே ஒரு புதிய டைபிஸ்ட் வேலைக்கு வந்திருக்கிறாள். அவளுடைய தமையனுக்குத்தான் கல்யாணம்!''

''அப்படியா? உங்களுக்குச் செலவுதான் என்று சொல்லுங்கள்!''

''அது இருக்கட்டும், ஜானகி! இந்தத் திருமணத்துக்கு நீயும் அவசியம் வரவேண்டும். இது என் விருப்பம் மட்டுமல்ல. லலிதாவின் கட்டளையும்கூட! அதோ! அதோ! லலிதாவே வந்து விட்டாள்! வாருங்கள், மிஸ் லலிதா, வாருங்கள்! ஆயுசு நூறு உங்களுக்கு!'' என்று உள்ளே நுழைந்த லலிதாவை வரவேற்றான் ராஜாராமன்.

''வாருங்கள்!'' என்று ஜானகியும் வரவேற்றாள்.

''என் தமையனுக்குத் திருமணம் அடுத்த மாதம் இரண்டாம் தேதி. அதற்காக உங்களை நேரில் அழைக்கவே வந்தேன், சகோதரி! நீங்கள் உங்கள் கணவருடன் அவசியம் வந்து திருமணத்தில் கலந்து கொள்ள வேண்டும்'' என்று ஜானகியைப் பார்த்து அழைத்தாள் லலிதா.

''சரி, அவசியம் வருகிறேன்'' என்றாள் ஜானகி.

பின்னர் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு விடைபெற்றாள் லலிதா.

திருமணத்துக்கு முதல் தினமே ராஜாராமன் ஜானகியுடன் சென்றான். லலிதாவுடன் வெகு சரளமாகவும் உற்சாகமாகவும் தன் கணவன் பழகுவது ஜானகிக்கு என்னவோ போலிருந்தது. அவனுக்கு அங்கு விசேஷ மரியாதையும் கௌரவமும் அளிக்கப்பட்டது ஜானகிக்குப் பெருமைதானெனினும், லலிதா எப்போது பார்த்தாலும் அவனுடனேயே சுற்றிச் சுற்றி வந்தது குறித்து, மற்றவர்கள் எப்படி எண்ணிய போதிலும், அவளுக்கு வேதனையை அளித்தது.

ஜானகி கலகலப்பாக இல்லாமல் இருப்பதைக் கவனித்த லலிதா, ''ஏன், உங்கள் மனைவி ஒரு மாதிரி இருக்கிறார்? உடம்பு சரியில்லையா என்ன?'' என்று கேட்டாள் ராஜாராமனிடம்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. புதிய இடம் அல்லவா?'' என்று பதிலளித்தான் அவன்.

திருமணம் முடிந்து ராஜாராமனும் ஜானகியும் வீடுதிரும்பினார்கள். திருமணத்தின் சிறப்பைப் பற்றி அவன் பிரமாதமாக வர்ணித்தான். உற்சாகமின்றிக் கேட்டுக் கொண்டு மௌனமாக இருந்தாள் ஜானகி.

அன்று அலுவலகத்திலே லலிதா ஒரு போட்டோ ஆல்பத்தை ராஜாராமனிடம் காட்டினாள். அவளுடைய அண்ணன் சீனிவாசனின் திருமணத்தின் போது எடுக்கப்பட்ட பல புகைப்படங்கள் அடங்கிய ஆல்பம் அது. எல்லாப் படங்களையும் புரட்டிக் கொண்டே வந்தவன், கடைசியில் உள்ள படத்தைக் கண்டு திடுக்கிட்டான். அது அவனும் லலிதாவும் ஒருங்கே காட்சி தரக் கூடிய படம்!

''ஏன் இப்படித் திகைக்கிறீர்கள் மிஸ்டர் ராஜாராமன்?'' என்று துடிப்புடன் கேட்டாள் லலிதா.

ஒருவாறு சமாளித்துக் கொண்ட ராஜாராமன், ''திகைக்கவில்லை, மிஸ் லலிதா! வியப்படைந்தேன். நேரில் காண்பதைவிடப் புகைப்படத்தில் நீங்கள் இன்னும் பிரமாதமாய்க் காணப்படுகிறீர்கள்! எப்போது எடுக்கப்பட்ட படம் இது? எனக்குத் தெரியாதே!'' என்று கூறினான்.

''எனக்கும் தெரியாது, சார்! என் அண்ணனின் குறும்பு இது!'' என்று கூறி நகைத்தாள் லலிதா.

''நல்ல விபரீதமான குறும்பு இது. லலிதா!'' என்றான் ராஜாராமன்.




''இது அவனுக்கு ஒரு தமாஷ்! சரி! இந்த ஆல்பம் உங்களுக்கு. என் அண்ணனின் அன்பளிப்பு!'' என்றாள் லலிதா.

தயக்கத்துடனே அதை ஏற்றுக் கொண்டான் ராஜாராமன். தயக்கத்துக்குக் காரணம் இல்லாமலில்லை. அந்த ஆல்பத்தை ஜானகி கண்ணுற நேர்ந்தால், அதன் விளைவு? எண்ணிப் பார்க்கவே அவனுக்குக் கூசியது உடலும் உள்ளமும். சீனிவாசனின் திருமணத்தின் போது ஜானகி கலகலப்புடன் இல்லாமைக்குக் காரணம் அவனுக்குப் புரிந்துதான் இருந்தது. அவன் மனத்துக்குத் தெரியும், தான் துளியும் பிசகவில்லை என்றும், லலிதாவும் தூய்மை மிக்கவள் என்றும். ஏன்? லலிதாவின் வீட்டாரும் இந்த விஷயத்தில் துளிக்கூடச் சம்சயப்பட்டது கிடையாது. ஆனால்.... ஜானகியைச் சமாதானப்படுத்துவது எங்ஙனம்? சடுதியில் சமாதானமடையக்கூடிய இனமா? பருவமா? அந்த ஆல்பத்தை ஏற்றுக் கொள்ளாமல் நிராகரித்து விடலாமா என்றுகூடச் சிந்தித்தான் ராஜாராமன் ஒரு கணம். ஆனால் லலிதாவின் மனம் வேதனைப்படும் என்று தோன்றிற்று அவனுக்கு. அதை ஏற்க முடியாமைக்கு உண்மைக் காரணத்தை அவளிடம் கூறி விடலாமா என்று ஒரு விநாடி தயங்கினான். ஆனால் கள்ளங்கமற்ற அவள் முகத்தைப் பார்த்து அவனால் இதைச் சொல்ல முடியவில்லை. ஆகவே, அவள் அன்போடு கொடுத்த அந்த ஆல்பத்தைத் தயக்கத்துடன் வாங்கிக் கொண்டான். ஆனால் அவன் மனத்தில்மட்டும் அவ்வளவாக அமைதியில்லை. 'ஜானகியிடம் அந்த ஆல்பத்தைக் காட்டினால்தானே வம்பு?' என்று ஓர் எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்தது. அதே சமயம் இன்னோர் எண்ணமும் தோன்றியது. அந்த ஒரு படத்தை மட்டும் கிழித்து எறிந்து விடலாமா என்று எண்ணினான் ராஜாராமன். ஒரு விநாடிதான். சே! தான் என்ன கோழையா? எதற்கு அந்தப் படத்தைக் கிழித்து எறிய வேண்டும்?

தன் பெட்டியிலே ஒரு மூலையில் ரகசியமாக ஜானகியின் கண்களில் படாதவாறு அந்த ஆல்பத்தைப் பத்திரப்படுத்தி வைத்தான் ராஜாராமன். தவிர அடிக்கடி அதைக் கண்காணித்தும் வந்தான், ஒரு வேளை அது எங்கே ஜானகியின் பார்வையில் பட்டுவிடுமோ என்று. நல்ல வேளை! தான் வைத்த பிரகாரமே அது இருக்கக் கண்டு மனச் சமாதானம் அடைந்தான்.

ஒருநாள் அலுவலகத்தில் லலிதா ராஜாராமனைக் கேட்டாள், ''ஆமாம், அந்தப் போட்டோ ஆல்பத்தை உங்கள் மனைவிக்குக் காட்டினீர்களோ? எப்படி இருக்கிறதாம்?'' என்று.

''ஓ! 'பிரமாதம்! அற்புதம்!' என்று பாராட்டினாள்என்மனைவி!''.

''அது சரி! நாம் இருவரும் சேர்ந்து காட்சியளிக்கும் அந்தப் போட்டோ?''

ஒரு கணம் துணுக்குற்ற அவன், சட்டென்று சமாளித்துக் கொண்டு, ''அண்ணனும் தங்கையும் போல அழகாய் அமைந்துள்ளது' என்று கூறினாள் ஜானகி!'' என்றான்.

இதைச் சொன்ன போது அவன் அடைந்த மன வேதனை ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

''நான் அப்படித்தான் நினைத்தேன். உங்கள் மனைவி ரொம்ப நல்ல மாதிரி. எதையும் நல்லபடியாக நோக்கும் உயர்ந்த தன்மை அவளிடம் இருக்கிறது. நீங்கள் ரொம்பவும் பாக்கியசாலி!'' என்றாள் லலிதா மகிழ்ச்சி பொங்கும் குரலில்.

இப்போது ஜானகியின் பேச்சிலும் செயலிலும் ஒரு மாறுதலைக் கவனிக்கத் தவறவில்லை ராஜாராமன். அன்றொரு நாள் அவன் ஆபீசுக்குப் புறப்படுகையில், ''ஜானகி! இன்று இரவு திரும்ப நேரமாகும். எனக்காக நீ காத்திருக்க வேண்டியதில்லை. சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொள்!'' என்று கூறினான்.

''ஓ!'' என்று மட்டும் பதிலளித்தாள். அந்த ஒரு சொல்லில் ஆயிரம் அர்த்தம் அவனுக்குப் புலனாகியது. நியாயமாய், தான் நேரங்கழித்து வருவதற்குக் காரணம் கேட்டிருக்க வேண்டியவள், இப்படிப் பளிச்சென்று பதிலளித்தது குறித்து அவனுக்கு வியப்பு ஏற்படவே இல்லை. இம்மாதிரி பதிலை அவன் எதிர்பார்த்தவன்தான்!

மற்றொரு நாள். ஜானகியையும் அழைத்துக் கொண்டு திருப்பதியில் நடந்த தன் உறவினர் வீட்டுத் திருமணத்துக்குச் சென்றான் ராஜாராமன். அங்கு அவனுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது. அதே போல் ஜானகிக்கு ஒரு திகைப்பும் காத்திருந்தது என்று கூற வேண்டும்! காரணம்? அதே திருமணத்துக்கு லலிதாவும் வந்திருந்தாள்! அவளுடைய பள்ளித் தோழியின் திருமணமாமே அது!

"அடா! லலிதா! நீங்களும் இங்கு வந்திருக்கிறீர்களா? ஏன் என்னிடம் முன்பே கூறவில்லை?" என்று வியந்து கொண்டே கேட்ட ராஜாராமனுக்குப் பதிலளித்தாள் லலிதா, "ஆமாம், உங்களை வியப்பில் ஆழ்த்த வேண்டும் என்றுதான்!" என்று. நல்ல வேளை! அச்சமயம் அருகில் ஜானகி இல்லை. எனவே ராஜாராமன், "மிஸ் லலிதா! ஒரு விஷயம்!" என்றான்.

"என்ன சார்?"

"அந்தப் போட்டோ ஆல்பத்தைப் பற்றி மட்டும் நீங்கள் இப்போது என் மனைவியிடம் பிரஸ்தாபிக்க வேண்டாம்."

"புரிந்து கொண்டேன், சார்!"

"எப்படி?"

"பாம்பின் கால் பாம்பறியுமே, சார்!"

"........ ................?"

"நீங்கள் இருவரும் இங்கு வந்த போது, உங்கள் மனைவிதான் முதலில் என்னைக் கண்டாள். சட்டென்று அவள் முகம் மாறுபட்டதைக் கவனித்தேன். அதிலிருந்து..." என்று தெரிவித்தாள் லலிதா.

ராஜாராமன் லலிதாவுடன் சரளமாகப் பழகினான். அவளுடன் பாபவிநாசம், ஆகாச கங்கை முதலிய இடங்களுக்குச் சென்றான்.

"ஏன், சகோதரி! நீங்கள் வரக் கூடாதா?" என்று அழைத்தாள் லலிதா ஜானகியை.

"எனக்கு உடம்பு சரியில்லை. நீங்கள் குஷியாய்ப் போய் வாருங்கள்!" என்று தன் முகத்தை வேறு பக்கம் வைத்துக் கொண்டு கூறினாள் ஜானகி.

அவளுக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை என்பதும் உள்ளம்தான் சரியாக இல்லை என்பதும் லலிதாவுக்குப் புரியாதா என்ன?

திருப்பதியிலிருந்து ராஜாராமனும் ஜானகியும் வீடு திரும்பினார்கள். அவர்களிடையே பேச்சு கலகலப்பாக இல்லை. இயந்திர கதியிலே எல்லாம் இயங்கிக் கொண்டிருந்தன. சுருக்கமாய்ச் சொல்லப் போனால், அந்த வீட்டில் இருவரும் அந்நியர் போல் வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு நாள் ராஜாராமன் தன் ஆபீஸ் வேலையாகக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டான். திரும்பி வரச் சுமார் பதினைந்து தினங்கள் ஆகும் என்று கூறி விட்டுச் சென்றான்.

"ஒரு விஷயம்!" என்று சற்றுத் தயங்கினாள் ஜானகி.

"என்ன?"

"என் தோழி புவனாவின் தங்கைக்குக் கல்யாணமாம், மாயவரத்தில். நான் போய் வர.........."

"தாராளமாய்ப் போய்விட்டு வரலாம்."

சுமார் பதினைந்து நாட்களுக்குப் பிறகு திரும்பிய ராஜாராமன், ஜானகியைக் கண்டு திடுக்கிட்டான். அவளுடைய முகத்திலே தோன்றிய கலவரத்தைக் கண்ணுற்றுப் பரபரப்படைந்தான். விஷயம் அவனுக்குப் புலப்பட வெகுநேரம் பிடிக்கவில்லை.

"ஓகோ! நம் சாயம் வெளுத்துவிட்டது. நாம் எத்தனையோ ஜாக்கிரதையுடன் மறைத்து வைத்திருந்த அந்தப் போட்டோ ஆல்பத்தை இவள் பார்த்து விட்டிருக்கிறாள்! வந்தது வினை!" என்று எண்ணித் துணுக்குற்றான். "சரி! சரி! விஷயம் எப்படிப் போகிறது என்று பதறாமல் கவனிக்கலாம்" என்று அமைதியைக் கடைப்பிடித்தான் அவன்.

அன்று குளியலறையிலே ராஜாராமன் கைதவறிச் செம்பைக் கீழே நழுவ விட்டுவிட்டான். அது தரையிலே பயங்கரச் சத்தத்தை எழுப்பியவாறு உருண்டோடியது.

பின்னர் ஒரு சமயம் ஆபீஸில் தேநீர் விருந்து நடந்தது. அதனால் அன்று இரவு சாப்பிடாமலே படுத்து விட்டான். தூக்கம் வரவில்லை. ஏதாவது படிக்கலாம் என்று எழுந்தவன், கதவோரமாய் நிற்கும் ஜானகியைக் கண்டு துணுக்குற்றான். அவன் அச்சத்துக்குக் காரணம் அவள் கண்களிலிருந்து நீர் அருவிபோல வழிந்ததுதான்!

"ஆமாம்! இது என்ன நீலித்தனம்?" என்று கேட்கத்தான் வாயெடுத்தான் அவன். 'நான் என்ன தவறு செய்தேன்?' என்று கேட்கவும் துடித்தான். 'நீ அந்தப் போட்டோவைப் பார்த்ததாகவே வைத்துக் கொள்வோம். அதில் என்ன தவறு? ஏதோ வேடிக்கைக்காக எடுத்ததுதானே அது? நீ என்றால் நா வெந்து விடுமா?' என்று ஆத்திரத்துடன் கேட்கத் தோன்றியது அவனுக்கு.

ஆனால்.... ஆனால்.... அவன் எதையும் கேட்க ஜானகி இடமளிக்கவில்லை. அவளே முந்திக் கொண்டு விட்டாள். "ஆமாம்! நான் என்ன தவறு செய்து விட்டேன்?"

"....... .........?"

"ஏன் இப்படி முறைக்கிறீர்கள்? எதற்காக என் மீது இத்தனை ஆத்திரமாம்?"

"உன் மீது எனக்கு ஆத்திரம் ஏற்பட என்ன இருக்கிறது?" அவளைப் பாராமல் எங்கோ பார்த்துக் கொண்டு கூறினான்.

"அன்று குளியலறையில் செம்பை உருட்டினீர்கள். இப்போது சாப்பிடாமல் படுத்துக் கொண்டீர்கள்!" அழுகை பொத்துக் கொண்டு வந்தது அவளுக்கு.

"கைப் பிசகாக நேர்ந்தது அன்று. இன்று உண்மையிலே எனக்குப் பசி இல்லை. ஆபீஸில் பலமான டிபன்!"

"பேச்சு சாமர்த்தியம் என்று நான் எண்ணிக் கொள்ள வேண்டுமா? உங்களுக்கு என் மீது எழுந்த கோபத்தின் பிரதிபலிப்பு இவை என்பது எனக்குத் தெரியாதா?" தான் நிரபராதி என்பதை விளக்கும் வகையிலே தொனித்தது அவளுடைய குரல்.

"போதும், நிறுத்து! எதையோ நினைத்து என்னிடம் சொல்லவும் முடியாமல்...."

"ஒன்றுமில்லை. நீங்கள்தான்.... அந்தப் போட்டோ.... அந்தப் போட்டோ!" அவளால் மேலே தொடர்ந்து பேச முடியவில்லை. துக்கம் அவள் தொண்டையை அடைத்தது!

"போட்டோ! போட்டோவா? எனக்குத் தெரியுமே! நீ...... நீ?"

"இதோ பாருங்கள்! வந்து.... வந்து!"

"ஜானகி, வந்துமாயிற்று, போயுமாயிற்று. இரண்டிலொன்று தெளிவாகிவிட வேண்டும் இப்போது. ஆமாம்!"

"ஐயோ! என்ன சொல்கிறீர்கள்?"

"யாரிடம் இந்தக் கதை எல்லாம்?"

"கதையா? என் ஒழுக்கத்தின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். நிச்சயமாய்ச் சொல்கிறேன். அந்தப் போட்டோ விஷயம் எதிர்பாராமல் நேர்ந்தது!"

ஜலதோஷத்தை
உடனடியாக
அகற்றுங்கள்

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட அமிர்தாஞ்சனம், ஜலதோஷம் மற்றும் மார்புச்சளி இவைகளிலிருந்து பூரணமாக நிவாரணம் அளிக்கிறது. தசைவலி, தலைவலி, களுக்கு இவைகளுக்கும் சிறந்த வகையில் நல்ல குணமளிக்கும் மருந்து அமிர்தாஞ்சனம். ஒருசமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு-அளவே; ஆதலால் ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும் • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி.




பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி

அமிர்தாஞ்சன் லிமிடெட்
மதராஸ் - பம்பாய் - கல்கத்தா - டெல்லி

# எல்லாமே கருகிச் சாம்பலாகிவிட்டது

கவனக் குறைவால். அணைக்கப்படாமல் தூக்கி எறியப்பட்ட ஒரு சிகரெட் துண்டு அனைத்தையும் நாசமாக்கி விட்டது. வருடக் கணக்காகக் கட்டிக் காத்து வளர்க்கப்பட்ட வாணிகம் சாம்பலாகக் காட்சியளிக்கிறது.

உங்களுக்கும் இதுபோன்ற நிலை ஏற்படலாம். இத்தகைய இடர் மற்றும் இன்னல்களிலின்றும் உங்களை நீங்கள் காத்துக்கொள்ள முடியும். எல்.ஐ.சி., நெருப்பினால் ஏற்படும் இழப்பிற்குப் போதுமான ஈடுசெய்து பாதுகாப்பளிக்கிறது. விபத்து. கப்பல் மற்றும் மோட்டார் விபத்து ஆகியவற்றிற்கும் இன்சூரன்சு வசதி கிடைக்கிறது.

## எல்லா வகையான இன்சூரன்சுகளுக்கும் எல்.ஐ.சி.



''எந்தப் போட்டோ ?''

''என் பெட்டியில் நீங்கள் கண்ட அந்தப் போட்டோ ?''

''உன் பெட்டியில் போட்டோவா ?'' விழித்தவாறு அவளைப் பார்த்தான் அவன்.

''நீங்கள் கல்கத்தாவுக்குச் சென்ற போது என் பெட்டியை எடுத்துச் சென்றீர்கள். அதில் நான் மறைத்து வைத்திருந்த போட்டோ நானும் என் அத்தை மகன் பார்த்தசாரதியும் நமது திருமணத்துக்கு முன்பு சேர்ந்து எடுத்துக் கொண்டது. அவன் திடீரென்று இறந்து விட்டான். எனவே, அவனுடைய ஞாபகார்த்தமாய் அது என்னிடம் தங்கியது. நாங்கள் இருவரும் கல்மிஷமில்லாமல் தான் பழகினோம். இருந்தாலும் நீங்கள் தவறாய் எண்ணக் கூடாது என்று தோன்றியது. எனவே, அப்போட்டோவை உங்கள் கண்ணில் படாதவாறு என் பெட்டியில் மறைத்து வைத்தேன். அந்தப் போட்டோ உங்கள் கண்ணில் பட்டுவிட்டது அல்லவா ? என்னை நம்புங்கள்! சத்தியமாய்ச் சொல்கிறேன்!'' அவன் மீது சாய்ந்தாள் ஜானகி.

---

# கிழவனின் கேள்வி!



ஷேஹ்ரம் மகாராஜா என்று ஒரு மன்னர் ஒரு நாட்டை ஆண்டு வந்தார். அவர் சொக்கட்டான் ('செஸ்') ஆடுவதில் சிறந்து விளங்கினார். அவர் தோல்வியுற்றதாகச் சரித்திரமே கிடையாது. யார் யாரோ வந்து விளையாடிப் பார்த்தார்கள். ஒன்றும் முடியவில்லை.

ஒரு நாள் கந்தலாடையுடன் ஒரு கிழவன் வந்தான். அவன் அரசருடன் சொக்கட்டான் விளையாடுவதற்காக வந்திருக்கிறான் என்று அறிந்ததும் அனைவரும் 'கொல்'லெனச் சிரித்தார்கள்.

அரசரின் கட்டளைப்படி ஆடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆட்டம் முடிவின்றி ஆறு நாட்கள் தொடர்ந்து இரவு பகலாக நடைபெற்றது. ஏழாவது நாள் கிழவன் அரசரைத் தோல்வியுறச் செய்து விட்டான். தோற்று விட்டாலும் அரசர் மகிழ்ந்து கிழவனிடம் ''உனக்கு என்ன வேண்டுமோ கேள்'' என்றார்.

''அரசே! எனக்கு ஒன்றும் வேண்டாம். நான் கேட்கிறபடி சில அரிசிகளைக் கொடுக்க வேண்டும்.''

''அப்படியே ஆகட்டும்'' என்றார் அரசர்.

''சரி! இந்த விளையாட்டுப் பலகையிலுள்ள சதுரங்களை எண்ணிக் கொண்டு, முதல் சதுரத்தில் ஓர் அரிசியும், இரண்டாவதில் இரண்டும், மூன்றாவதில் நான்கும், இவ்வாறே முந்திய சதுரத்தில் உள்ளதைப் போல் இரண்டு மடங்கு அடுத்த சதுரத்தில் வைத்து மொத்தமாக என்னிடம் கொடுக்க வேண்டும்'' என்றான் கிழவன்.

''மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. நீ கேட்டபடி என் மந்திரியிடம் சொல்லி வேண்டியதை வாங்கிக் கொள்ளவும்'' என்று அரசர் கூறிவிட்டார்.

மறுநாள் சபையில் மந்திரியைப் பார்த்து, ''கிழவன் வேண்டியதைக் கொடுத்தீர்களா?'' என்று கேட்டதற்கு விடை ''இல்லை'' என்று வந்தது.

''ஏன் இன்னும் தரவில்லை?''

''தர முடியாது!'' — மந்திரி. ''ஏன், நமது களஞ்சியத்தில் இவன் வேண்டியதைக் கொடுக்கக் கையிருப்பு இல்லையா?'' என்றான் மன்னன்.

''நம் ராஜ்யத்திலேயே கிடையாது.''

''மொத்தம் எத்தனை எண்ணிக்கை தர வேண்டும்?''

''அரசே! 18,446,744,073,709,551,615 அரிசி கொடுக்க வேண்டும்.''

அரசர் அப்போதுதான் தன் தவறை உணர்ந்தார். ஒரு கியூபிக் மீட்டரில் 15,000,000 தானியங்கள் கொள்ளும். இப்படியாகக் கணக்கிட்டு, அரசர் தாம் இரண்டு விதங்களில் தோற்றதை அறிந்தார். ஆனால் அரசர் குறைந்தது ஒரு தடவை தோற்பதையாவது தவிர்த்திருக்கலாம். எப்படி?

கிழவனுக்கு அவன் வேண்டியதைக் கேட்டபோது அவனையே எண்ணி எடுத்துக் கொள்ளுமாறு சொல்லியிருந்தால் தப்பித்திருக்கலாம். ஏனெனில் ஒரு வினாடிக்கு ஓர் அரிசி வீதம் எண்ணியிருந்தால்கூட ஒரு நாளைக்கு 86,400 தடவைதான் எண்ண முடியும். பத்து நாட்களில் பத்து லட்சம் தானியங்களை எண்ணி விடலாம். இப்படியாக ஒரு கியூபிக் மீட்டர் தானியங்களை ஆறு மாதத்தில் எண்ணலாம். இப்படியே கிழவன் தன் ஆயுட்காலம் முழுவதும் எண்ணிக்கொண்டிருந்தாலும் அவ்வளவு தானியங்களையும் எண்ண முடியாது.

அனுப்பியது: வி. மகாலிங்கம்
ஆதாரம்: 'ஸயின்ஸ் டுடே'




- நேருஜியும் கணக்கு வாத்தியாரும்
- நாடாவின் நிறம் புரிந்தது!
- வாழ்க, வாழ்த்துத் தந்திகள்!

“வியாசர் மகிழ்ந்தார்” என்ற கட்டுரையில் என்னைப் பற்றிக் குறிப்பிடப்படவில்லை. நான் அடுத்த ஐந்து வருஷங்களாக முக்கிய பங்கு கொண்டு சிற்ப சாஸ்திர விஷயமாகப் பேசி வருகிறேன். ஆகமமும் சிற்ப சாஸ்திரமும் என்று பேசியபின் ஏழை சிற்பிகளிடமும், ஸ்தபதிகளிடமும் டெண்டர் டெபாஸிட் கோருவதைக் கூறி வருத்தம் தெரிவித்தேன். அதை சண்முகநாத ஸ்தபதி பேசியதாக எழுதியிருந்தீர்கள்!

சென்னை–1

30–9–66 கௌரிசங்கர ஸ்தபதி

‘பக்கவைப் பகுதி’யில் திரு பாஸ்கரத் தொண்டைமான் நேருஜிக்கு உப்புமாவைப் பற்றி ஆங்கில விளக்கம் கொடுத்தது பற்றி எழுதியிருக்கிறது. இந்த விளக்கத்தை ஒரு கணக்கு வாத்தியார், மிகக் கவனமாகக் கொடுத்தாராம் நேருஜிக்கு.

இது விஷயத்தைத் திரு தொண்டைமான் குறிப்பிட்டு, கணக்கு வாத்தியாரின் சமயோசித அறிவைப் பாராட்டி மகிழ்ந்திருக்கிறார்.

இன்னொருவரைப் பாராட்டுவதில் உள்ள ஆனந்தத்தை அனுபவித்துத் திளைத்தவர் தொ. மு. பா. அதை நாம் கெடுப்பானேன்?

சென்னை.

30–9-66 எஸ். வரதராஜன்

திரு டி. எஸ். கே. “பூதநாசில் விபத்து” என்ற கட்டுரையைக் கவர்ச்சிகரமாய் எழுதியிருக்கிறார். முக்கியமான விஷயங்கள் அடங்கிய கட்டுரை இது. இந்தக் காலத்தில் ரயில் இலாகாவையும், அதன் ஊழியர்களையும் குற்றம் சாட்டிப் பேசுகிறார்கள். இப்படிப்பட்ட கட்டுரைகள் வெளிவந்தால் உண்மை நிலைமைகளைப் புரிந்து கொண்டு பொதுமக்கள் ரயில்வே ஊழியர்களை அனுதாபத்துடன் அணுக முடியும்.

கட்னி,

3–10–66 வி. எஸ். ராமன்

எனது நண்பர் ஒருவர் 1965 டிசம்பர் மாதம் மதராஸ் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சை எழுதி, அதில் தேறி விட்டதாக 12 – 6 – 66 அன்று தெரிவிக்கப்பட்டார். அவர் சென்னை அரசாங்கக் கல்விப் பிரிவில் தட்டெழுத்தர் வேலையில் கூடிய சீக்கிரம் நியமிக்கப்படுவார் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது. பின்னர், பப்ளிக் சர்வீஸ் கமிஷன் காரியதரிசிக்கு 20–7–66 அன்று வேலைக்கான உத்தரவைக் கூடிய சீக்கிரம் அனுப்புமாறு ஒரு விண்ணப்பம் விடுத்தார். இதற்கு 20–8–66 தேதியிட்ட கடிதம் ஒன்று சென்னை அரசாங்க கல்விப் பிரிவு உதவிக் காரியதரிசியுடன் இந்த விஷயமாகத் தொடர்பு கொள்ளுமாறு எழுதப்பட்டு வந்தது. பொறுமையை இழக்காத என் நண்பர் மீண்டும் கல்விப் பிரிவு உதவிக் காரியதரிசிக்கு 22–9–66 அன்று இவ்விஷயம் குறித்துப் பதிவு செய்யப்பட்ட கடிதம் ஒன்று எழுதியிருக்கிறார். இன்று வரை இதற்கான பதில் ஏதும் காணோம்!

இதன் காரணம், ‘நாடாவின் நிறம் என்ன?’ என்ற கோமதி ஸ்வாமிநாதனின் கட்டுரைச் சித்திரத்தைப் படித்ததிலிருந்து எனக்கு நன்கு புரிகிறது.

நாகப்பட்டினம்

6–10–66 வை. இராமஸ்வாமி

‘ஒரு மாதத்துக்கு முன்னதாகவே’ என்ற பகுதி நகைச்சுவைக்காகவே எழுதப்பட்டிருப்பினும் சில உண்மைகள் அதில் பொதிந்திருக்கின்றன. மூன்று வாழ்த்து வாசகங்கள் மட்டுமே அவர் கண்களில் உறுத்தியிருக்கின்றன. ‘25’ என் கொண்ட வாசகம் ஒன்றும் விவாகங்களுக்கு அடிக்கலாம் என் பதைத் தந்திக் குமாஸ்தாவான நான் அறிவிக்கிறேன். இதன் வாசகம், “புதிய மணத் தம்பதிகளுக்கு எங்கள் ஆசிகளைத் தெரிவிக்கவும்.” எங்கள் என்ற பன்மை தொனிக்கும் இந்த வாழ்த்தை உபயோகிப்பவர் ஒருவராகவே இருப்பார். ‘புதிய’ என்ற வார்த்தை இருப்பதால் இரண்டாம்தரம் மணம் செய்து கொள்வோருக்கு இது பொருந்துமா ?

செங்கல்பட்டு

13–10–66 ஒரு தந்திக் குமாஸ்தா

சென்ற மாதம் ஒரு வாழ்த்துத் தந்தியை முன் கூட்டியே ஈரோட்டில் நடந்த என் நண்பரின் திருமணத்துக்கு அனுப்பி முதன் முறையாகத் தந்தி இலாகாவினரின் புது உதவியைப் பயன்படுத்த முற்பட்டேன்.

வாழ்த்துத் தந்தி முன் கூட்டியே கொடுக்கப்படுகிறது என்று அறிவித்தும் கூட, கொடுத்த அன்றே அதாவது கல்யாண தினத்துக்கு ஆறு நாட்கள் முன்னதாகவே மணமகளின் விலாசத்துக்கு அனுப்பப்பட்ட வித்தையை என் நண்பர் நேரில் சொல்லி நகைத்தார், அவர் சென்னை வந்த போது.

சென்னை-23

14-10-66 கிருஷ்ணன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 35 சதம்
தபால் செலவு தனி